இரண்டாம் பாகம்

# ஆண்டாள் பாவையும் அழகுத் தமிழும்

கவிஞர் அ.ம. உலகநாதன்



# ஆண்டாள் பாவையும் அழகுத் தமிழும்

இரண்டாம் பாகம் நவம்பர், 1989

கவிஞர் வி. மு. உலகநாதன்

வாசுகி பதிப்பகம்
19, தொட்டிக்கலைக் குமரப்ப முதலித் தெரு
சூளை, சென்னை-600 112



இந்நூல், திருப்பதி தேவஸ்தானத்தின்
நிதி உதவி பெற்று வெளியிடப்பெற்றது.

---

## பதிப்பு விளக்கம்


| | |
|---|---|
| தலைப்பு | ஆண்டாள் பாவையும் அழகுத் தமிழும் இரண்டாம் பாகம் |
| பொருள் | திருப்பாவையில் 16 முதல் 30 பாசுரங்களுக்கு விளக்கமும் ஒப்பாய்வும் |
| ஆசிரியர் | கவிஞர் வி. மு. உலகநாதன் |
| பதிப்பு | முதற்பதிப்பு |
| வெளியீடு | நவம்பர்—1989 |
| உரிமை | ஆசிரியருக்கே |
| தாள் | 11.6 K.G. ஒயிட் பிரிண்டிங் |
| நூலின் அளவு | 18 C.M. 12.5 C.M. |
| எழுத்து | 10 புள்ளி |
| பக்கங்கள் | 208 |
| படிகள் | 1000 |
| அச்சகம் | ஸ்ரீகோமதி அச்சகம்<br>திருவல்லிக்கேணி<br>சென்னை-5 |
| விலை | உருபா 20-00 |
| பதிப்பாளர் | வாசுகி பதிப்பகம்<br>19, தொட்டிக்கலைக் குமரப்ப முதலித் தெரு, சூளை, சென்னை-600 112 |

# முத்தர்
# "கன்னையா" அவர்களுக்கு
# அன்பனின் படையல்

மார்கழியில் போகியெனும் மாண்பார் திருநாளில்
பார்புரக்கும் மாயவனைப் பாங்குறவே போற்றிப்

பிருந்தா வனமென்னும் பேர்விழாதாம் செய்து
பெருமையுற்றார் "கன்னையா" பேராளர் கோதைப்

பிராட்டியார் பாசுரத்தைப் பித்தர்போல் பாடிக்
கரங்குவிக்கும் பண்பாளர் கண்ணன் கழல்போற்றி

வாழ்ந்தார் எனைக்கவர்ந்த மாமா எவர்மாட்டும்
தாழ்மையுடன் பேசுவார் தாமரையான் தாள்சேர்ந்த

முத்தர் இனிய முகத்தார் பிறர்போற்றும்
சித்தம் உடையார் சிறப்புடையார்க்(கு) என்படைப்பாம்

"ஆண்டாள்பா வையும் அழகுத் தமிழும்" ஒண்
மாண்புடைய நூலை மகிழ்ந்தன்பாய்க் காணிக்கை

ஆக்கினேன் என்னுடைய ஆன்ம உணர்வெனும்
நோக்கத்தைக் காட்டி நுவலுகின்றேன் நன்றியுடன்

போற்றி வணங்குகின்றேன் பூவண்ணன் பேர்பாடிச்
சாற்றி இசைத்தேன் தமிழ்!

## உள்ளுறை

# அணிந்துரை

## (பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார்)

மென்னடை அன்னம் பரந்து விளையாடும்
வில்லிபுத் தூர்உறை வான்தன்
பொன்னடி காண்பதோர் ஆசையி னால், என்
பொருகயற் கண்இணை துஞ்சா;
இன்அடி சிலொடு பால்அமுது ஊட்டி
எடுத்தஎன் கோலக் கிளியை
உன்னொடு தோழமை கொள்ளுவன் குயிலே;
உலகளந் தான்வரக் கூவாய்![1]

—ஆண்டாள்.

மக்கட் செல்வம் வாய்க்கப் பெறாத பெரியாழ்வாருக்கு இறைவன் கொடுத்த செல்வம் ஆண்டாள். குழந்தைப் பருவத்திலேயே ஞானம் கைவரப் பெற்றதனால் மணவாள மாமுனிகள் 'பிஞ்சாய்ப் பழுத்தாளை'[2] என்று புகழ்ந்துரைப்பர். இந்த ஞானப் பூங்கொடி அருளிச் செய்த பக்திப் பிரபந்தங்கள் இரண்டு. ஒன்று, திருப்பாவை; மற்றொன்று[3] நாச்சியார் திருமொழி. இவை இரண்டும் முத்திரைப் பிரபந்தங்களாகும். இவற்றுள் திருப்பாவை பற்றியே ஈண்டு நாம் கருதுவது. இப்பிரபந்தம் பற்றிப் பலர் பலவாறாகக் கூறினும், ஆன்ம அணியாகச் சேஷத்துவச் செல்வத்தையும், எம்பெருமான் முன் 'பதுமை' போன்று கிடக்கும் பாரதந்திரியப் பெட்பையும் குறிக்கின்றமையின் இந்நூல் 'திருப்பாவை' என்று பெயர் பெற்றதாகக் கொள்வது மிகச் சிறப்பாகும்.

---

1. நாச். திரு 3 : 5 (குயிற்பத்து)
2. உ. ர. மா. 24

முப்பது பாசுரங்கள் அடங்கிய இப்பக்திப் பனுவல் மூன்று பகுதியாக அமைந்தது. முதற்பகுதி, முதல் ஐந்து பாசுரங்களும் (1—5) பாயிரமாக அமைந்துள்ளன; இப் பகுதி நூலின் உயிர்நிலை; நூற்பொருளைத் தெளித்துக் காட்டும் ஆடிபோன்றது. இரண்டாம் பகுதி, ஆறு முதல் பதினைந்து முடிய பத்துப் பாசுரங்கள் (6—15) செல்வம், செயல், குணம் இவற்றில் பத்து வகைப்பட்ட ஆயர் சிறுமியர்களைஅஞ்ஞானத்துயிலிலிருந்துஞானவிழிப்பிற்குக் கொணர்வதாக அமைந்தது. மூன்றாம் பகுதி, ஆய மகளிரை எம்பெருமானின் கைங்கரியத்திற்குத் தகுதி யுடையவராகச் செய்தல் ஆகும். ஆகவே, இப்பிரபந்தம் அஞ்ஞானத்தில் ஆழ்ந்து கிடக்கும் ஆன்மாக்களுக்கு ஞானம் ஊட்டி இறையுடன் கலந்து இன்பம் துய்க்கச் செய் தலை விளக்குவதாகக் கொள்ளலாம். அன்றியும், 'ஓம்' என்னும் பிரணவம், வைணவ மந்திரங்களாகிய திருமந்திரம், துவயம், சரமசுலோகம் என்பவற்றைத் தன்னுள் கொண்டுள்ளதைப் போல் 'மார்கழித்திங்கள்' எனத் தொடங்கும் முதற் பாசுரம், மற்ற இருபத்தொன்பது பாசுரங்களின் பொருளையும் தன்னகத்தில் கொண் டுள்ளது. இந்த ஒரு பாசுரத்தைக் கொண்டே எல்லாப் பொருள்களையும் அறியலாம்.

மேலும், அர்த்த பஞ்சகத்தின் தத்துவங்கள் இப்பிரபந்தத்தில் பொதிந்திருப்பதைக் கண்டு மகிழலாம். முதல் ஐந்து பாடல்களில் இறைவன் இயல்பு புலனாகின்றது. ஆறு முதல் பதினைந்துவரை உள்ள பாசுரங்களில் ஆன்ம சொரூபம் விளக்கம் அடைகின்றது. இவற்றுள் பகவானை மறந்து, அவனையடைவதற்குச் செய்ய வேண்டிய முயற்சிகளையும் மறந்து கிடக்கும் ஆன்ம சொரூபமும் சீவர்கள் மாயையினால் பிரகிருதி நிஷ்டையில் உறங்கிக் கிடப்பதால் உபாய விரோதி சொரூபமும் தெரிவிக்கப் பெறுகின்றன. பதினாறு முதல் இருபது வரை உள்ள பாசுரங்களால் 'பகவத் சொரூப

மாகிய இரட்சகத்துவம்' உணர்த்தப் பெறுகின்றது. சம்சாரக்கடலில் மூழ்கித் தம்மை மறந்து கிடக்கும் சீவர்களை மறந்து, பகவான் தன்னை அடைந்த நித்திய முக்தர்களிடையே மயங்கியவனாய் உறங்கிக் கிடப்பதை உணர்ந்து அவனை எழுப்புவது உணர்த்தப் பெறுகின்றது.

'கையற்ற நிலையும் பிரபத்தியும்' இருபத்தொன்று முதல் இருபத்தைந்து வரையுள்ள பாசுரங்களால் உணர்த்தப் பெறுகின்றன. இருபத்தாறு முதல் முப்பது முடியவுள்ள பாசுரங்களால் மோட்ச பிராப்தி உணர்த்தப் பெறுகின்றது.

ஆண்டாள் பாவையும் அழகுத் தமிழும் (முதற் பகுதி) என்ற நூலில் திருப்பாவையின் முதல் பதினைந்து பாசுரங்கள் விளக்கம் பெற்றன. அந்நூலை முற்றும் நோக்கிய வாய்ப்பு அடியேனுக்கு இருந்தது. அதில் கூறியதுபோலவே திருப்பாவை கூட்டமாகச் சேவிக்க வேண்டும் என்ற கருத்தையே திரும்பவும் இங்கும் கூறு

நூலின் இரண்டாம் பகுதியாகிய இதில் பதினாறு முதல் முப்பது முடியவுள்ள பாசுரங்கள் முற்பகுதியைப் போலவே விளக்கம் அடைகின்றது. இந்தநூலும் 18—இயல்களாகவே நடைபெறுகின்றது. இதிலும் ஒவ்வொரு இயலும் கவியமுதனார் என்ற வைணவ சீலரின் பாடலால் தொடங்கப் பெற்றிருப்பது நூலுக்குப் பொலிவினைத் தருகின்றது. எல்லாக் கட்டுரைகளும் பல நல்ல கருத்துகளைத் தெளிவாக விளக்குகின்றன.

இந்த இரண்டாம் பகுதியிலும் பாசுரங்களிலுள்ள சில சொற்றொடர்களை எடுத்துக் கொண்டு திருவாய்மொழி (பக்:33), பரிபாடல் (பக்:35), ஐங்குறு நூறு (பக்:38), திருக்குறள் (பக் 38), நாலடியார் (பக்.48), கம்பராமாயணம் (பக்.47) கலித்தொகை (பக்.60), நற்றிணை (பக்.60), நெடுநல்வாடை (பக்.68) குறுந்தொகை (பக்.70) முதலிய நூல்களில்வரும் செய்திகளுடன்

ஒப்பிட்டுப் பார்ப்பதில் ஈடுபட்டிருப்பதைக் காணமுடி கின்றது. நூல் முழுவதும் இந்த ஒப்பாய்வுப் பாங்கிலேயே நடைபெறுகின்றது.

பொதுவாக நூலின் அமைப்பு, சிறப்பாகவே உள்ளது. இந்த நூல் பக்தியுணர்வைத்தூண்டுவதுடன் ஒப்பாய்விலும் ஈடுபடுகின்றது. ஆய்வில் ஈடுபடவேண்டுமானால் ஓயாமல் பன்னூல்களையும் கற்க வேண்டும்; திறனாயும் பாங்கை யும் வளர்த்துக் கொள்ள வேண்டும். இவற்றை இவர் பெற் றுள்ளார்.

இந்த நூலும் 'பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங் கொண்டல்', ஏழுமலையான் நிதி உதவியால் வெளி வருகின்றது. வந்திப் பார்க்கு வரந்தரும் வரதன்அல்லவா? அவன். பக்தி யுள்ளம் படைத்த என் அரிய நண்பர் கவிஞர் வி. மு. உலகநாதன் அவர்கட்கு நீண்டஆயுளையும் நீங்காத நிறைந்த செல்வத்தையும் மனவளத்தையும் நல்கவும்; மேலும் மேலும் பல பக்திப்பனுவல்களைப் படைக்கவும் படைத்தவற்றை வெளியிட நிதி உதவி வழங்கவும் வேங்கடம் மேயவனின் கழலிணைகளை நினைந்து வாழ்த்துகின்றேன். வாழ்க இந்நூல்! வளர்க இந்த ஆசிரியரின் தெய்வப்பணி!

என்றும் மறந்தறியேன் என் நெஞ்சத்தே வைத்து
நின்றும் இருந்தும் நெடுமாலை, —என்றும்
திரு இருந்த மார்பன் சிரீதரனுக்(கு)ஆளாய்
கரு இருந்த நாள்முதலா காப்பு.

—திரு மழிசையாழ்வார்

'வேங்கடம்'
AD-13 (பிளாட்.3354)
அண்ணா நகர்
சென்னை—600040
நவம்பர் 10, 1989

ந. சுப்புரெட்டியார்

3. நான் திரு. 92

# நூன்முகம்

இவ்வுலகத்தில் தோன்றியமாந்தர்கள் இனிது வாழ்வதற்கு, கனிந்த நெஞ்சமுடைய சான்றோர்கள் தனிச் சிறப்புக்குரிய வழியினைக் காட்டிச் சென்றார்கள். அவர்கள் காட்டிய அந்த நல்வாழ்வு—இன்ப வாழ்வாய் இல்லறத்தோடு பொருந்தி இருப்பதாகும். இல்லறத்தோடு பொருந்தாமல் இருப்பனவெல்லாம் இன்பம் தருவனவாயினும், துன்பத்துக்குரியன வாகும். அஃதன்றி அவ்வாழ்வு புகழை உடையனவல்ல என்பதை,

''அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்
புறத்த புகழும் இல.''

என்று பொய்யில் புலவர் புகல்வார். இவ்வாறு கூறும் வள்ளுவரின் அறவாழ்வில் உள்ளம் அழுந்தி வாழ,என்னை ஈன்று அன்புடன் வளர்த்து ஆளாக்கி நல்வழிப்படுத்திய அன்னை மங்கைத்தாயாருக்கும் எந்தை முனிசாமி என்பாருக்கும் நான் என்றும் நன்றியுடையேன் ஆவேன். அடியேன் பிறர் மதிக்கத் தகுந்த அளவில், பொருளால் அன்று, தெள்ளிய அறிவில், இறைமைப் பண்பில் மாறாமல் நிற்பதற்கும் அவர்கள் உணர்த்திய நல் வழியேயாகும்.

என் பெற்றோர்கள் செய்த தவப்பயனால் ஒளியனைய தெய்வீக அறிவை ஓரளவு என்னால் பெற முடிந்தது. அவர்கள் உணர்த்திய அறத்தாலும், என்தளரா முயற்சியாலும் பெற்ற அறிவுக் கண்கொண்டு, இறைமைப் பணியில் நிறைவை எய்த எண்ணினேன்.

இத்தகைய நித்திய அறிவில் தோய்ந்தயான், உலகமெல்லாம் இன்புற்றிருக்க எண்ணிய ஆண்டாள்

அன்னையார் அருளிய சங்கத் தமிழ் மாலையான திருப்பாவையில் காணும் முப்பது பாசுரங்களில் பொருந்தி யிருக்கின்ற அருட்சுவையை நுகர முடிந்தது.

திருப்புகழுடைய கோதையார் உலகம் உய்தல் பொருட்டு, பெருமை சான்ற திருப்பாவை யென்னும் அருமைப்பிரபந்தத்தை இயற்றியதால், உயர்ந்த புகழினை எய்தினார். இந்த அழியாத செந்தமிழ்ச் செல்வத்தைப் படைத்ததால்'' திருப்பாவைச் செல்வியார் எனப் பாராட்டப் பெற்றார்.

''செல்வமென்றால்'' பொருட் செல்வம் என்றும் அருட்செல்வமென்றும் கூறுவர். இச்செல்வங்கள் இரண்டி னுள்ளும் பொருட்செல்வம் அழியும் தன்மையது. இதைப் பற்றி.

''குன்றத்தனை இரு நிதியைப் படைத்தோர்
அன்றைப் பகலே அழியினும் அழிவர்''

என்று நறுந்தொகை நவில்கின்றது. எனினும், திருக்குறள் இந்த இரண்டு செல்வங்களைப் பற்றியும்,

''அருள் இல்லார்க் கவ்வுலகம் இல்லை
பொருள் இல்லர்க்
கிவ்வுலகம் இல்லாகி யாங்கு''

என்று கூறகின்றது. இவ்வுலகில் வாழ்வோர்க்குப் பொருட் செல்வம் தேவையாயினும், அதுவே நம்மை வாழ்விப்ப தென்று, எண்ணி, போற்றி, பெருக்கிக் காத்துவருது சிறப்பாகாது; ஏன் எனில் அஃது கை மாறுவது; அழிந்து படுவது; நம்மை அழிக்கவும் வல்லது; ஆட்கொல்லியாவது; அது தீயோரிடமும் சேர்ந்திருப்பது. ஆனால் அருட் செல்வம், இத்தகையதன்று; என்றும் அழியாதது; நல்லோர் மாட்டு ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி நிற்பது; இது தீயோரைக் கண்டு தூரவிலகி நிற்பது. இவற்றைப் பற்றி

''அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள''

என்று பொய்யில் புலவர் இயம்புவார். அருட்செல்வம் செல்வத்துள் எல்லாம் தலைமை சான்றது என்று கூறிய அவர், பொருட்செல்வம் பூரியார் என்கின்ற இழிந்தவரிடமும் இருக்கும் என்று தெரிவித்தார். இதனால் அருட்செல்வம் இழிந்தவரிடம் இருத்தல் அரிது என நாம் அறிய முடிகிறது. உயர்ந்தவரிடமே இவ்வருட்செல்வம் செவ்வியுடன் ஒன்றி நிற்பது.

திருவள்ளுவப் பெருந்தகை செப்பியதிறத்தால், தெள்ளியராக்கும் அருட்செல்வம் இலங்குகின்ற இடத்தை அறிகின்றோம்! இது சேர்ந்திலங்கும் இனிய அருளாளரைப் பற்றியும் தெரிகின்றோம். ஒழிவில் காலமெல்லாம் அழியாமல் இருக்கும் அருட்செல்வம் பழியற்ற பண்புடையாரிடத்தில் பயன் அருளி நிற்பது என அறிகின்றோம். இத்தகைய அழிவில்லா அருட்செல்வத்தை விழைந்த கோதைப்பிராட்டியார்,

''எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தனோடு
உற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்''

என்று திருப்பாவையில் சிறக்கப்பாடுவார். என்றும் அழியாத அருட்செல்வம் அருளாளன் என்பதால் மேற்குறித்த அடிகளில் ஆராஅமுதனைக்குறித்து, அவனோடு எந்நாளும் சேர்ந்தின்புற்றிருக்க இசைத்தார். யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்பதற்கேற்ப, தாம் பெற்ற இன்பத்தை மற்றவரையும் அனுபவிக்கச் செய்து, அதனால் ஏற்படும் மகிழ்ச்சியினால் திளைத்து, ஆழ்ந்து நின்றார் கோதை.

இந்நிலையை நாமறிந்திட நம்மை அவர் எங்கே அழைத்துச் செல்கின்றார்? ஒருமை உணர்வை உணர்த்துகின்ற அவர்படைத்தருளிய திருப்பாவை என்னும் அருமை

நூலாகிய நல்லுலகத்திற்கே நம்மை அழைத்துச் செல்கின்றார். விரும்பி அவர் அருளிய திருப்பாவை என்பது, ஓர் உன்னதமான உயர்ந்த உலகம், இவ்வுலகம் எதனால் இயற்றப்பட்டது? சங்கத்தமிழால் இங்கிதம் தோன்ற சமைக்கப் பெற்றது.

இந்தச் செந்தமிழ் உலகத்தில் நேயம் கொண்ட தூய மக்களும், அம்மக்களுடைய உடம்பைத்தக்க தென ஆக்கும் மழையும், மக்களுடைய மனத்தை மாண்புறச் செய்யும் இறைப்பண்பும் அற்புதமாக அமைத்துக் காட்டப் பெற்றுள்ளது. அறிஞர் பெருமக்கள் இவ்வுலகத்தில் நுழைந்து, நுழைந்துவிழைவுடன் இன்பத்தைத் துய்க்க இயலும்.

பிற உலகத்தைப் போன்று இஃது அழிவதன்று. கழிப்பேருவகை தந்து நிலைத்து நிற்பது. எம்பெருமானால் ஏற்படுத்தப் பெற்ற நிலவுகம் எத்துணைக்காலம் நிற்குமோ? அத்துணைக்காலம் சத்துடைய திருப்பாவை உலகம் நிலைத்து நிற்க வல்லது.

சிலந்தி கூட ஓர் உலகத்தை உண்டாக்கிக் கொள்கிறது. அதன்உலகம்தன்னலத்திற்காக அமைக்கப் பெற்றது; அஃது அழிந்து ஒழிவது. ஆனால், அருள் உணர்வால் மாண்புற்ற ஆண்டாள் படைத்தருளிய திருப்பாவை உலகம் பிறர் நலத்திற்காகவே படைக்கப் பெற்றது. ஆம் இவ்வுலகம் எல்லார்க்கும் எல்லையற்ற இன்பத்தை ஊட்டவல்லது; உய்வினை அருளவல்லது.

''உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே''

என்று கூறியவாறு உயர்ந்த பண்பாளர்களைக் கொண்டிலங்கவே, திருப்பாவை உலகத்தை உருவாக்கினார்; ஆண்டாள் அன்னையார் படைத்த உலகத்தில் அவர் உணர்த்தும் கருத்துக்குச் செவிசாய்த்து, அவரோடு கலந்து செயலாற்றுபவர்கள், எம்பெருமானாகிய அழியாச் செல்வத்தைக் காணவிழைந்து நிற்பவர்களாய், ஆன்மீக அறிவை இயல்பாகவே பெற்றவர்களாய் இருந்

தார்கள். அவர்கள் தூய ஆயர்குல மங்கைமார்கள் ஆவார்கள்; அவர்கள் உள்ளத்தால் உயர்ந்தவர்களாய், தெள்ளறிவாளர்களாய்த் திகழ்ந்தார்கள். சத்திய சீல உத்தமியர்களாயிருந்த இத்தகையவர்களை உயர்ந்தவர்கள் என்று கூறுவதை மறுப்பாருண்டோ? தடுத்துரைப்பாருண்டோ? இவர்கள் அருள் நெறியில் ஈடும் எடுப்பு மற்றவர்களாக விளங்கினார்கள்.

திருப்பாவை உலகத்தில் அருளாளன் கண்ணனைத் தவிர வேறு தெய்வங்கள் தலை காட்டிலர்! நம்செல்வியார் பெற்ற சிறந்த மனமும், பெற்ற மேய்த்துண்ணும் கண்ணனோடு ஒன்றிக் கலந்து விட்டமையை நாம் அறிகின்றோம். இத்தகையவரிடம் மற்றவை தோன்றிட இடமேது? இத்துணைச் சிறப்பு வாய்ந்தவரே என்றும் நல்லின்பம் நல்கும் நூல் உலகத்தைப் படைத்ததாலன்றோ! இவர் திருப்பாவைச் செல்வியார் என்னும் பொன்றாப் புகழ்ப் பெயரைப் பெற்றார்.

மாண்புடையரான இவர், தம் பெயரை நூலில் சுட்டாமல் விட்டதற்கு, தற்புகழ்ச்சியாகுமெனத் தவிர்த்தார். என்றாலும் இவர் ஏற்றத்தை அறிந்த உய்யக் கொண்டார்.

......அரங்கற்கு,
'பன்னு திருப்பாவை பல்பதியம்—இன்னிசையால்
பாடிக் கொடுத்தார் நற்பாமாலை'

என்று பாடிப் புகழ்ந்தார். இச்செல்வியார் உலக உயிர்களையும் உலகளந்தானையும் தம் பக்தித் திறத்தால் ஆண்டதால் ஆண்டாள் எனப் பாராட்டப் பெற்றார். இவர் உயிர்களாகிய மக்களை எங்ஙனம் ஆண்டார்? எம்பெருமானின் இயல்புகளையும் அவனின் உத்தம குணங்களையும் இயற்கையோடும் உலகப் போக்கோடும் கலந்து, கலந்து உயர்ந்த உயிர்களான மக்களுக்கு ஊட்டினார்.

இவற்றைச் செவியார நுகர்ந்த ஆயர்குல ஆரணங்குகள் திரள் திரளராக இவருடன் இயைந்து நின்று அனுபவித்தார்கள்; இவ்வாறு கூடிநின்றவர்களைக் கோடியின்பம் தருகின்ற கோவிந்தனிடம் ஒப்புவிக்கின்றார் கோதை, ஒப்புவிக்கப்பட்ட இவர்கள், அப்பனான அருளாளனிடம் பயனைப் பெற்று மகிழ்ந்தார்கள் என்ற விவரத்தையெல்லாம் திருப்பாவையில் இலங்கக் காணலாம். இவ்வாறு உயிர்களை ஆண்ட இவர், உலகளந்தானை எவ்வாறு ஆண்டார்? எம்பெருமான் பல பிறவிகளை எடுத்து, மக்களைத் திருத்திப் பணி கொள்ள எண்ணுகின்றான்.

அப்படி எண்ணியவன் அருளை வழங்குகின்றான். அந்த அருளைக் குறையுடைய மக்கள் அனுபவிக்க இயலாமல் இடர்ப்பட்டார்கள். குறையுடைய மக்களைக் கண்டு சினந்து நிற்கும் கோவிந்தனை, ஆவலுடன் அணுகி, இன்ப உரையால் வயப்படுத்தி, குறையுடைய உயிர்களான மக்கள், நிறைவினையெய்திடத் தூண்டி, அருள் சுரக்க வேண்டுகின்றார் ஆண்டாள்; இவர் உரைக்கு இசைந்து அருளினைச் சொரிகின்றான் ஆராவமுதன்.

இவ்வாறு உதவி செய்கின்ற போக்கால் செவ்வியுடைய செங்கண்மாலை ஆண்டு கொண்டதோடு, இன்னமுதன் தந்த நன்மையினை மக்கள் பெற்றிட வைத்து, இன்பமுறச் செய்து அவர்களைத் தம் அன்பினால் ஆண்டதால், ஆண்டாள் என்னும் மாண்புடைய காரணப் பெயர் பெற்றுப் பூரண நிலவெனப் பொலிந்து நின்றார். இத்தகைய விவரத்தையெல்லாம் சித்திரித்துத்திருப்பாவையில் தெரியக் காட்டியுள்ளார்.

பொங்கி வரும் அருள் உணர்ச்சியை எல்லாம் இங்கிதமாய்ச் சங்கத் தமிழ் மாலையாம் திருப்பாவையில் படைத்தருளினார்.

இப்படிப் படைத்த ஒப்பில்லாத் திருப்பாவையை உலக நலங்கருதியும், உயர்வு கருதியும் படைத்தார். இந்நூலின் பெற்றியினை உணர்ந்த அறிஞர் பெருமக்கள் சிறப்புற உரைவிளக்கம் தந்து, விழுமிய நிலையை எய்தி ஆண்டாளையும் அருமைத் திருப்பாவையையும் பெருமை செய்துள்ளார்கள். மாட்சிமை பெற்ற இப்பிரபந்தத்தின் பால் ஆட்பட்ட அடியேனும் சங்கத்தமிழாம் முப்பது பாசுரங்களுக்கும் விளக்கமும் சங்க இலக்கியக் கருத்து களைக் கொண்டு ஒப்பாய்வும் செய்து— ''ஆண்டாள் பாவையும் அழகுத் தமிழும்'' என்னும் இந்நூலை இயற்றினேன்.

ஆண்டாள் தம் திருப்பாவையைச் சங்கத் தமிழ் மாலை என்று கூறியிருத்தலால், அடியேன் திருப்பாவையைச் சங்கத்தமிழ் எனக் கருதி, சங்க நூற்களில் திருப்பாவைக்கு ஒப்பாக வருகின்ற செய்திகளை யெல்லாம் திரட்டி, மேற்கோள் காட்டி இந்நூலையியற்றி னேன். இந்நோக்கத்தில் இதற்குமுன் எவரும் நூல் இயற்றி வழங்காமையால் அடியேன் இயற்றத் துணிந்தேன். சென்றாண்டு 1- முதல் 15- பாசுரங்கள் வரை விளக்கமும் ஒப்பாய்வும் செய்து முதல்பாகமாக, 18 தலைப்புகளில் வெளியிட்டேன், இதைத் தொலைக்காட்சி, வானொலி' பத்திரிகைகள் எல்லாம் மிகச் சிறப்பாகப் பெருமை செய்தன; அறிஞர் உலகமும் புகழ்ந்து பாராட்டியது. இவ் வாண்டு 16-முதல் 30 வரையுள்ள மற்ற பாசுரங்களுக்கும் விளக்கமும் ஒப்பாய்வும் செய்து 18 தலைப்புகளில் இரண்டாம் பாகமாக வெளியிடுகின்றேன். இவற்றுள் 17-ஆம் இயலில் ஆண்டாள் அன்னையார் அருளிய நாய்ச்சியார் திருமொழி குறித்து, ''ஆய்ச்சியாய் மாறிய ஆண்டாள்'' என்ற தலைப்பில் இயற்றியிருக்கின்றேன். இவற்றையெல்லாம் நூலைப் பயில்வோர் அறிந்து கொள்ள இயலும், எனவே, முதல்பாகத்தை வரவேற்றதைப் போன்று இந்த இரண்டாம் பாகத்தையும்

வரவேற்பார்கள் என எதிர்பார்க்கின்றேன். இந்நூல் வெளிவருவதற்கு, திருப்பதி தேவஸ்தானத்தைச் சார்ந்த அன்பர்கள், பொருள் உதவி செய்துள்ளார்கள். அவர்களையும், இப்பொருள் உதவியை வழங்கிடத் தூண்டிய திருவேங்கடமுடையானையும் மன, மொழி, மெய்களால் வணங்குகின்றேன். இந்நூலுக்குச்சிறப்பாக அருமையான அணிந்துரையினை வழங்கிய பேராசிரியர், டாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்களுக்கு என்றும் கடப்பாடுடையேன் ஆவேன். 80க்கு மேற்பட்ட சிறந்த நூல்களைப் படைத்துப் பெருமையுற்றுப் பிறங்கும் அவர்கள் பல்லாண்டு வாழ, வல்லான் எனக் கூறும் கண்ண பெருமானை இறைஞ்சுகின்றேன்.

இந்நூலை அழகுற உரிய காலத்தில் செம்மையாக அச்சிட்டு வழங்கிய, கோமதி அச்சகத்தாருக்கு அகங் கனிந்து நன்றியினை நவில்கின்றேன். இந்நூலின் கையெழுத்துப்படிகளைப் பார்த்து, ஆர்வத்தால் எனைப் போற்றி ஊக்குவித்த உயர்ந்த சான்றோர், திருநாடலங் கரித்த புலவர் கா. பெ. ஞானசம்பந்தம் அவர்களை என்றும் நன்றியுடன் போற்றி நிற்பேன். ஆண்டுதோறும் மார்கழி இறுதி நாளில் வரும் போகித் திருநாளின்போது, கோதை உள்ளம் விழைந்து கோவிந்தனைப் பிருந்தா வனத்தில் அடைந்த அந்தப் பிருந்தாவன விழாவினை நடத்தி உளம்பூரித்து வந்த என் மாமா முத்தரான 'கன்னையா' அவர்களுக்கு இந்நூலைக் காணிக்கையாக்கி வணங்கி மகிழ்கின்றேன். இந்நூலை எழுதுதற்கு விழுமிய அருளியல் அறிவை வழங்கிய கண்ணபெருமானின் திருவடிகளை இருகைக் கூப்பி, தலையார வணங்கு கின்றேன்.

**அன்பன் வி. மு. உலகநாதன்**

# பிஞ்சிலே பழுத்த பெண் பிள்ளை!

*தூயமலர்க் காவில் துளபச் செடியருகில்*
*சேயாய்க் கிடந்த திருமகளே—வாய்மைப்*
*பெரியாழ்வார் கண்டெடுத்த பெண்பிள்ளை கோதை*
*விரித்த திருப்பாவை வித்து!*

—கவியமுதனார்.

''பெரியாழ்வார் அமைத்த பூந்தோட்டத்தில் துளசிச் செடியின் அருகில் கண்டெடுக்கப் பெற்றவர் கோதை; இவர் திருமகளின் அவதாரமாகும். இவர் அருளிய திருப்பாவை எல்லாத் தெய்வீக நூல்களுக்கும் வித்தாகும்; சத்துப் பொருளான எம்பெருமானைக் காட்டும் கண்ணாடியுமாகும்'' என்று கவியமுதனார் உளம் மகிழ்ந்து பாராட்டுகின்றார்.

தமக்குக் கிட்டப் பெற்ற கோதைப் பிராட்டியைக் கண்ணாக மதித்து இறை ஞானத்தைப் போதித்து வந்தார் விட்ணுசித்தர். தந்தை உணர்த்தியபடி வேத முதல்வனைக் கீதம் பாடி இசைத்தார்.

கனவிலும் நனவிலும் வனப்புடைய அவனை வழிபட்டு வந்தார். அவனைத் தவிர உவப் பூட்டும் பொருள் வேறு இல்லையென்று மன மாரப் போற்றி வந்தார்.

கோதை சூடிக் கொடுத்த பூமாலையையே எம் பெருமான் ஏற்றான். இப்படிப் பூமாலையை ஏற்ற

இன்னமுதனுக்கு மனம் விரும்பும் வகையில் 'திருப்பாவை, யாகிய தமிழ்ப்பாமாலையைப் பாடிச் சூட்டினார். தம் உள்ளத்திற்கு மகிழ்வூட்டும் வகையில் படைத்த அத்தமிழ் மாலை அரங்கன் மனம் உகக்கும் வகையில், உலகமக்கள் விரும்பும் வகையில் படைத்தருளினார் என்றால் அது மிகையாகாது.

ஞாலமுழுதும் தன் கோலம் காட்டி நிற்கும் மாமாயனைப் பலர் பாடிப் பெருமை செய்தனர். அப்படிப்பாடியவர்களைக் காட்டிலும் மிகப் பெருமை யாகப் பாடியவர் கோதைப் பிராட்டியார் ஆவார். திருப்பாவையில் அவன் அருளும் தன்மையைப் பல கோணங் களிலே படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

என்றும் இன்பம் பயக்கும் வகையில் எல்லாரும் ஏற்கும் வகையில் இதைப் படைத்தருளினார். பாடிப் பரவும் அன்பர் நாவில் தேனாகத் தித்திக்கவும் பத்தி நலம் சேர்க்கவும் படைத்தருளினார். ஆயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன்னே செய்தருளிய இத்திருப்பாவை, இன்றைக்கும் பத்திப்பனுவலின் தன்மையில் நிலைத்து, மாறாத பேரின்பத்தை வாரி வழங்கிவருகின்றது. அது பெற்றிலங்கும் அற்புதச் சிறப்பையும் அதற்கொப்பாக இன்னொன்றையும் எடுத்துக்காட்டவியலாத அளவில் உயர்ந்துள்ள தன்மையையும் அறிந்து இன்புறத் தக்கதாகும். 'பிள்ளைத் தமிழ்' பாடியதில் முதல்வராகவும் கர்த்தாவாகவும்விளங்கிய தம் தந்தையார் விட்ணுசித்தரே மிக விரும்பிப்போற்றும் வகையில் கோதை பாவையைக் கொஞ்சும்தமிழில் அழகொழுகப் பாடி யருளினார்.

ஆம் ஈடும் எடுப்பும் இல்லாத வகையில் நீடுயர்ந்து நிற்கும் மலைபோல் கொச்சகக் கலிப்பாவால் அருளினார். இது, மனித சமுதாயத்தின் 'பவம்' அறுக்கும் 'மருந்து' என்று சொல்லும் வகையிலும், பரம்பொருளைப் பரவும்

அடியாருக்கு வழங்கிய 'விருந்து' என்று விளம்பும் வகையிலும் பாடப்பெற்றுள்ளதாகும்.

மண் மகளின் மடியில் அவதரித்த கோதை, எம் பெருமான் திருவடிகளில் திருப்பாவை என்னும் பாமாலையைச் சூட்டிமகிழ்ந்தார். ஆழ்வார்களையெல்லாம் விஞ்சி நிற்கும் வகையில் தம் செய்யுளை இசைத்தார். இவ்வாறு செவ்வி நிலை விளங்கத் தேமதுரத் தமிழிசைத்த இவரைப் பூமிப் பிராட்டியாரின் அவதாரமாகப் புகழ்ந்த பெரியாழ்வார், விரிந்துள்ள இந்த வியனுலகம் பயன் எய்தவே வந்துதித்தார் எனத் தம் வாயாரப் புகழ்ந்தார். இவர் எண்ணிய கருத்தை ஏற்றம் பெறவைக்கும் அளவில் கோதை தம் திண்ணிய மன உணர்வு கொண்டு கண்ணனே அனைத்துமென்று கருத்துரைத்தார்.

இப்படி ஒப்பின்றித் திகழ்ந்த கோதையார் தம் உடம்பில் பொலிவும் உள்ளத்தில் தெளிவும் கொண்டு திகழ்ந்தார். அறிவின் விளக்கமாக நின்று அழகுத் தமிழெடுத்து அரங்கநாதனைப் பரவிப் பாடினார். 'மண்ணுலகத்தின் மாட்சி ஒழுக்கங்களைப் போற்றுவதாலும், வீடெனும் விண்ணுலகத்தின் மாட்சி அரங்கநாயகனைப் பாடுவதாலும் கிட்டும்' என்று திட்பமாகத் தெளிவித்தார்.

வானத்திலுள்ள கதிரவன் தன் ஒளியைத் தந்து மண்ணகமக்களைச் செயற்படுத்தி வாழ்விப்பதைப் போன்று, அம்மக்களின் மனங்களில் உள்ள இருளை நீக்கி ஒளியைத் தந்து அருளாளனை அடைய திருப்பாவையென்னும் அருள்விளக்கை ஏற்றிவைத்தார் ஆண்டாள்.

''வித்தாகி இந்த விரிந்த மரப் பேருலகை
மெத்த இயக்கிவரும் விண்முதன்—சத்தாகிச்
சித்தாம் உயிர்கள் சிறந்திலங்கச் செய்விக்கும்
அத்தனடி நிற்போம் அறிந்து!''

என்றார் கவியமுதனார். சத்தான எம்பெருமான் சித்தாகிய உயிர்களைக் காப்பவன் என்று இவ் வெண்பாவால் குறித்தார். இப்படி எம்பெருமானின் சிறப்பியல்புகளைப் படம்பிடித்துக் காட்டவே வேட்கையுடன் பாவைப் பாசுரங்களை ஆவலுடன் இசைத்தார் கோதைப் பிராட்டி.

இவர் பெற்ற இனிய பெயரான 'கோதை' என்பதற்கு மணம் மிகுந்த மாலை என்றும் தேனினும் இனிய சொல் என்றும் இயம்புவர். இந்த நந்தமிழ்ச் சொல்லைக் ''கோதா'' என்று விளித்தால் இருசொல்லாகப் பிரிந்து ஒவ்வொன்றும் ஓரெழுத்து ஒரு மொழியாகிக் ''கோ'' என்பதைத் தெய்வம், என்றும் 'தா' என்பதை அருளுதல் என்றும் பொருள் கூறுவர். மேலும் இவற்றை வேறுவகையாகப் பிரித்துக் ''கோ'' என்றால் பூமி என்றும் ''தா'' என்றால் தாய் என்றும் பெயர்களாகக் கூறலாம். பின்னே சொன்ன இந்த இருமொழியையும் இணைத்தால் 'பூமித்தாய்' என்று ஒரே பெயராகிக் கோதைப் பிராட்டியாரின் தோற்றத்தையும் அவர் புகழினையும் வெளிப்படுத்தி நிற்கக் காணலாம்.

இவ்வாறு சிறந்த பெயர்பூண்டு புகழோடு திகழ்ந்த அவர் பின்னாளில் 'சூடிக் கொடுத்த சுடர் கொடியாகவும்' 'பாடிக் கொடுத்த பாவையாகவும்' பெருமை கண்டார். இளமையிலேயே அறிவு ஒளி வீசி நின்ற இவரையும் இவர் அருளிச் செயலினையும் நன்கறிந்து மணவாள மாமுனிகள்,

''அஞ்சு குடிக் கொரு சந்ததியாய் ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்கும் தன்மையளாய்—
பிஞ்சாய்ப்
பழுத்தாளை ஆண்டாளைப் பத்தியுடன் நாளும்
வழுத்தாய் மனமே மகிழ்ந்து!'',

என்று தம் உளமாரப் பாடித் தெரிவிக்கின்றார். இதை உபதேச இரத்தின மாலையில் ஒளிவீசும் மாணிக்கம் போன்று அமைத்துத் தெரிவிக்கின்றார். இந்த வெண்பாவில் 'அஞ்சு குடி' என்றது ஆண்டாள் உதித்த பெருமை வாய்ந்த குடியினை இயம்புகின்றார். அக்குடியின் சந்ததியாகத் தோன்றியவர், தமிழறிவில் பேராற்றலும், பத்தியில் மிக்காரும் இன்றி விளங்கினார் என்று பாராட்டுகின்றார். ஆழ்வார்களின் பத்தியைக் காட்டிலும் ஆண்டாளின் பத்தி மிகச் சத்தி வாய்ந்தது என்பதைத் தெரிவிக்கவே ஆழ்வார்கள் தம் செயலை விஞ்சி நிற்கும் தன்மையளாய் என்றும் கூறுகின்றார். பிள்ளைப் பருவத்திலேயே கொள்ளையின்பம் நல்கும் தமிழில் பாசுரங்களை இசைத்துத் தம்மைப்புகழ்வானில் ஒளிரச்செய்த கோதைப் பிராட்டியாரின் மாட்சிமையை உணர்ந்த மணவாளமா முனிகள் தம் மனத்திற்குக்கூறுகின்றார். இவ்வாறு தம் மனத்துக்குக்கூறிய அவர் இப்பேருலகில் வதிகின்ற மக்களின் மனங்களும் அறிய உணர்த்துகின்றார்.

வயதில் முதிர்ந்திருப்பவர்கள் கண்ணபிரானின் பத்தியில் ஈடுபாடு கொண்டிருந்தாலும் கோதைப் பிராட்டியாரின் பத்தியின் முதிர்ச்சியைப் பெறாததனால் அவர்களைப் பழுத்த பத்தி நெறியாளர்கள் என்று கூறாமல் விடுத்த அவர் கோதையின் பத்தியினைமெச்சிப் ''பிஞ்சாய்ப் பழுத்தாளை'' என்று மிக உயர்த்திக் கூறுகின்றார்.

இவர் தம் அருளிச்செயல் மகிழம் பூ போன்று இனிய வாசமுடையது. பிறவாமையை அளிக்கின்ற தேவாமுதம் போன்றது. செம்மை சான்ற ஆண்டாள் எனும் பிராட்டியின் பாசுரங்கள் இம்மைக்கும் மறுமைக்கும் நல்விருந்தாகும்.

இந்தவளமான பாசுரங்களை இளமையிலேயே அருள் நலந்தோன்றப்பாடியதால் இவரைப் 'பிஞ்சாய்ப்

பழுத்தாளை' என்று சிறப்பித்தது மிகப் பொருத்த முடையதே. மரத்தில் தோன்றும் போது வெம்பிவிழும் பிஞ்சைப் போன்றில்லாமல் கற்பகத் தருவில் தோன்றும் போதே பழமாகக் கனிந்து காட்சி அளிப்பதைப் போலவும் துளசி தோன்றும் போதே மணம் வீசிக் கொண்டு தோன்று வதைப் போலவும் கோதை இளமையிலேயே இறைவன் அருளிய பத்திப் பழமாகத் தோன்றி மிளிர்ந்தார்.

''இளமையிற் கல்வி சிலையில் எழுத்து'' என்று கூறும் முதுமொழிக் கொப்ப, தந்தையார் இளமையில் ஓதுவித்த இறைமைக்கல்வியில் ஆழங்கால் பட்டு ஆற்றலுடன் மிளிர்ந்ததை அறிந்தே மணவாளமா முனிகள் 'பிஞ்சாய்ப் பழுத்தாள்' என்று மனம் விழைந்து பாடியிருத்தல் வேண்டும்.

கண்ணபெருமானுக்கு வாழ்த்துப் பாப் பாடியதால் தம் நெஞ்சம் கனிந்து 'பல்லாண்டு பல்லாண்டு' என்று அவனைப் பரவசங் கொண்டு பாடியதால்—பெரியாழ்வார் என்னும் பட்டத்தை விட்ணுசித்தர் பெற்றார். இத்தகையவர் தமக்குப் பிறகு, கண்ணபிரானுக்குத் தொண்டு செய்ய ஒருவாரிசு இல்லையே என்று ஏங்கி இருத்தல் வேண்டும். அவர்தம் ஏக்கத்தைப் போக்கவே எம்பெருமானே கோதையாரை அருளியிருக்கவேண்டும். எனக்கருதியே மணவாளமா முனிகள் ''அஞ்சு குடிக்கொரு சந்ததி'' என்ற தொடரின்மூலம் தெரிவித்தல் காணலாம்.

'தாயாக இருந்து தாரணியைப்புரக்கும் தாமோதரனை அவன் செய்யும் அருள் தன்மையினை அறிந்திருந்த ஆண்டாள் திருப்பாவையில் ஆறாம் பாசுரமான 'புள்ளும் சிலம்பினகாண்' என்னும் பாசுரத்தில் ஐந்தாம் அடியில்,

''வெள்ளத் தரவில் துயில் அமர்ந்தவித்தினை'' என்று பாடித்திருப்பாற் கடலின் இடையே துயில் கொண்டிருக்கும் அருளாளனே அவன் எடுத்த அவதாரங்களுக் கெல்லாம் அடிக்கிழங்கு என்று சொல்லும் வகையில்

வித்தாக உள்ளான் என்று விளக்கி எம் பெருமானின் பெற்றியினை அற்புதமாகக் கூறினார்.

உழவர்கள் விதைகளை நீரில் சேர்த்து முளை எழச் செய்வித்து, நிலத்தில் விதைத்து விளைச்சலைப் பெருக்குதல் போன்று, உலகங்களுக்கெல்லாம் வித்தான பரம்பொருளே வற்றாத பெருங்கடலான நீரின் நடுவில் கிடந்து உயிர்களைத் தோற்றுவித்து அவ்வுயிர்கள் வாழ அருள் புரிந்து வருகின்றான் என்ற விவரத்தை உள்ளுறைப் பொருளாக அமைத்து நாம் அறிந்துகொள்ள காட்டி யுள்ளார். இந்த உண்மைத் தன்மையினை மெய்ஞ்ஞான உணர்வு கொண்டு விஞ்ஞானியரும் வியக்கும் வண்ணம் கூறிய கோதையாரின் திறன் அருமைப்பாடுடையதாகும்.

இத்தகைய திறனும் தெளிவும் கொண்ட ஆண்டாளை ''ஆழ்வார்கள் தம் செயலை விஞ்சி நிற்கும் தன்மை யளாய்'' என்ற தொடரால் சுட்டிக்காட்டியுள்ளார். அந்தணர்க் குலப் பெண்ணான அவர் ஆயர்குலப் பெண்ணாகிய பாவனையால் ஏற்றமருளும்திருப்பாவையை நறுமணம் வீசும் பாவையாக்கி நற்றமிழால் அருளினார். முப்பதுபாசுரங்களும் பாதகங்களை விரைந்து ஒட்டி இறைவன் வேட்கையில் ஈடுபடுத்தும்; விளக்காகி அவனின் அழகிய திருவடியை மகிழ்வுறக் காட்டும்; அவை வேதமனைத்திற்கும் வித்தாகும். அரங்களைப் பற்றிடப் போதித்துச் சாதனை காணச்செய்யும், ஆம் அவை பாடு வோர் நெஞ்சில் உவப்பைச் சேர்த்துச்சுவையூட்டிநிற்கும். பேரானந்தமென்னும் பிறவா வீட்டுலகை வழங்கும்.

உலகியல் பொருள் நலத்தைக் காட்டுவிக்கும் நிலைக் கண்ணாடியாகும். இந்த இனிய செந்தமிழ்ப்பனுவல்களை அறியாமலும் அறிந்து பாடமலும் இருப்பவர்களை இந்தப் பூமியென்னும் வையம் தாங்குதல் மிகத்தவறாகும்; அந்த நந்தமிழ்ப்பாசுரங்களைப் பாடாதவர்கள் எல்லாம் பொல்லாத வம்பர்களே ஆவார்; அவர்களைத் தாங்கும் இந்தப் பூமியும் வம்புக்குரியதே ஆகும் என்று

''பாதகங்கள் தீர்க்கும் பரமன் அடிகாட்டும்
வேதம் அனைத்துக்கும் வித்தாகும்—கோதைதமிழ்
ஐயைந்தும் ஐந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பதூஉம் வம்பு?'

என்று வேதப் பிரான்பட்டர் பாடுகின்றார். இவர்தம் மனத்தில் தோன்றிய கருத்தைத்திட்பமாகத் தெரிவிக்கின்றார். நிதம் ஓடி வேதம் படிக்கும் மனமுடைய அன்பர்களை நோக்கி, வேதங்களின் வித்தாகத் திகழும் திருப்பாவையைப்பாடி அனுபவிக்கக் கூப்பிடுகின்றார். சத்துப் பொருளான பத்தவதாரமூர்த்தியின் கீர்த்தியினைப் பெற இது வழிகாட்டும் என்கின்றார். இருள் என்னும் பாவ உலகத்தை விட்டு, ஒளி உலகமென்னும் அருள் உலகத்திற்கு அழைத்துச் செல்லும் துணைவனாகும். என்று நினைவுபடுத்துகின்றார்.

இவ்வாறு ''பிஞ்சிலே பழுத்த பெண்பிள்ளை'' யாகிய ஆண்டாள் திருப்பாவையை மார்கழித்திங்களில் மதி நிறைந்த நன்னாளில் தொடங்குகின்றார். முதல் நாள் தொடங்கி இறுதிநாள்வரை அஃதாவது அத்திங்களின் முப்பதுநாளும், நாளுக் கொரு பாசுரம் வீதம் முப்பது பாசுரங்களைப் பாடியருளினார். ஆயர்குலக் கன்னிப் பெண்களுடன் தாமும் ஓர் ஆயர்குலப் பெண்ணாகி. எம்பெருமானை அடையத் தம்வாய்மணக்கப் பாடியருளியதேதிருப்பாவை. ''அந்தத்தித்திக்கும்செந்தமிழ்த்'' திருப்பாவையைச் சித்தம்உருக நித்தம்பாடி நாமும் பந்தமுடைய அத்தனான கண்ண பெருமானை அடைய முயல்வோமாக!

# மாயனைப் பாடு மகிழ்ந்து!

வாயிற்காப் போனை மதித்தவர் நாயகனாய்
வாயாரக் கூவி மனம்மகிழ்ந்து—மாயனிடம்
சேர்ப்பிக்கப் பாடினார் சீர்ப்பாவை யாத்த கோதை
ஊர்புரக்கத் தந்தார் உவந்து!

—கவியமுதனார்.

இவ்வெண்பாவில் கோதைத் தாயாரின் மனநிலையைக் கவியமுதனார் படம் பிடித்துக் காட்டுகின்றார். 'நாயகனாய்' என்று கோதை தொடங்கும் பாசுரத்தை எடுத்துக்காட்டி எளியவரையும் இறைவனாகவே மதிக்கும் பண்பையுடையவர் என்ற நிலையையும் வெளிப்படுத்தியுள்ளார். நந்தகோபர் அரண்மனை வாயிலைக் காப்போனிடம், உள்ளே எம்பெருமானாகிய கண்ணபெருமான் இருக்கின்றான்; அவனிடம் சேர்ப்பிக்க வேண்டுகின்றார், வேண்டியவர் ஊரெல்லாம் வாழ திருப்பாவையைப் பாடியருளினார் என்று கோதைப் பிராட்டியாரின் பரந்த நோக்கத்தைப் படம் பிடிக்கும் கவியமுதனார் அவரை வாயாரப் புகழ்கின்றார்.

'நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய கோயில் காப்பானே' என்ற பாசுரத்தின் மூலம் அடியாரைப் படிமிசையில் தெரியக் காட்டிப் புகழ்கின்றார். எளியோரையும் இனியவராகக் காட்டித் தெரிவிக்கின்றார். எளிய

வரும் பெரிய நலனை ஏற்படுத்தித் தருபவர் என்ற செய்தி யையும் இந்தப் பதினாறாம் பாசுரத்தில் சிந்தை விழைந்து தெரிவிக்கின்றார். நாயகனான நந்தகோபனுடைய அரண்மனையாகிய கோயிலைக் காப்பவனையும் கொடி களால் அலங்கரிக்கப்பட்ட வாயிற் காப்பவனையும் நயம்பட அழைக்கிறார் கோதை.

ஆயச் சிறுமியர்களின் வாயிலே வைத்து இப்பெருமை சான்ற 'நாயகன்' என்ற சொல்லைப் பாடச் செய் கின்கிறார், மணிக்கதவத்தாளினைத் திறக்க ஆயச் சிறுமியர்கள் விரும்பிக் கேட்கின்றார்கள். இந்த நந்த கோபருடைய அரண்மனைக்குள்ளே கருணை முகில் வண்ணக் கண்ணபெருமான் கவினுற இலங்குகின்றான்; அவனைக் கண்டு இன்பந்துய்க்க யாங்கள் வந்துள்ளோம். 'நீலநிற' மணியைப் போன்று மேனியுடைய மாயன் எங்களிடம் நேற்றே அருள் ஒலியையுடைய பறையைத் தருவதாக வாக்குறுதியளித்தான். ஆதலால் நிறைவை யருளும் அப்பறையினைப் பெற நாங்கள் இங்கே வந்துள் ளோம். அவனைத் திருப்பள்ளி எழுச்சி பாடி எழுப்ப வந்துள்ளோம். கோயில் காக்கும் வாயில் காக்கும் நீங்கள், தூய நெறியில் நேயம் கொண்டு வந்துள்ள எங்களுக்கு, முணு முணுக்காமல், மறுத்துக் கூறாமல் அழுந்தியுள்ள கதவினைத் திறந்து விடுவீர்களாக! என்று கோருகின்றார் கள். இச்செய்தியினை,

''நாயக னாய்நின்ற நந்தகோ பன்உடைய
கோயில்காப் பானே, கொடித்தோன்றும் தோரண
வாயில்காப் பானே, மணிக்கதவம் தாள்திறவாய்'
ஆயர் சிறுமிய ரோமுக்(கு) அறைபறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்,
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்
வாயால்முன் னம்முன்னம் மாற்றாதே அம்மா! நீ!
நேய நிலைக்கதவம் நீக்கேலோர் எம்பாவாய்!''

எனப் பாடுகின்றார் கோதை.

அவர்களை நாயகர்களாகக் கூறியமை, 'தமக்கு வழி காட்டியாக இருப்பார்கள்' என்ற அவாவினால் கூறிச் சிறப்பிக்கின்றார்கள். முன்பு இரண்டாம் பாசுரத்தில் 'செய்யாதன செய்யோம்' என்று சொல்லிய உறுதிப் பாட்டின் படி, பண்புடன் விளங்கிய சிறுமியர்கள், எம்பெருமான் வதியும் மனையில் நுழையும் போது, அங்கே காவலாக நிற்பவர்களிடம், அடியார்கள் போல அடக்க முடன் அனுமதிகோரி நின்றார்கள்.

சிறுவர்களுக்கு இந்தப் பண்பு எவ்வாறு தோன்றியது? என்று சிலர் எண்ணக்கூடும்; இக்கூற்றுக்கு, 'தோன்று—போதே எம்பெருமான் பற்றுடன் தோன்றியதால்' இவர் களுக்கு இப்பண்பு இயல்பாகவே ஏற்பட்டிருந்தது என்று பதிலிறுக்கலாம். இச் சிறுமியர்களின் வாழ்வுக்கெல்லாம் எம்பெருமானே! காப்பாகி நலம் பொழிபவனாகவே இருக் கின்றான். எனவே, அவர்களுக்கு வேறு கதியில்லை என்ற அளவில் அவன் நினைப்பாகவே இருக்கின்றார்கள். பரம் பொருளைக் காண வேண்டும் என்ற விருப்பத்தால் இவர் கள் கோயில் காப்பவர்களையும் தலைவர்களாக மதித்தார் கள்.

உயர்ந்த விலையுள்ள இரத்தினங்களை விற்பவன் அந்த இரத்தினங்களால் பெருமைக்குரியவனாக மதிக்கப் படுவதைப் போன்று, உலகத்திற்கு நாயகனாயுள்ள கண்ண பெருமான் வதியும் கோயிலைக் காப்பவர் கண்ண பெருமானால் மதிக்கப்படுகின்ற நிலையில் நாயகன் எனப் பெருமை செய்யப்படுகின்றார்கள். சிறந்த நெறியில் ஆழங்கால் பட்டுச் செம்மையே தோன்ற. எம்பெருமானை நம்பிக்கையுடன் தெம்புடன் போற்றி வரும் கோதை, தம் பண்பாடு விளங்கும் வகையில் எளியவராயிருக்கும் கோயில்

வாயில் காப்போரை நாயகனாய் நின்ற'' என்று சிறப்பிப்பதை அறநெறிச் சான்றோர்கள் அகம் விழைந்து புகழாமலிருக்க இயலாது.

மேற்குறித்த பாசுரம் தொடங்கிப் பின்னர் பாடும் ஏழு பாசுரங்கள் வரை, கண்ணபெருமானை எழுப்புவதன் மூலம் அங்குள்ளவர்களான மற்றவர்கள் எல்லோரையும் துயில் எழுப்புகின்றார் கோதை. இக்கருத்தை ஆயச் சிறுமியர்களின் இனிய வாய் மொழியாக வைத்துப் பாடுகின்றார்.

இச்சிறுமியர்கள் முதலில் கோயில் காப்போனை எழுப்பி, அடுத்து வாயில் காப்போனை எழுப்புகின்றனர். எழுப்பும் போது தலைவன் என்று நந்தகோபரைக் குறித்தவர்கள், இச்சொல்லாலேயே அடைமொழிக் கொடுத்துக் கோயில் காப்போனையும், வாயில் காப்போனையும் பெருமை செய்கின்றார்கள். உலகத்தைப் புரக்கும் கண்ணபெருமானே நாயகனாவன். இந்த மணிவண்ணனை நாயகன் என்று கூறவந்தவர்கள், இவனுக்கே சதாகாலமும் உவப்புடன் பணி செய்பவர்கள் சிறப்புக்குரியவர்கள் ஆதலால் இந்தச் செம்பொருளை முன்னிட்டு, நந்தகோபரையும், கோயில், வாயில் காப்போரையும் நாயகன் என்னும் பெயரால் உயர்வாகப் போற்றிக்கூறுகின்றார்கள். 'நாயகன்' என்னும் ஒரு சொல்லை வைத்து, கண்ணபெருமானை, நந்தகோபரை, கோயில் வாயில் காப்போரைச் சிறப்பித்துக் கூறிய திறன் கோதையாரின் கவிதைத் திறன் என்று, பாவலர்கள் போற்றுவார்கள் என்பது உண்மை.

அழியும் உடலைப் பெற்ற மாந்தன் பிறவாப் பேற்றினை அருளும் தெய்வமான கண்ணபெருமான் இருக்கும் போது, அடியார்களை இவன் ஏன் நாட வேண்டும்? மாணவன் எண்ணையும் எழுத்தையும் ஆசிரியரின் உதவியின்றி அறிதல் இயலாது, இதைப் போன்றே அடியார்களின் உதவியின்றிப் படியளக்கும்

உலகளந்த நாயகனை அறிதல் இயலாத செயலாகும். எனவே, எம்பெருமானைக் காண ஆற்றுப்படுத்தி, அவனோடு ஒன்றிநிற்க நெறி முறைகளைக் கூறி, மனத் தூய்மையால் பற்ற அடியார்களே படி மிசையில் வழி காட்டும் பண்பட்ட சான்றோர்களாவார்கள். அவர்கள் காட்டும் அறநெறியாகிய அறிவு விளக்கைக் கொண்டு பேரறிவாய் விளங்கும் பெரிய அருள் விளக்கான எம்பெருமானைக் காண வியலும், ஒருவரின் சான்றாண் மையை, சான்றாண்மையில் மிக்க மற்றொருவர் தக்கா ரிடம் பரிந்து தெரிவித்தல் போன்று, அடியார்களே அருளும் பெருமானிடம் செல்ல வழிகாட்டுபவராவார்கள்.

இந்தச் செந்நெறியில் கோதை, கோயில் காப்போனை யும் வாயில் காப்போனையும் மதித்து எம்பெருமானிடம் செல்ல வழிகாட்டுபவர்களாக எண்ணி, பண்ணிசைத்துத் தலைவர்களாகச் சிறப்பிக்கின்றார். இங்கே ஒரு செய்தி யைக் காண்பது நல்லது. நாயகன் முழு ஏழ் உலகுக்கும் என்றும், தொல்லைவானவர் தம்நாயகன் என்றும் நம்மு டைய நாயகனே என்றும் கூறிக்கண்ணபெருமானை நாயக னாக உரைத்துள்ளார்கள், இவ்வாறு இச்சான்றோர்கள் கருத்துக் கூறியிருக்கும் போது, இங்கே நம் கோதை நந்தகோபரை, கோயில், வாயில் காப்போரை நாயகன் என்று கூறியுள்ளமை ஏற்புடையதாகுமோ? எனின். ஏற்புடையதாகும் என்று கூறும் வகையில் பெரிய திரு மொழியில் (10-4-8) திருமங்கையாழ்வார். "உந்தம் அடிகள் முனிவர்" என்று பாடியிருத்தல் காணலாம். இத் தொடர் மொழியில் "அடிகள்" என்ற சொல்லிற்கு 'நாயகர்' என்று பொருள் கூறப் பெறுகின்றது. இதனால் நாயகனான அப்பெருமானுக்குத் தொண்டு செய்பவர் களும், அருளுணர்வு பெற்றவர்கள் பார்வையில் நாயகர் களாகவே காட்சியளித்தார். இந்த வகையில் கோதைப் பிராட்டியார் இவர்களைச் சிறப்பிக்கின்றார் என்று கூறுதலே பொருந்தும். இராமபிரானுக்குத் தொல்லை

தந்த சூர்பனகையைப் போல. கண்ணன் எம்பெருமானுக் குத் துன்பந்தரவந்த பூதகியைப் போல் நாங்கள் இடர்ப் பாடு செய்பவர்களல்லர். செம்பொருளான எம்பெரு மானுக்கு நம்பிக்கையுடைய பாத்திரர்களாவோம். எனவே அவன் இருக்கும் இடத்திற்கு விரும்பி எங்களை அனுப்பக் கதவினைத் திறந்து விடுவாயாக என்று காப்போனிடம் கனிவுடன் கேட்கின்றனர் ஆயர் சிறுமியர்கள்.

நாங்கள் கபடமற்ற காக்கும் குலத்தவர். கண்ணனுக்கு என்ன நிகழுமோ என்று நேயமுடன் காவல்புரியும் ஆயர் குலச்சிறுமியர்கள். களங்கமில்லா உள்ளத்தோடு வள்ளலான மாயவனைக் காணவந்தோம் என்ற செய்தி யினை, ''ஆயர் சிறுமியரோம்' தூயோமாய் வந்தோம்' என்று ஆயர் சிறுமியர்கள் கூறுவதாகக் கோதை பாடு கின்றார்?

பெண்களாயிருந்தும் கண்கள் உறக்கங்கொள்ளாமல், கடையர் போன்று இரவெல்லாம் தொந்தரவு செய்கின்றீர்கள் என்று வாயிற்காப்போன் எண்ணிஅப்பாற் போங்கள் என்று சொல்லி விடுவானோ என்று அஞ்சி, ''வாயால் முன்னம் முன்னம் மாற்றாதே அம்மா நீ'' என்று அவனிடம் ஆயர் சிறுமியர் இரக்கமுடன் அனுமதிக்க வேண்டுகின்றனர். இவர்களின் கனிவு மொழியினைக் கேட்ட வாயிற்காப்போன் மனமிரங்கி அருளாளனிடம் செல்ல கதவினைத் திறந்து கொண்டு உள்ள போகுமாறு பணிக்கின்றான்.

உடனே ஆயர்சிறுமியர்கள் ஆவலுடன் கதவினைத் திறக்க விரைந்து சென்றார்கள். கதவைத் திறக்க அவர் களால் இயலவில்லை. உடனே வாயிற்காப்போனிடம் சென்று உங்களைக் காட்டிலும் உண்மையாகக் காவல் புரிதல் இக்கதவுகள். அவை யாரும் உள்ள நுழையாத வாறு தடுத்து நிறுத்தும் வகையில் அழுந்தி பொருந்தி வன்மையாக உள்ளன. என்ற விவரத்தை

''நேய நிலைக்கதவம்'' என ஆயச்சிறுமியர்கள் இயம்பினார்கள். இச்செய்தியினைக் கேட்டபின் அக் காவலர்கள் ஆர்வத்தோடு கதவினைத் திறந்து விடுகின்றார்கள். ஆயச்சிறுமியரும் நென்னலே வாய் நேர்ந்த மாயனிடம் தாயை நாடும் கன்று போல் ஓடுகின்றார்கள், பாடிப் பரவசம் கொள்கின்றார்கள்.

''நென்னலே'' என்றதில் வரும் ஏகாரத்திற்கு ''கண்ண—பெருமான் அடியாருக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றியே தீருவான் என்ற உறுதிப் பாட்டினைத் தெரிவிக்கவே கோதைப் பிராட்டியார் பயன் படுத்தினார் என்றே பொருள்கொள்ளவேண்டும். ''வாயிற் காப்போனை'' ''அம்மா'' என்று கூறியது, கோயிலுக்குள் இருப்பவன்தான் நாதன்'' இவனே உலக நாயகன் இவனோடு வாயிற்காப்போனை ஒப்பிடக்கூடாது என்று எம்பெருமானிலிருந்து வேறு படுத்திக் காட்டவே, வாயிற்காப்போனை ''அம்மா'' என்று கோதை தம் திறத்தால் கூறுதல் போற்றுதற்குரியதாகும். இவர் தம் சொல்லாட்சித் திறனை இலக்கணம் வல்லார் புகழ்வதற் குரியதாகும்.

நந்தகோபனுடைய என்று பிரித்துள்ள சீர்களில் வெண்டளை பிறழ்ந்து வந்துள்ளது. இங்ஙனம் தளை தட்டாமல் நிற்க ''நந்தகோ பன்னுடைய'' என்று விரித்தல் விகார மாக்கிக் காட்டலாம். ஆனால் வெண்டளையால் வரும் கலிப்பாவில் சிறுபான்மை மாறி வருதலும் உண்டு. யாப்பருங்கல விருத்தியில்

''வெள்ளையிற் பிறதளை விரவ வல்லன'' என்றும், யாப்பருங்காலத்தில்

''எல்லாத் தளையும் மயங்கி வழங்கும் என்று கூறியிருப்பதைக் கொண்டும் 'நந்தகோ பனுடைய'' என்று விகாரமாக்காமல் அப்படியே பாடலாம்.

இந்தச் செந்தமிழ்ப் பாசுரம் அடியார்களின் மாட்சிமையைப் பற்றிப் பாடப்பெற்ற ஒரு சிறந்த பாசுரமாகும்; பக்தர்களெல்லாம் சக்தி வாய்ந்தவர்களாகி முக்தி அருளும் முழுமுதற் கடவுளான எம்பெருமானின் நம்பிக்கைக்குரிய தொண்டர்கள் எனப்பெருமை செய்யும் உயர்ந்த பாசுரமாகும்.

கண்ணபெருமானின் எண்ணிறந்த உயரிய செயல்களை உய்த்துணர்ந்த மெய்யடியார்களே அவனை அடைய ஆற்றுப்படுத்தும் சான்றோர்களாவார்கள், அச்சான்றோர்களைப் பற்றிய பின்பே பரம்பொருளின் பற்றினைப் பற்றவேண்டும் என்னும் கருத்து வெளிப்பட இந்த இனிய பாசுரத்தைக் கோதை நமக்கருளினார்.

செவிடன் காதில் சங்கை ஊதியதைப் போன்று தெளிவில்லாதவர்களுக்கு நல்லறம் போதிப்பது பயனற்றதாகும். இதைப் போன்றே நல்லோர் போற்றும் திருமந்திரத்தைத் தீயோர் அறிதலில்லை. எனவே, திருமந்திரத்தைத் தீயோர் காதில் விழாதவாறு காப்பவனே கோயில் காப்பான் என்ற பொருளில் கோதை பாடியிருக்க வேண்டும் என்று கொள்ளுதலேசிறப்பு.

## பாவையில் இலக்கியச் செய்திகள்

நல்ல கருத்துகளை மீண்டும் மீண்டும் வற்புறுத்திக்கூறி நடைமுறையில் கைக்கொள்ள உணர்த்துவது, சிறந்த நெறி. இந்த நெறியே பண்டுதொட்டு இன்றுவரை கையாளப்பட்டு வருகிறது.

அந்த வகையில் கோதை தம் பாவைப் பாசுரங்களைச் சிறப்பிக்கச் சங்க இலக்கியங்களில் பயின்று வரும் நல்ல செய்திகளை எல்லாம் கையாண்டுள்ளார். அறநெறி தழைக்கவும் அருளாளனைப் பற்றும் பக்தி சிறக்கவும் திருப்பாவையை அருளினார் அவர்.

''கோயில்'' என்னும் தமிழ்ச்சொல் எம்பெருமான்வதி யும் பதியையும், தலைவனது நலமார் இருப்பிடத்தையும் குறிக்கும். ''நகர்'' என்னும் பெயருக்கு உகப்புடைய பரம்பொருள் உறையும் கோயில் என்றும் மனிதர் வாழும் இனியபேரூர் என்றும் இருபொருள் கூறுவர். இந்த வகையில்;

''முக்கட் செல்வர் நகர் வலம் வரற்கே,''

என்று புறநானூறு புகல்கின்றது. இந்தப்பழைய சங்க இலக்கியத்தில் வரும் மேற்குறித்த தொடர் மொழியில் மூன்றாம் சீரில் ''நகர்'' என்று வந்துள்ளது. இது கோயில் என்னும் பொருளை உணர்த்துகின்றது. இக்கருத்தைப் பண்டை நூற்கடலில் மூழ்கித் திளைத்த கோதை ''நாயகனாய் நின்ற நந்தகோ பனுடைய கோயில்'' என்று தம் பாசுரத்தில் பெய்து காட்டுகின்றார். ''கோயில்'' என்னும் சொல்லை எம்பெருமான் ஆலயத் திற்கும் நந்தகோபர் அரண்மனைக்கும் பொருந்திவரக் கூறினார். நம்மாழ்வார் கோயிலைப் பற்றிக் கூறியக்கால் எம்பெருமான் 'திருக்கடித்தானம்' என்னும் ஊரில் கோயில் கொண்டவன் அந்த இடத்திலே இருந்து அவனே விரும்பி வந்து என் நெஞ்சகம் பால் கோயில் கொண்டான் என்று கூறுகின்றார். அப்படிக் கோயில் கொண்ட ஒப்பற்ற தெய்வம் தன்னை எல்லோரும் தொழுது போற்றுமாறு வைகுந்தத்தில் கோயில் கொண்டுள்ளான் என் றுகண்ண பெருமானின் திருவிளையாடலை அற்புதமாகக் கூறுகிறார். அந்தச் சிந்தைக் கினியவன் 'குடக்கூத்தாடி' கொடுமையினைக் குப்புற வீழ்த்தினான். என்று அவனை 'அம்மானே!' என்று விளித்துத் திருவாய் மொழியில் பெருமையாகப் புகழ்கின்றார். இக்கருத்தினை

''கோயில்கொண் டான்தன் திருக்கடித் தானத்தைக்
கோயில்கொண் டான்அத னோடும்என் நெஞ்சம்
கோயில்கொள் தெய்வம்எல் லாம்தொழ வைகுந்தம்
கோயில் கொண்ட குடக் கூத்த அம்மானே''

என்று பாடுகின்றார். இவர் தம் பாசுரத்தால், நந்த கோபர் அரண்மனையைக் கோயிலாகக் கொண்ட எம்பெருமானின் உயர்வினைத் தெளியலாம், கோயில் என்னும் சொல்லுக்குள்ளிருக்கும் மாயபிரானின் மாட்சியினைக் கோதைத் தாயார், தம் சொல்லாட்சியால் காட்சி படுத்திக் காட்டுகின்றார். எம்பெருமான் எங்கே இருக்கின்றானோ அங்கேதான் அவனிருக்கும் கோயில். இந்தச் செய்தியினை நம்மாழ்வார் எடுத்துப் பேசுகின்றார். ஒரு முறை அவனைக் காண நம்மாழ்வார் வைகுந்தம் சென்றார். அங்கே அவனில்லை. திரும்பி வரும்போது ஆயர்பாடியில் ஆயச் சிறுமியர் மத்தியில் ஆடிக்களிக்கும் காட்சியைக் கண்டு மகிழ்ந்தவர். எங்கே அவனடியார்கள் உள்ளார்களோ அங்கே அவனிருப்பான். அந்த இடமே அவனுக்கு வைகுந்தம் என்று திருவாய் மொழியில் அவர் தம் அருள்வாய் மொழியாக இசைத்துள்ளார். இவர் நெறியில் நிற்கும் கோதை ''நந்தகோபனுடைய கோயிலே'' அவன் இலங்கும் உவப்புடைய கோயில் என்பதை ''நாயகனாய் என்ற நந்தகோபனுடைய கோயில்'' என்ற தொடர் மொழியில் தெரிவிக்கக் காணலாம்.

கண்ணபெருமானை மாயன் என்று வாயாரப் புகழ்வர். அம்மாயபிரான் செய்த வியப்புக்குரிய செயற்பாட்டினை மூன்றாம் பரிபாடலில் கடுவன் இளவெயினனார் என்னும் புலவர் உளம் விழைந்து தெரிவிக்கின்றார்.

நெருப்பும் காற்றும் வானமும் நிலனும் நீருமாகிய ஐம் பெரும் பூதங்களும், சூரியனும், சந்திரனும், தரும சொரூபியாகிய வேள்வித் தலைவனும், செவ்வாய், புதன், வியாழன் வெள்ளி சனி என்னும் ஐந்து கிரகங்களும், திதியின் பிள்ளைகளாகிய அசுரர்களும், காசிபன் என்னும் விதியின் மக்களாகிய பன்னிரண்டு ஆதித்தியர்களும், குற்ற

மற்ற வசுக்கள் எண்மரும், உருத்திரர்கள் பதினொரு வரும் அசுவினி தேவர்கள் இருவரும் இயமனும். அவன் ஏவல் செய்வோனாகிய கூற்றுவனும், ஒவ்வொன்றும் ஏழேழு பிரிவாகப் பொருந்திய மூன்று உலகங்களும், அவ்வுலகினுள் வாழும் பல்வகை உயிர்களும், நின்னிடத்தே தோன்றிப் பரந்தனவாகும்; மாயோனே இவ்வுண்மை யினை என்றும் அழியாத தன்மை பெற்று விளங்குவதாகிய வேதம் எடுத்துக் கூறுதலால், யாங்களும் அதனை எம் அறிவுக்கு எட்டியவாறு தொகுத்துக் கூறினோம் என்ற செய்தியினை,

''தீவளி விசும்பு நிலன்நீர் ஐந்தும்
ஞாயிறும் திங்களும் அறனும் ஐவரும்
திதியின் சிறாரும் விதியின் மக்களும்
மாசில் எண்மரும் பதினொரு கபிலரும்
தாமா இருவரும் தருமனும் மடங்கலும்
மூவேழ் உலகமும் உலகினுள் மன்பதும்
மாயோய் நின்வயின் பரந்தவை உரைத்தேம்
மாயா வாய்மொழி உரைதர வலந்து''

என்று பாடுகின்றார். இப்புலவர், மாயம் புரிகின்ற கண்ண பெருமானின் திருவிளையாடலை, அவன் தோற்றுவித்த அற்புதச் செயலைப் பற்றுடன் நற்றமிழ்ப் பரிபாடலில் நவில்கின்றார். இவ்வாறு தெரிவிக்கும் சங்க இலக்கியச் செய்திகளை இங்கிதமாகத் தம் திருப்பாவையில் எடுத்தாண்ட கோதைப் பிராட்டியார் ''மாயன் மணி வண்ணன்'' என்று அவனின் பெயர்களைக் கூறி, இந்த இரு பெயர்களின் மூலம் அவன் தோற்றுவித்த பொருள் களையெல்லாம் உய்த்துணரும் வகையில் உள்ளுறைப் பொருளாகச் சுருங்கக் கூறி விளங்க வைக்கின்றார். ஒரு சொல்லில் பரம்பொருளின் பல்வேறுபட்ட செயல்களை உள்ளடக்கிக் காட்டும் திறன் கோதையார் பெற்ற அறிவுத்

திறனாகும். அருள் உணர்வில் தோய்ந்த அவரால் தான் இப்படிக் கூற இயலும்,

மாயன் செய்த திருவிளையாடல்களை அவன்பால் நேயம் கொண்ட நம்மாழ்வார்,

''குரவை ஆய்ச்சிய ரோடு கோத்ததும்
குன்றம் ஒன்று ஏந்தியதும்
உரவுநீர்ப் பொய்கை நாகம் காய்ந்ததும்
உட்பட மற்றும்பல
அரவில் பள்ளிப் பிரான் தன்''மாய
வினை''களையே அலற்றி
இரவும் நன்பகலும் தவிர்கிலம்
என்ன குறைஎமக்கே!

என்று பாடுவதில், ஆய்ச்சியரோடு குரவைக் கூத்தாடியதும் குன்றம் ஏந்தி குளிர்மழை தடுத்து ஆக்களை, ஆயர்களைக் காத்ததும், பெரிய மடுவில் காளிங்கனை அழித்ததுவும் பாற்கடலின் நடுவில் ஆதிசேடனாகிய அரவின் மீது பள்ளி கொண்ட எம்பிரானாகிய மாயனே உன் செயல் திறத்தை எண்ணி இரவும் பகலும் விடாமல் வாய்விட்டுக் கூறுகின்றோம். ஆதலால் எமக்கு எந்த விதக் குறையுமில்லை, என்று உலகமறிய உரைக்கின்றார்.

மாயன் என்று கூறும் இச்சொல்லைக் கோதை திருப்பாவையில் மூன்று பாசுரங்களில் வரப் பாடுகின்றார். 9-15-16 ஆகிய பாசுரங்களில் இச்சொல்லைப் பெய்து அனுபவிக்கின்றார். 9ஆம் பாசுரத்தில் ஏழாம் அடியின் தொடக்கத்தில் 'மாமாயன்' என்று கூறுகின்றார். இச்சொல்லுக்குப் பொருள் கூற வந்தவர்கள் 'வியத்தற்குரிய செயலையாற்றி உயர்வற உயர் நலம் அருளும் சிறந்த குணத்தினால் மயர்வை அறுக்கும் மாயன்' என்று சிறப்பிக்கின்றார்கள்.

15ஆம் பாசுரத்தில் 'வல்லானை மாயனை' என்று கடைசி அடியில் இரண்டாம் சீரில்வரக் கோதை பாடு கின்றார். 'இதற்கு அற்புதச் செயல் புரிந்த கண்ண பெருமான் என்று கூறியதோடு, 'இவன் தன் அடியார் களுக்கு அடங்கி நடந்து நலம் புரிபவன் என்று விரும்பிப் போற்றும் ஆய்ச்சியர்கள், அவனைக் கட்டவும் அடிக்கவும் இணங்கி நிற்பான் என்றும் அடியார்கள்பால் அவன் கொண்ட விழைவைத் தெரிவிப்பவன் என்றும்' பொருள் கூறுவர்.

16ஆம் பாசுரத்தில் ஐந்தாம் அடியின் தொடக்கச் சீரில் ''மாயன்'' என்று பாடியதற்கு 'எம்பெருமான் தன்னை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளாமல் மறைந்திருந்து அருள்பவன்; பாஞ்சாலிக்கு மானத்தைக் காக்க மறைந்திருந்து நலஞ்செய்து சஞ்சலத்தைப் போக்கி யவன் என்று பொருள் கூறுவர். இச்சொல்லால் கோதை எம்பெருமானின் எண்ணிறந்த செயலினை எடுத்துக் கூறி, அவனின் வியத்தற்குரிய மாய நிலையினைத் தம் வாய்மை தோன்ற விளம்புகின்றார்.

மேற்குறித்த பாசுரத்தின் ஐந்தாம் அடியின் மூன்றாம் சீரில் ''நென்னலே'' என்னும் சொல்லை ஆளுகின்றார். இதற்கு 'நேற்று' என்று பொருள் கூறுவர்.

நென்னலே என்னும் சொல்லுக்குப் பதிலாக ''நேற்றே தான் வாய் நேர்ந்தான்'' என்று பாடினாலும் இலக்கணப் பிழை கூற வியலாது. என்றாலும் 'நென்னலே' என்று பாடியது அக்கால வழக்கில் கையாளப்பட்ட சொல்லைப் பெய்து பாடுவது மரபு ஆதலால் அந்நெறியில் நின்று அந்தச் செந்தமிழ்ச் சொல்லை ஆண்டார். மரபைப் பேணும் பண்பில் ஆழங்கால் பட்டிருந்ததால் நெறி பிறழாமல் சொற்களை அற்புதமாகக் கோதை கையாளுகின்றார்.

ஐங்குறுநூற்றில் 113ஆம் பாட்டில், தோழி கூற்றாகப் பாடப் பெற்றதில், 'தலைவியிடம் தோழி, தலைவன் சீக்கிரத்தில் வந்து விடுவான்' என்று கூறுவதாக,

''அம்மவாழி தோழி, நென்னல்''

என்று பேசப்படுகிறது. நேற்றுத் தலைவன் சீக்கிரத்தில் வந்து விடுவேன் என்று கூறிச் சென்றுள்ளான், அஞ்சற்க! என்று அமைதிபடுத்துகின்றாள். இந்த 'நென்னல்' என்னும் சொல்லால், தலைவனின் வாக்குறுதியை வெளிப் படுத்துகின்றார்.

ஐங்குறுநூற்றில் கூறிய தலைவன் தந்த வாக்குறுதி யைப் போல், திருப்பாவையில் கண்ணபெருமானும் நேற்று வாக்குறுதியைத் தன்வாயால் சொன்னான். என்பதை ''நென்னலே வாய் நேர்ந்தான்'' என்று கோதை கூறுகின்றார். ஐங்குறுநூற்றில் சொல்லிய 'நென்னல்' என்னும் சொல்லை, திருப்பாவையில் காட்டிய கோதை அச்சொல்லால் உணர்த்தும் உறுதிப்பாட்டினையும் படம் பிடித்துக் காட்டுகிறார். இதை ஐங்குறுநூற்றைப் படித்த தால் கோதை பிராட்டியார் ஆண்டாள் என்று சொல் வதைக் காட்டிலும், அருளாளனின் திருவருள் பெற்ற வராதலால் சங்க இலக்கியங்களில் உள்ள பல்வேறான கருத்துகள் விரும்பி வந்து, அவர் தம் பொருள் நிறைந்த திருப்பாவையின் சிறப்புக்குக் கைகொடுக்கின்றன என்று கூறுவதே பொருந்தும்.

திருவள்ளுவப் பெருந்தகை நிலையாமையைப் பற்றிக் கூறும்போது, 'ஒருவன் நேற்று இருந்தான், அவனோ இன்றில்லாதவனாயினான்' என்று சொல்லும் நிலை யாமையை உடையது இவ்வுலகம் என்றவர்

''நெருநல் உளன் ஒருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு''

என்று, திருக்குறளால் காட்டுகின்றார், இந்த 'நெருநல்' என்னும் சொல்லைத் தான் கோதை 'நென்னல்' என்று

ஆண்டார்- திருவள்ளுவர் கூறிய 'நெரு நல்' நிலையாமை யாகும். கோதை 'நென்னல்' என்று கூறியது நிலைத்த வாக்குறுதியாகும். ஒரே சொல் இடத்திற்கேற்பப் பொருள் மாறுபடும், திருவள்ளுவர் ஆண்ட 'நேற்று' என்னும் சொல் எடுத்துக் கூறவந்த இடத்திற்கேற்ப நிலையாமையை உணர்த்திற்று. கோதை ஆண்ட 'நேற்று' என்னும் சொல் எடுத்துக் கூறவந்த இடத்திற்கேற்ப நிலைத்த வாக்குறுதியை உணர்த்திற்று. எனவே ஒரு சொல் இடத்திற்கேற்பப் பொருள் உணர்த்தும் என்பது தேற்றம்.

திருவள்ளுவர் தூய்மையைப் பற்றித் துல்லியமாகத் திருக்குறளில் கூறுகின்றார். உடம்பு பற்றிய தூய்மையை யும் உள்ளம் பற்றிய தூய்மையையும் எடுத்துக் கூறுகின் றார். உடம்பு தூய்மையாக இருந்தால் நோய் அணுகாமல் 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்று கூறும் வகையில் இருக்கலாம். உள்ளத்தூய்மை பெற்றால் உலகத் தார் உள்ளத்தில் எல்லாம் இருக்கவியலும் என்ற விவரத்தை

''புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்''

என்று தெளிவிக்கின்றார்.

இவர் கூறிய நெறியில் மாறாமல் 'இனிதாக உடலின் தூய்மையையும் உள்ளத் தூய்மையையும்' 'உவப்பு மேலிடக் கோதை கூறுகின்றார். அதைச் சுருங்கக்கூறி விளங்க வைக்கும் வகையில் ஆயச் சிறுமியர்களின் வாக் கிலே வைத்து,

''தூயோமாய் வந்தோம்''

என்று கூறி நெறிப்படுத்துதல் காணலாம். தூய மனத்தில் நேயமுடன் மாயன் வந்து நிலைப்பான் என்பதை,

''தெளிதாக வுள்ளத்தைச் செந்நெறீஇ ஞானத்
தெளிதாக நன்குணர்வார் சிந்தை—எளிதாகத்
தாய்நாடு கன்றேபோல் தண்டுழாய் யானடிக்கே
போய்நாடிக் கொள்ளும் புரிந்து.

என்று பாடுகின்றார் பொய்கையாழ்வார், பசுக்கூட்டத்தின் மத்தியிலே மேயும் தாய்ப் பசுவைக் கன்று கண்டு பிடித்துக் கொள்ளும். கன்று தாயை அடையக் கத்திக் கொண்டும் ஓடும்போது தாய்ப்பசு கத்தித் தன்னிருப்பிடத்தைத் தெரிவிக்கும். இந்த உவமையினைப் பெய்து எம்பெருமான் தன் அடியார்களுக்குத் தன் இருப்பிடத்தைக் காட்டி அழைத்துக் கொள்வான் என்று பொய்கைப்பிரான் குறிக்கின்றார். அடியார்கள் ஐம்புலனை ஒடுக்கித் தெளிவுடையதாகச் சிந்தையைப் பெற்றுச் செந்நெறியில் ஞானமெய்தி நின்றதால் அவன் தன்னைக் காட்டித் தன்னை விழையும் அடியார்களை ஏற்றுக் கொள்கின்றான். என்று இன்னமுதன் நிலையைக் காட்டுகின்றார்.

தூய்மையுடைய மனத்தில் ஆயர்குல அணிவிளக்கு உறைவான் என்பதால் கோதை, ''தூயோமாய் வந்தோம்'' என்றார். ஐந்தாம் பாசுரத்தில் ஐந்தாம் அடியில்

''தூயோமாய் வந்தோம் தூமலர்கள் தூய்த்தொழுது''

என்று குறித்துள்ளதையும் நினைப்பதற்குரியது. இதனால் இன்னமுதன் தூயசிந்தையுடையவர்களை விரும்புவான் என அறியலாம்.

தூயவர்களாக நாம் இருந்தால் மாயன் வந்து அருள்வான். ஆதலால் கோதை அருளிய பாசுரங்கள் காட்டும் வழியில் சென்று உள்ளத் தூய்மையோடு வெள்ளத்தின் மேல் படுத்துள்ளானைப் பாடி வாழ்வோமாக!

# உம்பர்கோமான் தன்னை ஓது!

*உம்பர்கோ மானே உலகையெலாம் காக்கின்ற*
*எம்பெருமான் என்றே இனிதேத்தி — தம்முடைய*
*வாழ்வின் துணையாய் வரித்திட்ட கோதைமொழி*
*வாழ்விக்கும் தெய்வமொழி வாழ்த்து.*

— கவியமுதனார்

தேவர்களுக்கெல்லாம் தேவனாய் இருந்து உலமெல்லாம் காப்பவன் எம்பெருமான் என்று கூறி இனிது அவனை வழிபட்டு, தம்முடைய வாழ்வின் துணைவனாய் ஏற்றுக்கொண்ட கோதையார் மொழிந்த திருப்பாவை, தெய்வமொழி! வாழ்விக்கும் செம்மொழி! என்று நமக்குச் சொல்லி, அம்மொழியை வாழ்த்து எனக் கூறியதால் கோதையை, கோவிந்தனை வழிபடுமாறு கவியமுதனார் கூறுகின்றார்.

உண்ணும் சோற்றை, பருகும் தண்ணீரை, உடுக்கும் ஆடையை நந்தகோபாலன் குறைவின்றி வழங்கியவன்; ஆயர்பாடி மக்களுக்கு அவன் ஆட்சியால் நலம் செய்தவன்; ஆதலால் அவனுக்கு நன்றிகூறி, படுக்கையை விட்டுஎழுந்து வந்து தன் நோன்புக்கு உதவ வேண்டுகின்றார்கள் ஆய்ச்சியர்கள். அடுத்து மிக்க எழிலுடன் மாதர்களின் தலைவியாயிருக்கும் யசோதைப் பிராட்டியை எழுந்து வந்து உதவவேண்டுகின்றார்கள். இவ்வாறே, ஆகாயத்தை

அளாவி நின்று எல்லா உலகங்களையும் அளந்த கண்ண பெருமானைப் பள்ளியை விட்டு எழுந்து வந்து உதவ வேண்டினார்கள். பின்னர் சிவந்த பொன்னால் ஆன வீரக் கழலை அணிந்த பலதேவனை அவன் தம்பியுடன் எழுந்து வந்து நலஞ்செய்ய வேண்டினார்கள். தாம் மேற்கொண்ட நோன்புக்கு இந்த நால்வர்களையும் உதவுமாறு ஆய்ச்சியர் கள் பள்ளி உணர்த்தினார்கள். இவர்களின் எண்ணத்தை,

''அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும்
எம்பெருமான் நந்தகோ பாலா! எழுந்திராய்!
கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே குலவிளக்கே!
எம்பெரு மாட்டி யசோதாய் அறிவுறாய்!
அம்பரம் ஊடறுத்து ஓங்கி உளகளந்த
உம்பர்கோ மானே! உறங்கா தெழுந்திராய்!
செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா
உம்பியும் நீயும் உறங்கேலோர் எம்பாவாய்!

என்று கோதை பாடுவார்: ஒரு பெண் தன் குழந்தையின் தொட்டிலையும், கணவன் படுக்கையையும் விடாமல் பற்றிக் கொண்டிருத்தல் போல, யசோதைப்பிராட்டியார் உறங்கும்போது கண்ணபிரானையும் நந்தகோபரையும் விடாமல் பற்றிஇருந்தார். இதனால் யசோதையின் கனி வின் நிலை கற்பின் நிலை கூறப்பெற்றது.

இந்தப் பாசுரத்தில் முதல் இரண்டடிகளில் நந்த கோபாலனின் உயர்வைக் கூறினார். மனித உயிர்க்கு முக்கியமானவை உணவு, தண்ணீர், உடை. இவற்றைக் குறைவின்றித் தந்தவன் நந்தகோபன். இல்லாதார்க்கு அருளும் குணமுடையவன் அவன். அவனைச் சிறப்பிக்க அந்த மூன்று பொருள்களின் பின்னே ஏகாரத்தினைப் பெய்து பாடினார் கோதை.

''கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே''

என்றதால், கொம்பை நினைவுபடுத்தி வஞ்சிக்கொம்பு என்று சிறப்பித்தார். சிறந்த பெண்ணின் இடைக்கு வஞ்சிக் கொம்பை உவமை கூறுவர். இவ்வாறு விளங்கிய யசோதையின் இடைக்கு அடை கொடுத்துச்சிறப்பித்தார். அன்னார் என்று ஒரு சொல்லை இணைத்ததால் யசோதை இனிய அழகு வாய்ந்தவள் என்று கூறப்பெற்றது. செடிக்குத் தீங்கு நேர்ந்தால் முதலில் வாடுவது கொழுந் தாகும். மற்ற பெண்களுக்குத் துன்பமென்றால், கொழுந்தைப் போன்று வருந்தி வாடி நிற்பவள் யசோதை யாதலால் இவ்வாறு குறித்தார். இதனால் அவளின் மென்மையுள்ளதைக் கூறினார் கோதை.

அழகாக இருப்பது கொழுந்தாகிய தளிரே! அழகு வாய்ந்த யசோதைக்கு இக்கொழுந்தை உருவகப் படுத்தினார். இவரை எழுப்ப வந்த ஆய்ச்சியர்கள்.

''அறிவுறாய்''

என்றார்கள். பிறருக்கு அறிவுறுத்தவே இவரை எழுந்திருக்க வேண்டினார்கள். எழுந்து எம்பெருமானை எழுப்புமாறு அன்பாக வேண்டினார்கள் என்பதை மேற்குறித்த தொடரால் அறியலாம்.

5ஆம் 6ஆம் அடிகளில் எம்பெருமானைச் சென்றெழுப்ப முற்படுகின்றார்கள். அவனிடம்

''அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகளந்த''

என்று பாடுகின்றார்கள். அவன் அன்று உலகளந்த வரலாற்றைக் கூறுகின்றார்கள். பேருருவம் எடுத்துப் பிழை செய்த மாவலியை அழித்த நிலையைக் கூறி வேண்டாதார் தலையிலும் வேண்டாமென்று மறுத்தவர் தலையிலும் உன் திருவடியை வைத்தழித்த பெரிய திருவடி களில் நாங்கள் வீழ்ந்து வணங்குகின்றோம். வணங்கும் எங்களுக்கு இணங்கி வந்து அருள் சுரக்க வேண்டு மென்றார்கள். மேலும் அவனை,

''உம்பர்கோ மானே உறங்காதே எழுந்திராய்''

என்றுபாடி, தேவர்களுக்கெல்லாம் தேவனாய்இருக்கும் நீ! உன் உறக்கத்தை விட்டு எழுந்து வந்து எங்களைச் சந்தித்து அருள் சுரக்க வேண்டுமென்றார்கள். உன்னை நினைப்பவர்களுக்கு, மனமுவந்து ஆதரிக்கும் நீ! எங்களிடமும் உன் இனிய எழில் முகத்தைக் காட்டி ஆட்படுத்தவேண்டுமென்றார்கள்.

அந்தத் திருமுகத்தைக் காட்டாமல் இருத்தல் எதனால்? ஆம் உன் அண்ணன் பலராமனை எழுப்பாமல் உன்னை எழுப்பியது தவறு என்பதால் நீ எழுந்து வரவில்லை போலும் என்று கூறியவர்கள்

''செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா''

என்று பாடிப் பலதேவனை எழுப்பினார்கள். கண்ண பெருமான் பின்னே தோன்ற, முன்னே பொற்காலைப் பொலிய விட்டுப் பிறந்தவன் என்றவனைச் ''செல்வா'' என்று சொல்லிச் சிறப்பிக்கின்றார்கள். பலராமன் கண்ணனைச் செல்வமாகக் கருதி வந்ததாலே இவனைச் செல்வனாக வைத்துக் கோதை பாடினார். இராமபிரானுக்குப் பின் பிறந்த இளையபெருமான் இராமனைச் செல்வனாக மதித்ததைப் போன்று, முன் பிறந்த பலராமன் பின் பிறந்த தம்பி கண்ணனைச் செல்வனாக மதித்தான் என்று கூறியதாகும்.

''உம்பியும் நீயும் உறங்கேல்''

என்றது. படுக்கையில் உறங்குபவர்களை நாங்கள் பார்த்திருக்கின்றோம். ஆனால் படுக்கை உறங்குவதைப் பார்த்ததில்லை.

ஆகவே எம்பெருமானுக்குப் படுக்கையாக உதவி செய்யும் பலராமனே! நீ உறங்குவது ஏற்புடையதாகாது. எம்பெருமான் எங்களுக்கு உதவுகின்ற இனியன் எனவே, அவ[illegible] தவவேண்டு கின்

அனந்தாழ்வான் எம்பெருமானுக்குப் படுக்கையா யிருந்து தனக்கொரு பாதுகாப்பைத்தேடிக் கொள் கின்றான். எம்பெருமான் உலகத்தார் உறைவதற்குப் படுக்கையாயிருப்பவன் தனக்கொரு நன்மையும் தேடிக் கொள்ளவில்லை. உலக உயிர்களைக் காக்கும் அவனுடன் நீயும் வந்து உதவவேண்டுமென்று மேற் குறித்த தொடர் மொழியால் ஆய்ச்சியர்கள் கூறினார்கள்.

குகன், சுக்கிரீவன், அனுமன், வீபீடணன் ஆகியோர் இராமபிரானை அடைய இலக்குமணனை வழிகாட்டி யாகப் பெற்றதைப் போன்று கண்ணபெருமானை நாங்கள் அடைய பலராமா உன்னை வழிகாட்டியாகக் கொள்ள வேண்டுகின்றோம் என்றார்கள்.

இப்பாசுரத்தின் முதலடியிலும் ஐந்தாம் அடியிலும், ''அம்பரம்'' என்னும் சொல் வரப்பெற்றது. இது தற்சம வட சொல்; இது ஆடை, ஆகாயம் எனப்பலப் பொருளையுணர்த்தும் ஒரு சொல்.

'உம்பி' என்றது 'உன் தம்பி' என்பதன் மரூஉ ஆகும். ''உறங்கேல்,'' முன்னிலை எதிர்மறை வினை முற்று. இப்பாசுரத்தில் இலக்கண நுட்பங்களுடன் உள்ளுறைப் பொருள் தோன்றப் பாடினார் கோதை.

இப்பாசுரத்தின் கண் இறைவனுக்குத் தொண்டு செய்வதே சிறப்பு என்றுணர்த்தப்படுகின்றது. இறையருள் விரும்பும் உயிர்கள் ஆசிரியனை அடைந்து திருமந்திர ஞானம் பெற்றுத் தொண்டர்களை முன்னிட்டு அடைதல் வேண்டும், எனக்கூறி, தெளிவிக்கப் பெற்றுள்ளது.

## பாவையில் இலக்கியச் செய்திகள்

திருப்பாவையை அருளிய கோதை, சமுதாயத்தில் அமைதி நிலவ வேண்டும் என்று கருதுகின்றார். ஒருவன் தன் வாழ்வில் செய்ய வேண்டியஅறப்பணிகளைச்செய்தா

லன்றி, வீட்டுலகம் பெற இயலாது. எம்பெருமான் அறவாழ்வை மேற் கொள்பவர்களுக்கே வீட்டுலகை அருளுவான்.

சமுதாயத்தில் ஒருவனுக்கு நல்வாழ்வு கிட்டாமல் போனால், பிச்சையெடுப்பது இழிவு என்றாலும் வேறு வழியில்லாமல் இரப்பவனுக்கு ஈந்துவப்பது இனிய கடனாகும்.

எடுத்துக் கொடுக்கும் இனிய அறநெஞ்சம் உடையவர் பால் இல்லாத நல்லோர் கேட்பது பயனுண்டாகும் என்பதை,

''இல்லாமை கந்தா இரவு துணிந்தொருவர்
செல்லாரும் அல்லர் சிறுநெறி—புல்லா
அகம்புகுமின் உண்ணுமின் என்பவர்மாட் டல்லால்
முகம்புகுதல் ஆற்றுமோ மேல்''

என்று நாலடியார் நவில்கின்றது. இக்கருத்தைத் திருப்பாவை இரண்டாம் பாட்டில் கோதை

''ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமா றெண்ணி உகந்து''

எனப்பாடுவார். உய்யக் கொடுத்து உதவிடுவார்க்கு வீட்டுலகம் வந்தெய்தும் என்பதை

''இல்லா விடத்தும் இயைந்த அளவினால்
உள்ள இடம்போற் பெரிதுவந்து—மெல்லக்
கொடையொடு பட்ட குணனுடை மாந்தர்க்கு
அடையாவாம் ஆண்டைக் கதவு''

என நாலடியார் சாற்றும். இல்லறத்தைச் செய்பவர் தீயவற்றில் தலைப்படமாட்டார் என்பதை

''செய்யாதனச் செய்யோம் தீக்குறளை
சென்றோதோம்''

என்று கோதை பாடுவார். இவர் கருத்தை உலக நீதியில்,

'புறஞ் சொலித் திரிவாரோ டிணங்க வேண்டா'

எனக் கூறப்பட்டிருத்தலை ஓர்க! இப்பதினேழாம் பாசுரத்தில் நல்லாட்சி புரிந்த நந்தகோபாலன், முப்பத்திரண்டு அறங்களெனப் பேசப்படுவனவற்றுள் சிறப்பாகப் பேசப் பெறும் உணவு, உண்ணீர், உடை ஆகிய மூன்று அறங்களை, ஆற்றியதில் ஏற்றமுடன் திகழ்ந்தான் எனப் புகழப்படுகின்றான். அறத்தின் நாயகனாய் விளங்கிய இவனைக் கோதை புகழ்ந்தார். இவ்வாறு வழங்குபவர்களின் கையைக் கம்பர்,

''புயல் பொழி தடக்கையால் தொழுது''

என்று கூறுவார். அயோத்திக்கு வருகை தந்த கலைக் கோட்டு முனிவரை வரவேற்ற தசரதன் கையை மேற் குறித்த தொடரால் சுட்டினார். வாரி வழங்கிய நந்த கோபனை எம்பெருமான் என்று கூறினார் கோதை.

சீதாப்பிராட்டியின் நிலையைக் கம்பர்

''வெப்புறு மனத்தனள் வெதுப்ப மென்மலர்க்
கொப்பென அமளியிற் குழைந்து சாய்ந்தனள்''

என்று பாடினார். இதில் சீதையை 'மென்மலர்க் கொம்பு' என்று இயம்புவார். இதைக் கோதைப்பிராட்டியார்

''கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே குலவிளக்கே''
எனப் பாடினார். கோதை அருளிய பாட்டில் யசோதைப் பிராட்டியைக் 'கொம்பு' என்றார்; கம்பர் பாடிய பாட்டில் சீதையைக் 'கொம்பு' என்றார்.

மரத்தின் கொழுந்து வாடியிருப்பதைக் கண்டு மரத்திற்கு வாட்டம் உள்ளதென அறிகிறோம். ஆயர்பாடி பெண் மக்களுக்குத் துன்பம் இருப்பதை யசோதையின் முகம் வாடி வெளிப்படுத்தும். ஆம் பிறர் துன்பத்தைக் கண்டு வாட்டம் கொள்ளும் யசோதையைக் ''கொழுந்து'' என்றார் கோதை.

ஆயர்குல மாதருள் விளக்காக விளங்கியதால் ''குல விளக்கே'' என்றார். மற்றப் பெண்களைக் காட்டிலும் யசோதை சிறந்தவள் எனக்காட்ட ''விளக்கே,'' என்று, பிரிநிலை ஏகாரத்தால் பெருமையாகச் சுட்டினார்.

இவர் கருத்தை மேலும் சிறப்பிக்கும் வகையில் கம்ப நாட்டாழ்வார்,

''பெண்ணியல் தீபமன்ன பேரெழிலாட்டி''

என்று சீதாப்பிராட்டியாரைத் தீபமாகக்காட்டுவார். மூவடிக்கு மண் கேட்டு மாவலியிடம் இரந்த வாமன னான, அவன் அனைத்துலகையும் அளக்க விண்ணுக்கும் மண்ணுக்குமாக நின்றான்..அவன் ஊன்றிய திருவடி கீழுள்ள ஏழுஉலகங்களிலும் பொருந்தி நின்றன என்பதைப் பரிபாடலில்

''சேவடி தொழாரும் உளரோ! அவற்றுள்
கீழேழ் உலகமும் உள்ள அடியினை''

என்று இளவெயினனார் பாடுவார். இச்செய்தியை

''அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகளந்த
உம்பர்கோமானே''

என்று பாடினார் கோதை. சங்க நூற்களில் எம்பெரு மானின் திரிவிக்கிரம அவதாரம் பற்றிச் சிறப்பாகப் பேசப் படுகின்றன. இளங்கோவடிகளும் ஆய்ச்சியர் குரவையில்,

''மூவுலகம் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடிய
தாவிய சேவடி சேப்ப''

என்று பாடுவார்.

உலகத்தை அளந்தபோது அவன் திருவடி சிவப்பாகத் திகழ்ந்தது என்றார். திருவள்ளுவப் பெருந்தகை எந்தக் கடவுளையும் உருவம் பெயர் முதலியவற்றைக் குறித்துக் காட்டாமல், பொதுவாகப் பாடினார் எனக் கூறுவர். ஆனால் புணர்ச்சி மகிழ்தல் என்னும் அதிகாரத்தில்,

''தாம் வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு''

என்று தாமரைக்கண்ணனுடைய உலகத்தைப் பேசி யிருத்தல் கொண்டு எம்பெருமானின் வைகுந்தத்தைச் சிறப்பித்துக் காட்டினார். மேலும் 'மடியின்மை' என்னும் அதிகாரத்தில் பத்தாம் குறளில், சோம்பல் இல்லாமல் ஆளுகின்ற அரசனைப் பற்றி, அவனுக்குரிய சிறப்பினைப் பற்றிக் கூறவந்த திருவள்ளுவர்,

''மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு''

என்றார். இதில் சோம்பலற்ற அரசனின் ஆளுமையின் கீழ் எல்லாஉலகங்களும் அடங்கி நிற்கும். எவ்வாறு?உலகத்தை அளந்த மாமாயன் திருவடியின் கீழ் எல்லா உலகங்களும் அடங்கியதைப் போல என்று உவமை படுத்திக் கூறினார்.

இவ்வாறு கூறிய திருவள்ளுவரை அடியொற்றிக் கோதை,

''அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகளந்த
உம்பர்கோ மானே''

என்று கூறியவற்றை முன்னமே எடுத்துக்காட்டியதை அறியலாம். இப்பாசுரத்தில்,

''செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா
உம்பியும் நீயும் உறங்கேல்''

என்றதால் கண்ணபிரானைச் செல்வனாக நினைந்தவன் பலராமன். செல்வனாகிய இவனால், எல்லாம் உலகமும் நடைபெறுகின்றது. மற்றவர்களைச்செல்வராக, அவர்கள் பெற்றுள்ள செல்வத்தைச் செல்வமாகக் கருதக் கூடாது என்பதைக் கூறி எம்பெருமானே ''செல்வன்'' என விளக்கிப் போற்றுகின்றார்.

மாந்தர்களை, அவர் தம் செல்வத்தைப் பெரிதாகக் கருதுபவர்களுக்கு; நம்மாழ்வார்,

''கொள்ளும் பயனில்லை குப்பை கிளர்ந்தன்ன
செல்வத்தை
வள்ளல் புகழ்ந்துநும் வாய்மை இழக்கும் புலவீர்காள்
கொள்ளக் குறைவிலன் வேண்டிற்றெல் லாம்தரும்
கோதில்என்
வள்ளல் மணிவண்ணன் றன்னைக் கவிசொல்ல
வம்மினோ''

எனப் பாடி,

எடுத்து விளக்கி மனிதர்களை வள்ளலாகப் புகழ்ந்து வாய்மை இழக்காதீர் என்றார்; மனிதன் தன்னலத்தால் அறத்தைக் கொன்று பொருள் சேர்ப்பவன். ஆதலால் அவனை 'வள்ளல்' எனக் கூறுதல் தவறென்றார், மணிவண்ணனாகிய கண்ணனையே செல்வனாக வள்ளலாகப் போற்றக் கூறினார். இப்படிப்பட்டவனைச் செல்வனாகப் பெற்ற பலதேவா, அவனுடன் நீயும் வந்து எங்கள் நோன்பு நிறைவேற உதவி செய்ய ஆயர்குலச் சிறுமியர்கள் வேண்டியதாகக் கோதை கூறி அம்மாயனை வாயரப் புகழ்ந்தார். இவ்வாறு தம் நெஞ்சம் விழைந்து

புகழாரம் சூட்டிய கோதை பாடிய தமிழ் மாலையைப் பாடி அமிழ்தம் அருளியவனைப் பற்றி உய்வோமாக!

## நப்பின்னை நாயகனைப் போற்று!

பார்புகழும் நந்தகோ பலன் மருமகளோ
பேர்பின்னை பேரழகு பெற்றவளைக்—கார்வண்ணன்
ஏற்ற இனியவளை இன்னிசைத்துக் கோதைத்தாய்
போற்றி யெழுப்புகின்றார் போந்து!

—கவியமுதனார்

இதில் பார்புகழும் நந்தகோபாலனைக் கூறி நப்பின்னையை அவன் மருமகள் என்றார். நந்தகோபாலன் நல்லாட்சி புரிந்தவன். அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று உயர்வுகளைப் போற்றியவன். ஊண், உடை, உறைவிடம் ஆகியவற்றை மக்கள் பெற்று இன்பமுறச் செய்தவன். தனக்கு நிகர் எவரும் இன்றி, யானையையொத்த ஆற்றலையுடையவன். ஆதலால் அவனைப் பார் புகழும் நந்தகோபாலன் என்றார் கவியமுதனார்.

இத்தகைய வீரன் பெற்ற மருமகளே நப்பின்னை என்றார். கார்வண்ணனை மகனாகப் பெற்றவன் நந்தகோபாலன். அக்கார்வண்ணனின் இன் துணைவியே நம்பின்னை. அவளைப் பேர்பின்னை என்றும் பேரழகி என்றும் இனியவள் என்றும் புகழ்ந்தார் கவியமுதனார். இந்த இனியவளின் துணையால் புனிதனான இன்ன முதன் அருளைப் பெறக் கோதைப் பிராட்டியார் போற்றி எழுப்பினார் என்றார்.

**எம்பிராட்டியின் உதவியின்றி எம்பெருமான் உதவமாட்டான் என்பதால் கோதையார் எம்பிராட்டியான**

நப்பின்னையை நயந்து எழுப்புகின்றார் என்று கவியமுதனார் பாடுகின்றார். இவ்வாறு மேற்குறித்த வெண்பாவில் கோதை அருளிய திருப்பாவையில் பதினெட்டாம் பாசுரத்தை நினைவு கூர்ந்தார் கவியமுதனார்.

கோதைப் பிராட்டியார் கோவிந்தனைக் கோரிப் பாடிய பதினெட்டாம் பாசுரம் தான்.

''உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்
நந்தகோ பாலன் மருமகளே நப்பின்னாய்!
கந்தங் கமழும் குழலீ! கடைதிறவாய்
வந்தெங்கும் கோழி அழைத்தனகாண் மாதவிப்
பந்தல்மேல் பல்காற் குயிலினங்கள் கூவினகாண்
பந்தார் விரலியுன் மைத்துனன் பேர்பாடச்
செந்தா மரைக்கையால் சீரார் வளையொலிப்ப
வந்து திறவாய் மகிழ்ந்தேலோர் எம்பாவாய்''!

என்று பாடப் பெற்றதாகும். இதில் நந்தகோபாலனைப் பற்றி முதல் ஒன்றரை அடிகளிலும் நப்பின்னையைப் பற்றி மற்ற அடிகளிலும் அழகுறப் பாடுகின்றார் கோதை.

தன்னால் வென்று வீழ்தப்படுகின்ற மதயானைகளை உடையவனும் போர்க்களத்தில் முதுகு காட்டி ஓடாத பராக்கிரமத் தோள் வலிமையுடையவனுமான நந்தகோபாலனுக்கு மருமகளாய் வாய்த்தவளே! இனிய நப்பின்னைப் பிராட்டியே! பரிமளம் வீசுகின்ற கூந்தலையுடையவளே! உன் இல்லத்தின் தாழ்ப்பாளைத் திறந்திடுக!

கோழிகளானவை எல்லாவிடங்களிலும் சென்று கூவி நிற்றலை நீ காண்பாயாக! அஃதன்றியும் குருக்கத்திக் கொடிகளாகிய பந்தலின் மேல் உறங்குகின்ற குயில் கூட்டங்கள் பலதடவை கூவுதலைக் கேட்பாயாக!

கண்ண பெருமானோடு விளையாடுவதற்குரிய கைகளுக்கு உபகரணமான பந்து பொருந்தி நிற்கின்ற விரல்களைப் பெற்றவளே! உனது நாயகனான கண்ண பிரானுடைய திருநாமங்களை நாங்கள் போற்றிப் பாடுவதற்கு, சீர்மை பொருந்திய உன்கை வளையல்கள் ஒலிக்கும் படி நடந்து வந்துசெந்தாமரைப் பூப் போன்ற உன் கையினால், எங்கள் பால் மகிழ்ச்சி கொண்டு தாழ்ப் பாளைத் திறந்திடுக! என்றுகூறும் இக்கருத்துடைய பாடலைத் தான் பாங்குற மேற்கூறியவாறு இசைத்தார்.

பெண் இன்றித் திருமணத்தைச் செய்வதைப் போன்று மிக முக்கியமாயுள்ள நப்பின்னைப் பிராட்டியை விடுத்து வழிப்போக்கர்களைப் போல் உள்ள வாயற் காப்போனை யும் நந்தகோபனையும் பல தேவனையும் பற்றியது பயனற்றது. என்று கண்ணபெருமான் தன் திருவுள்ளத்திற் கொண்டுள்ளான் என்று நினைத்த ஆய்ச்சியர்கள் நப்பின்னைப் பிராட்டியைப் போற்றி உணர்த்தும் பாசுரம் இது.

எம்பெருமானைப் பற்றுபவருக்கு ஒரு சிறப்பு நிலை ஏற்படுவதைப் போல, பிராட்டியைப் பற்றுவோருக்கும் அதனினும் பெருஞ் சிறப்புத் தோன்றும். ஆம் பிராட்டியின் கருணை தானே பெருமானைப் பற்றுதற்கு உபாயமாகும். நெருப்பை அணைப்பதற்கு நீர் தேவை, நீரை அணைப் பதற்கு நீரே போதுமன்றோ?

எம்பெருமானையடைய பிராட்டியை முன்னிட்டே அடைய வேண்டும். அப்படியிருக்க இவர்கள் நப்பின்னை யின் உதவியை நாடியது ஏன்? எம்பெருமான் கண்ணனாக அவதாரம் எடுத்தான், இவனுக்குரிய இனிய துணைவி நப்பின்னையாதலால் இவளை முதலில் பற்ற முனைந்தார் கள் ஆய்ச்சியர்கள்.

மேற் குறித்த பாசுரத்தில் உந்துமதகளிற்றன் என்ற தொடரால், ஒன்றை அறிதல் சிறப்பு. கண்ணபிரானைக்

கூறும் போது, நந்தகோபன் குமரன் என்று நந்தகோபரு டைய பெயரைச் சுட்டிக் கூறுவதைப் போன்று, நப்பின்னையைக் கூறும்போது நந்தகோபரைச் சுட்டியே கூறுகின்றனர். இவ்வாறு கூறுவது நப்பின்னைக்குப் பேருவப்பாகும்.

''உந்துமத களிற்றன்'' என்பதற்கு இருவகையாகப் பொருள் கூறலாம். ''மதகளிற்றை உந்தமவன்'' என்றும் மதம் உந்து களிற்றன் என்றும் பொருள் கொள்ளலாம். இரண்டாவதாகக் கூறியதை, பேராற்றல் படைத்த களிற்றைப் போன்றவன் என்னும் பொருளில் கொள்ள வேண்டும். இந்த இருவகைப் பொருள்களாலும் நந்தகோப னுடைய வலியின் சிறப்பு விளங்கும். நந்தகோபன் தன்னாட்சியில் யானைகள் பலவற்றை உடையவனாயிருந் தான் என்பதை,

''வாரணமாயிரம் சூழவலம் செய்து'' என்னும் பாசுரத் தால் உணரலாம்.

''ஓடாத தோள்வலியன்'' என்பதற்கு இருவகையான பொருள் கூறுவர். நந்தகோபன் போர்க்களத்தில் பகை வரைக் கண்டு அஞ்சி ஓடாத ஆற்றல் பெற்றவன் என்றும் தன்னாட்டில் பகைவர் தன் முன் நடையாடாத தோள் வலிமை பெற்றவன் என்றும் கூறுவர். இத்தகைய வலிமை பெற்ற நந்தகோபாலனின் நாட்டில் கம்சன் நேரடியாக வந்து கண்ணனைத் தாக்காமல் பூதனை அனுப்பியும் சகடா சூரனை அனுப்பியும் தாக்கிட முற்பட்டதைக் கொண்டு அறியலாம்.

கண்ணனைத்துதிப்பதில் அக்கறையுடைய ஆய்ச்சியர்கள் கண்ணனிடம் சேர்ப்பிக்க நப்பின்னை விரும்பும் வகையில் நந்தகோபனைச் சிறப்பித்தப் பின்னரே உதவ வேண்டி னார்கள். நப்பின்னையைக் கும்பர் மகளே என்று கூறாமல், நந்தகோபாலன் மருமகளே என்றதற்கு இளமை

தொடங்கி நந்தகோபாலன் வீட்டிலேயே வளர்ந்து வாழ்க்கையை நடத்திப் பெருமையுற்றுப் புக்ககத்தில் இருப்பதால் இவ்வாறு பாடினார்கள் எனக் கொள்ள வேண்டும். இவ்வாறு பாடிய பின்னரும் எழாமையால் ''நப்பின்னாய்'' என்றார்கள்.

''நப்பின்னாய்'' என்று விளித்தும் எழாமையால், மீண்டும் இவர்கள் அன்புடன்

''கந்தங் கமழும் குழலீ'' என்றார்கள்,

பின்னர் இவர்கள் நப்பின்னையிடம் நீ எங்களிடம் பேசவில்லையென்றாலும் பரிமளத்தைத் தடவிக் கொண் டுள்ள உன் கேசத்திலிருக்கும் வாசனை உன் நிலையைத் தெரிவித்தது என்றார்கள். இதற்கு நப்பின்னை, இவர்கள் நோன்புக்காக மலர் சூடாமல் இருப்பவர்கள் ஆதலால் நான் மலர் சூட்டிக் கொண்டுள்ளதை எண்ணிக் கேலி செய்கின்றார்கள் என்று நினைந்து ஏதும் பேசாமல் இருந்தாள். இதையறிந்த ஆய்ச்சியர்கள்

''கடைதிறவாய்'' என்றார்கள். இதற்கு நப்பின்னை இப்போது நடுநிசிநேரம் ஆதலால் கதவைத் திறக்க இயலாது என்றாள். இவ்வாய்ச்சியர்கள் பொழுது விடிந்து விட்டது என்று

''வந்தெங்கும் கோழி அழைத்தனகாண்'' என இயம்பினார்கள். இதற்கு நப்பின்னை சாமக்கோழி சாமம் தோறும் கூவும் ஆதலால் இது பொழுது விடிந்ததற்கு அடையாளமாகாது என்றாள். அதற்கு இவர்கள்

மாதவிப்

''பந்தற்மேல் பல்காற் குயிலினங்கள் கூவினகாண்'' என்று கூறினார்கள். இதற்கு நப்பின்னை

நீங்கள் குயிலைக் கூவ வைத்திருப்பீர்கள் அது கூவு கின்றது. அது காலைப் போதை உணர்ந்து கூவியது

என்பது பொய் என்று கூறினாள். அதற்கு இவர்கள் இப்படிப் பேசிய நப்பின்னையிடம் அன்பாக

''பந்தார் விரலி'' என்றார்கள். பந்தடித்து விளையாடுவதற்குரிய இளம்பருவம் படைத்தவளே! என்று புகழ்ந்தார்கள். பின்னர் அவள் உள்ளம் கொள்ளும் வகையில் இனிமைதோன்ற

''உன்மைத்துனன் பேர்பாட'' என்றார்கள்.

அதற்கு நப்பின்னை இசைந்து நீங்கள் திறந்து வரும் நிலையில் கதவு சாத்தப் பெற்றுள்ளது. எனவே நீங்கள் திறந்து கொண்டு வாருங்கள் என்றாள். அதற்கு இவர்கள் உன்கையால் கதவைத் திறக்க வேண்டும். அப்படித் திறக்கும்போது உன்னுடைய கை வளையல்கள் குலுங்க வேண்டும். அந்த ஒலியைக் கேட்டு நாங்கள் இன்புற வேண்டும். ஆதலால் உன்னுடைய

''செந்தாமரைக்கையால்'' திறப்பாயாக என்றார் கள். பந்தைப் பிடித்ததால் உன்கை செந்தாமரையைப் போல் சிவந்துள்ளது. அந்த அழகுக் கையால் திறப்பாயாக என்றார்கள்: அப்படித்திறக்கும்போது ஒலிக்கும் வளையளை.

''சீரார் வளை'' என்றார்கள். நீ திறக்கும்போது நீ நாலடி நடந்து திறப்பாய் அல்லவா? அதை நாங்கள் கண்டு களிப்போம் என்பதை இவர்கள்

''வந்து திறவாய்'' என்றார்கள். இதை ''மகிழ்ந்து'' திறவாய் என்று கூறியதால் பிராட்டியின் பெற்றியினை ஆய்ச்சியர்கள் அனுபவிக்கக் கூறப்பெற்றதாகும், பிறகு, பிராட்டியான நப்பின்னை கதவைத் திறந்ததும் ஆய்ச்சியர் கள் அனைவரும் நப்பின்னையுடன் சேர்ந்து கண்ண பெருமானை எண்ணியவாறு போற்றி அனுபவித்தார்கள் என இப்பாசுரம் இயம்புகிறது.

## பாவையில் இலக்கியச் செய்திகள்

நந்த கோபாலன் களிற்றினை வீழ்த்தியவன். இத்தகையவனின் திறத்திற்கு ஒப்புமை காட்ட வியலாது. வீரன் எப்படியிருக்க வேண்டும் என்பதற்கு அவன் சான்றாவான். பெரிய வீரனின் திறத்தைவிரித்துத் என்னும் தெய்வப் புலவர் திருவள்ளுவர் படைச்செருக்கு அதிகாரத்தில் நான்காம் குறல் பாட்டில்

''கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்''

என்று கூறுகின்றார். இதற்குப் பொருள் கூற வந்த பரிமேலழகர். தன் கைப்படையாய வேலைத் தன் மேல் வந்த களிற்றோடு போக்கி வருகின்ற களிற்றுக்கு வேல் தேடித்திரிவான், தன் மார்பின் கண்ணின்ற வேலைப் பறித்து மகிழ்வான். களிற்றொடு போக்கல் களிற்றினது உயிரைக் கொண்டு போமாறு விடுதல்; இதனால் மகிழ்ச்சி தேடியது எனலாம் என்று கூறுவார். இக்கருத்தை நந்தகோபன் வீரத்திற்கு உவமையாகக் காட்ட கோதைப் பிரட்டி

''உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்
நந்தகோ பாலன்''

என்றார். இதனால் அவனின் வீரத்தின் ஆற்றலைத் திருவள்ளுவர் கூறிய மேற்குறித்த குறளுக்குப் பொருந்து மாறுள்ளதை அறிந்து இன்புறலாம்.

பிறந்தகத்தின் பெருமையைப் புக்ககத்தின் பெருமை யினை உயர்த்துவதால்தான் வெளிப்படுத்த இயலும். அந்தவகையில் நந்தகோபாலன் மருமகள் நப்பின்னை நடந்து காட்டினாள். புக்ககத்தின் வாழ்வே தக்கதென வாழ்ந்த சங்க இலக்கியப் பெண்ணணங்கு ஒருத்திக் கூறுவதாக,

''இராமழை பெய்த வீர வீரத்துள்
பனைநுகங் கொண்டு யானையேர் பூட்டி
வெள்ளி விதைத்துப் பொன்னே விளையினும்
வேண்டேன் பிறந்தகத் தீண்டிய வாழ்வே!
செங்கேழ் வரகுப் பசுங்கதிர் கொய்து
கன்று காத்துக் குன்றில் உணக்கி
ஊடுபதர் போக்கி முன்னுதவி னோர்க்குதவிக்
காடுகழி யிந்தனம் பாடு பார்த்தெடுத்துக்
குப்பைக் கீரை உப்பின்றி வெந்ததை
இரவற் றாலம் பரிவுடன் வாங்கிச்
சோறது கொண்டு பீறல டைத்தே
ஒன்றுவிட் டொருநாள் தின்று கிடப்பினும்
நன்றே தோழி! நங்கணவன் வாழ்வே!

என்று பாடப்பெற்றதில்பிறந்தகத்தின் வாழ்விலேபெருமை தரத்தக்க வகையில் வெள்ளி விதைத்துப் பொன் விளையினும் அவ்வாழ்வு எனக்குச் சிறந்ததாகாது. உப்பில்லாக் கேழ்வரகுக்கூழும் குப்பைக் கீரையும் ஒன்றுவிட்டு ஒரு நாள் கிட்டப்பெற்றாலும் அந்தப் புக்கக வாழ்வே புனித மானது என்று கூறிய நங்கையின் வாழ்வைப் போல் வாழ்பவள் நப்பின்னை. பிறந்தகத்தை எண்ணாமல் புக்ககத்தைப் பெருமையாக எண்ணிச் சிறக்க வாழ்பவள். என்பதால் அவரைக் கோதைப் பிரட்டியார்.

''நந்தகோபாலன் மருமகளே நப்பின்னாய்''

என்று சிறக்க விளித்துப் பாடுகின்றார். பெண்ணின் கூந்தல் இயல்பாகவே வாசமுடையது என்ற கருத்து நாட்டில் பரவலாகப்பேசப்படுகிறது. இயல்பாகவே பெண் மக்களின் கூந்தலில் வாசம் உள்ளது என்று சிவபெருமானே கூறியதாகச் செய்தி. அதை இல்லையென்று மறுத்த புலவர் நக்கீரனார் என்று கூறுவர். இவர்கள் வாக்கு வாதத்திற்குரிய பாடலே

''கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமம் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீயிய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீயறியும் பூவே!''

என்று குறுந்தொகையில் உள்ளது. இதில் வண்டைப் பார்த்து நீபல மலர்களில் தேனை உண்ணச் செல்கின்றாய். அம்மலர்களின் வாசம் இந்த அரிவையான பெண்ணின் கூந்தலில் உள்ள வாசனையைவிட மிகுதியாமோ? கூறுவாயாக எனக் கேட்கப்படுகிறது அடுத்து நற்றிணையில்

''வண்டுபடு நாற்றத் திருள்புரை கூந்தல்''

என்றும்,

''மண நாறு கதுப்பினாய்'' என்று கலித்தொகையும்

''நாறிருங் கூந்தல்'' என்று புறநானூறும் பேசுகிறது. இதைக் கோதைப்பிராட்டியார்

''கந்தங் கமழுங் குழலீ''

என்று திருப்பாவையில் பாடிப் பெண்ணின் கூந்தலில் உள்ள மணத்தை இயம்புகின்றார்.

பெரும்பாணாற்றுப் படை

''நள்ளிருள் விடியற் புள்ளெழ''

என்றும் மலைபடு கடாத்தில்

''புலரி விடியல் புள்ஓர்த்துக் கழிமின்''

என்றும், மதுரைக் காஞ்சியில்

''பொறிமயிர் வாரணம் வைகறை யியம்ப
யானையங் குருகின் சேவலொடு காம
ரன்னங் கரைய அணிமயி லகவ''

என்று பாடியவாறு கோதைப்பிராட்டியார் பொழுது புலர்ந்ததை அறிவிக்க

''வந்தெங்கும் கோழி அழைத்தனகாண்''

என்று பாடித் தெரிவித்தல் காணலாம். இச் செய்தியைப் போன்று பெரிய திருமொழியில்

''கோழி கூவென்னுமால் தோழி! நான் என்செய்கேன்
ஆழிவண்ணர் வரும் பொழுதாயிற்றுக்
கோழி கூவென்னுமால்''

என்று திருமங்கையாழ்வார் பாடுவார். குயில் கூவுவதை,

புணர்ந்தீர் புணர்மினோ வென்...
இருங்குயில் எதிர்குரல் பயிற்றும்

என்று நற்றிணையும்,

''கூடிப் புணர்ந்தீர் பிரியன் மினீடிப்
பிரிந்தீர் புணர்தருமின் என்பன போல....
இருங்குயிலான் அகவும்''

என்று கலித்தொகையும்

''ஊடினீர் எல்லாம் உருவிலான்தன் ஆணை
கூடுமின் என்று குயில்சாற்ற''

என்று சிலப்பதிகாரமும் பேசுதல் காணலாம். இதைக் கோதைப் பிராட்டியார் தம் திருப்பாவையில்

''..........மாதவிப்

பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவின''

என்று பாடுகின்றார். மேற்குறித்த சங்கப் பாடல்களில் கூவியக் குயில்கள் புணர்ச்சி நிலையினை வெளிப்படுத்தின. கோதை கூறிய குயில் காலைப் பொழுதை உணர்த்தியது. கோதையார் பாடிய நாச்சியார் திருமொழியில்

''கொத்தலர் காவின் மணித்தடங்கண் படை
கொள்ளும் இளங்குயிலே என் தத்துவனை வரக்
கூகிற்றி யாகில் தலையால் கை மாறிலேனே''

என்ற இதில் குயிலிடம் கண்ணபெருமான் என்னிடம் வரக் கூவுவாய் எனப் பாடப்பெற்றது. காலத்தோடு எழுந்து கடப்பாட்டில் தலைப்படவேண்டும் எனக்கூறிய கோதைப் பிராட்டியாரின் கருத்துச் சிறக்க காலத்தைப் பற்றித் தம் திருவிருத்தத்தில்,

''பலபலவூழி களாயிடுமன்றியோர் நாழிகையைப்
பலபல கூறிட்ட கூறாயிடும்''

என்று நம்மாழ்வார் பாடுவார். பந்தார் விரலைப் பெற்ற செந்தாமரை நிறத்தைப் பெற்ற நப்பின்னையின் அழகுடைய கைகளில் உள்ள வளையல்கள் பிறரைஈர்க்கும் வகையில் உள்ளதை, செவிகளில் இனிமையொலி பாய்விப் பதைக் கோதையார்

''சீரார் வளை யொலிப்ப''

என்றார். இதைத் தெளிவிக்கும் நிலையில்

''தாமுகக்கும் சங்கமே போலாவோ
யாமுகக்கும் மென்கையிற் சங்கமும் ஏந்திழையீர்''

என்று வரும் பாடலால் பெண் மக்கள் அணிந்த வளையல் களின் பெற்றியினைக் காணலாம்.''

இராமாநுசர் உஞ்சவிருத்தி வேண்டி, இந்தப்பாடலில் வரும் பந்தார் விரலி என்று வரும் அடிகளைப் பாடிக் கொண்டு பெரிய நம்பியின் இல்லம் சென்றார். அப்போது பெரிய நம்பியின் மகள் அறஞ்செய்ய வந்த அத்துழாயைக் கண்ட இராமநுசர் நப்பின்னை என்று மயங்கி வீழ்ந்த தாகப் பெரியவர்கள் கருத்து. எனவே இந்தப் பாசுரத்தில் அம்மையைக் கொண்டு அருளாளனைப் பற்ற வேண்டும் என்ற நியதிப்படி, கோதைப் பிராட்டியார் நப்பின்னை யான அன்னையின் மூலம் நலம் விளைக்கும் கண்ணனைப் பெற முனைந்தார்.

*அவர் அந்த ஆராவமுதனை அடைய முனைந்ததைப் போன்றே நாமும் முனைந்து பெற நமக்கும் வழிகாட்டினார். கதவுகள் மூடியிருந்து அவனைக் காணவொட்டாது தடுத்ததைப் போன்று, நம் மனத்தில் அகங்காரம் மமகாரம் என்பன போன்ற கதவுகள் உள்ளன. அவை உவப்பருளும் அமுதனைக் காணவியலாதவாறு தடுக்கின்றன. எனவே இவற்றை ஆசிரியரின் துணைக்கொண்டு நீக்கி அவனைப் பற்றுதலே சிறந்ததென்று இப்பாசுரத்தில் விளக்கிக் காட்டிய கோதையின் பாவைத் தமிழைப்பாடிக் கோடியின்பம் எய்துவோமாக!*

அன்னையைப் பாடுவோம் !

*"நப்பின்னை மூலம் நயந்து கண்ணபிரான்*
*அப்பனைப் பற்ற அகம்குழைந்து—கோதைத்தாய்*
*இன்பத் திருப்பாவை யாத்துப் படைத்தளித்த*
*அன்னையைப் பாடுவோம் ஆர்ந்து!"*

# மலர்மார்பன் தன்னை வணங்கு!

ஒப்பில்லா நப்பின்னை உத்தமி தன்னுடனே
ஒப்பற்ற கண்ணன் உறங்குகின்றான்—அப்பனையே
செப்பி எழுப்பித் திருப்பாவை தந்தகோதை
ஒப்பின்றி நின்றார் உயர்ந்து.

—கவிய முதனார்

ஒப்பில்லாத வகையில் சிறந்து மிளிர்ந்தவள் நப்பின்னை; அன்பில் அறிவில் அழகில் ஈடும் எடுப்புமற்றுத் திகழ்ந்தவள். அப்பிராட்டியுடன் ஒப்பற்றவனாகிய கண்ணபிரான் துயில்கின்றான்; அந்த அப்பனைச் செப்பி எழுப்புகின்றார் கோதை. அதுவும் திருப்பாவைப் பாட்டிசைத்து எழுப்புகின்றார். இதனால் இவர் ஒப்புயர்வற்றவராய் விளங்குகின்றார். அருளாளனை எழுப்ப எண்ணி அவனுக்குத் திருப்பாவையை இசைத்ததால் இவர் பெருமையுற்றார் என்று கவியமுதனார் மேற்குறித்த வெண்பாவில் விளம்புகின்றார்.

பத்தவதார மூர்த்தியான பரந்தாமனை நயந்து பாடுகின்றார் கோதை. அவன் அருளினைப் பெற உவந்து வேண்டுகின்றார்.

குத்து விளக்கு எரிந்து நாற்புறமும் ஒளி மழையைப் பொழிந்து கொண்டிருக்கின்றது. யானைத் தந்தத்தைக்

கொண்டு சிறந்த முறையில் செய்த கட்டிலில், அழகு, குளிர்ச்சி, மென்மை, வெண்மை, வாசனை ஆகியவை கொண்ட மெத்தை விரிக்கப்பட்டிருந்ததில்,

கொத்துக் கொத்தாக அலரும் நிலையில் இருந்த மலர்களைச் சூடியிருந்த நப்பின்னைப் பிராட்டியார் படுத்திருந்தாள். இத்தகைய அழகுடையாளொடு கண்ணபிரான் படுத்திருந்தான். அவனைப் பள்ளி உணர்த்திய ஆய்ச்சியர்கள். எழிலான அழகிய பெரிய மார்பினை உடையவனே? உன்னுடைய திருவாயினைத் திறந்து ஒரு வார்த்தை கூடப் பேச மாட்டாயா? என்று கேட்டார்கள். அவன் வாய் திறவாததால் அவர்கள், உடன் உறங்கும் நப்பின்னையிடம், மையைக் கண்களில் இட்டுக்கொண்டு, காண்பார் வியக்க அலங்கரித்துக் கொண்டு அகன்ற கண்களையுடைய நீயேனும் வந்து எம்மை ஏன் என்று கேட்க மாட்டாயா? என்றார்கள். உன் இணக்கத்திற்கு உரிய கண்ணனை ஒரு நொடிப் போதும், விட்டு அகலாமல் இருக்கின்றாயே! எம்பெருமானும் உன் பிடியிலிருந்து எழுந்துவர இயலாமல், நீ அவனைப் பற்றிக் கொண்டிருத்தல் நன்றாகுமோ? கைநொடிப் போதும் அவனை விட்டுப் பிரியாமல் இருக்கின்றாயே. பிரிந்தால் உயிர் தரிக்க மாட்டாய் போலும்;

நீ இவ்வாறு இருத்தல் ஏற்புடையதாகாது; எல்லோருக்கும் அவனை உதவச் செய்பவள் நீ! சிறந்த அறத்தின் நாயகியாக விளங்கும் நீ! இவ்வாறு இருத்தல் அழகன்று. எனவே? நீ எழுந்து வந்து எமக்கு உதவி செய்வாயாக! என்று ஆய்ச்சியர்கள் கோருவதாகக் கோதைப் பிராட்டியார்.

''குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறிக்
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய்

*மைத்தடங் கண்ணினாய்! நீஉன் மணாளனை*
*எத்தனை போதும் துயிலெழ ஒட்டாய்காண்*
*எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்*
*தத்துவ மன்று தகவேலோர் எம்பாவாய்!*

என்று பாடுவார். முன்பாசுரத்தில் 'சீரார் வளை யொலிப்ப வந்து திறவாய்' என்று நப்பின்னையை எழுப்பினார்கள்; எழுந்தவள் கதவைத் திறக்க வந்த போது, கண்ணன் தடுத்தான். தன்னடியார்களுக்குத் தானே உதவ வேண்டுமென்று தடுத்தான். கண்ணன் திறக்க வந்தபோது நப்பின்னை தடுத்தாள். தன்னை வேண்டுவோருக்குத் தடங்கலின்றி உதவுபவள் ஆகவே, தன்னை வேண்டியவர்களுக்கு அருள நப்பின்னை கதவைத் திறக்க முற்பட்டாள்.

முதலில் எழுப்ப வேண்டியவள் நப்பின்னை, வந்தவர் கள் முதலில் கண்ணனை எழுப்பி விட்டதால் இந்த இடர்ப்பாடு கண்ணனுக்கும் நப்பின்னைக்கும் நிகழ்ந்தது. இத்தவறைச் செய்தவர்கள் எழுப்ப வந்த ஆய்ச்சியர்கள், இதைப் பின்னர் உணர்ந்த இவர்கள் நப்பின்னைப் பிராட்டியின் மூலம் பயன் காண அவளை எழுப்பி னார்கள்.

இப்பாசுரத்தில் முதல் இரண்டு சீர்களில்

''குத்து விளக்கெரிய''

என்று கூறியதில், அருளாளனின் அழகினை விளம்பிப் போற்றும் தன்மையில் விளக்குகள் ஒளி மழை பொழிந்தன. விளக்குகள் இருந்த இடத்தில் இருந்தே ஒளியைப் பொழிந்து சுற்றியிருக்கும் பொருளை அறிவிப்பன. இவற்றைப் போன்று அவன் ஓரிடத்திலிருந்து கொண்டே உலகம் அனைத்திற்கும் நலஞ்செய்பவன். அவனை இக் குத்து விளக்கின் ஒளியாக, நப்பின்னை போற்றியதாகக் கூறலாம். விளக்கொளி போல் மெய்த்தவமான ஐயனைத் துதித்தாள் நப்பின்னை.

''கோட்டுக் கால் கட்டில்மேல்''

மெத்தென்ன பஞ்ச சயனத்தின் மேலேறிப் படுத்து கிடந்த இடத்திலேயே வெள்ளத்தின் மேல் கிடந்தவனை எண்ணு கின்றாள். இல்லை தம் பக்கத்திலேயே வைத்து அனுபவிக் கின்றாள் நப்பின்னை.

''மெத்தென்ன பஞ்ச சயனம்''

என்றதால், குளிர்ச்சி, மணம், வெண்மை, மென்மை, அழகு ஆகிய ஐந்து தன்மைகள் அம்மெத்தை பெற்றி ருந்தது. இவை ஐந்தும் உருவமற்ற பொருள்கள். இவற்றை வெளிப்படுத்தும் உருவமுடைய பொருள்கள், தளிர், மலர், பஞ்சு, கம்பளம், பட்டு என்பன. இவற்றின் குணங் களுக்கு ஒப்பாவாள் நப்பின்னை.

''கொத்தலர் பூங்குழல் நப்பின்னை''

என்றதால் அலரும் தன்மையில் இருந்த மலரைக் கூந்தலில் அணிந்திருந்தாள் நப்பின்னை,

''வைத்துக் கிடந்த மலர் மார்பா''

மலர் மார்பன், நப்பின்னையின் மார்பில் படுத்திருந்தான் என்பதைக் குறித்தார். அவன் அனந்தனின் மேல் பள்ளிகொண்டிருந்ததைப் போலே நப்பின்னையின் மார்பின் மேல் கிடந்தான் எனக்காட்சி படுத்திக் காட்டினார் கோதை.

''மாசூணாச் சுடர் உடம்பாய் மலராது குவியாது'' என்று கூறுவதைப் போன்று எம்பெருமான் வடிவம் என்றும் ஒரே தன்மையையுடையது என்பதை உணர்த்த,

''மலர் மார்பா''

என்று குறித்தார். அவன் திருமார்பைப் பற்றித் திரு விருத்தத்தில் நம்மாழ்வார்.

''புடைக்கலர்ந்தானை''

என்று பாடுவார்; 'யசோதைப் பிராட்டியார் கண்ணனைத் தூணில் கட்டியபோது அவன் மார்பு அகலமாக' விரிந்தது' என்று காட்டுவார்.

''மலர் மார்பா'' எழுந்து வாராய் என்று கூறாமல்' வாய்திறவாய் என்றதால், வானத்தில் மேகங்கள் இருந்த இடத்திலிருந்தே இடி முழக்கம் செய்வனபோல், நீ கிடந்தவாறே வாய்திறந்து பேசுவாயாக என்றது. உன் மார்பினை நப்பின்னைக்குத் தந்தாலும் உன் பேச்சை யேனும் எங்களுக்குத் தரலாகாதா என்று ஆய்ச்சியர்கள் கோரினார்கள்.

அவன் பேசாமலிருந்ததால், இவர்கள் நப்பின்னையை நோக்கி.

''மைத்தடங் கண்ணினாய்''

என்று விளித்தார்கள். நாங்கள் அவனை அடைய நோன்பு நோற்பதால் எங்கள் கண்களில் மையிட்டுக் கொள்ள வில்லை. நீ அவனை அடைந்து விட்டதால் அவன் விருப்பத்திற்காக மையிட்டுள்ளாய், உன் நிலையை நாங்கள்அடைய,நீதான்அருள்புரியவேண்டுமென்றார்கள்.

''உன் மணாளனை''

என்றதில், உலகத்துக்கே நாயகனான அவனை நீ மட்டும் நாயகனாகப் பெற்றிருத்தல் தன்னலமாகும் என்றார்கள்.

''எத்தனை யேலும் பிரிவு ஆற்றகில்லாய்''

என்றதில் அவனைப் பிரிந்தால் ஒரு நொடிப்போதும் உயிர்தரிக்க மாட்டாய் ஆதலால் அவனைவிட்டுப் பிரியாமல் இருக்கின்றாயா? என்று கூறப்பெற்றது. இதில் ஓர் அருமையான செய்தியைக் கூறுகின்றார். அருளும்படி செய்யும் மன நோக்குடைய நப்பின்னை விட்டுப் பிரிந்தால், அருளுகின்ற தன்மை அவனிடம் இல்லாமல் போகும் என்பதால்,

பிரியாமல் இருக்கின்றாள் நப்பின்னை எனக் கூறியதாகும்.

''தத்துவம் அன்று தகவு''

என்றதில் இருவகையான கருத்தைக் காணலாம். நாங்கள் உண்மையை உன்னிடம் சொன்னோம். நீ உதவாமலிருப்பது தகுதியன்று எனக் கூறியது ஒருவகை, எங்கள் மேல் உனக்கு உண்மையான அன்பு இருப்பதாக நீ உரைத்தது பொய் ஆதலால் நீ கூறியது உண்மையன்று என்பது மற்றொரு வகை.

## பாவையில் இலக்கியச் செய்திகள்

சங்க இலக்கியங்கள் பெருமை சான்றன. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பு தோன்றிய அவ்விலக்கியங்கள் கூறும் அறமுடைய செய்திகள் இன்றைக்கும் நன்னெறிகூறு வனவாக உள்ளன. அச்செய்திகளைத் தம் திருப்பாவையில் பெய்து பெருமையாகத் தந்தார் கோதை. நெடுநல் வாடை என்னும் சங்க இலக்கியத்தில், 117ஆம் அடி தொடங்கி 123ஆம் அடிவரை பேசப் படுவனவற்றுள் அக்கால மகளிர் நிலை அழகாகக் கூறப் படுகின்றது.

''பொருதொழி நாக மொழியெயிறு அருகெறிந்து
சீரும் செம்மையும் ஒப்பவல்லோன்
கூருளிக் குயின்று வீரிலை யிடை யிடுபு
தூங்கியன் மகளிர் வீங்குமுலை கடுப்பப்
புடை திரண்டு இருந்த குடத்த விடைதிரண்டு
உள்ளி நோன்முதல் பொருந்தி யடியமைத்துப்
பேரள வெய்திய பெரும் பெயர்ப் பாண்டில்''

என்று கூறுகின்றது. போரிலே வீழ்ந்துபட்ட யானை யின் தந்தங்களைக் கொண்டு சிறந்த கைத்திறன் பெற்ற தச்சனால் செதுக்கிச் செய்த கட்டில்; இது பலநிறமுடைய

மயிர்களை வைத்து, சிங்கமுகம் முதலானவை தோன்றக் கடைந்து செய்யப்பட்டிருந்தது.

''முத்துடைச் சாலேக நாற்றிக்குத் துறுத்து'' என்று கூறும் வகையில் முத்துச் சரங்களை நான்கு புறமும் தொங்க விடப்பட்டிருந்தது.

''முல்லைப் பல்போ துறழப் பூநிரைத்து
மெல்லிதின் விரிந்த சேக்கை''

என்றதில் அக்கட்டிலின்மேல் விரித்துள்ள மென்மையான மெத்தையில் முல்லையுடன் பலவண்ணப் பூவாகிய போதுகளை நிரப்பி இருந்தது. அதில் திரண்ட மார்பினை உடைய அழகிய நங்கை படுத்திருந்த செய்தினை மேற்குறித்த அடிகளால் தெரிவிக்கப்படுகிறது.

''சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேண
முறுதூவி சேக்கை ஓரைந்து''

என்று சேக்கை எனும் பஞ்சசயனத்தைக் குறித்தார். இதில் பெண் படுத்திருந்த மெத்தையில் ஐந்து இனிய பொருள்கள் இருந்தன என்று கூறப் பெற்றது. சீவக சிந்தாமணியில்,

''ஆதரம் பெருகுகின்ற அன்பினால்,
அன்னம் ஒத்தும்''

என்று மெத்தையின் மேல் அன்னத்தூவியைப் பரப்பப் பட்டிருந்தது எனக் கூறப் பெற்றதைக் காணலாம்.

''இணைபட நீலமென் சேக்கையுள்
துணைபுணர் அன்னத்தின் தூவி
மெல்லணை யசைஇ''

எனவரும் கலித் தொகையில் உயர்ந்த நீலப்பட்டால் செய்த மெல்லிய படுக்கையில் துணையைப் புணர்ந்த

காலத்து மெய்யுருகி உதிர்ந்த தூவிகளைப் பரப்பி இருந்ததால், இம்மெத்தை மிக மென்மையுடையதா யிருந்தது. என நச்சினார்க்கினியர் தம் உரையில் கூறு கின்றார். சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோ வடிகள்,

''துணைபுணர் அன்னத் தூவியிற் செறித்த
என்றதற்கு
இணை யணை''

சேவலோடு புணர்ந்த அன்னப்பேடை அப்புணர்ச்சியால் உருகி உதிர்த்த அதன்வயிற்றின் மயிர் என்று கூறி, இதை மெத்தையின்மேல் பரப்பப்பட்டிருந்தது என்பர். இந்த மெத்தையிலே அழகே வடிவான ஒரு பெண் படுத் திருந்தாள் என, அவளின் மார்பிடத்தே அவளின் தலைவன் படுத்துக் கொண்டிருந்தான்.

......''இவள்
இடை முலைக் கிடந்து''

என்று 178ஆம் குறுந்தொகை விவரிக்கின்றது. இதை அகநானூறு 328ஆம் செய்யுளில்,

''இரவின் வந்தெம் மிடைமுலை பொருந்தி''

என்று இயம்புவதால், இரவில் தலைவியின் மார்பின் மீது தலைவன் தலைவைத்துப் படுத்திருந்தான் என விளங்கு கின்றது. இவ்வாறு கூறுகின்ற கருத்தையெலாம்,

''நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக்கிடந்த மலர் மார்பா''

என்று கோதை இப்பாவைப்பாசுரத்தில் இனிது மொழிகின்றார். 'மலர் மார்பா' என்றதால் எம்பெருமானின் அகன்ற அழகிய மார்பை புகன்றார்.

தலைவனின் தோளில் தலைவன் துஞ்சிய நிலையை,
''வேய்புரை மென்தோள் இன்துயில்''
என்று குறிஞ்சிப் பாட்டுக் கூறுதலாலும்,

''வேயுறழ் மென்தோள் துயில்பெறும்''

என்று கலித்தொகை உணர்த்துவதாலும்,

''தோள்புலம் பகலத் துஞ்சி''

என்றும்,

''முருந்தேர் முறுவல் இளையோன்
பெருந்தோள் இன்றுயில் கைவிடுகலானே''

என்று அகநானூறு பகர்வதாலும்,

''தாம்வீழ்வார் மென்தோள் துயிலினிகொல்''

என்று திருக்குறள் உரைப்பதாலும்,

''...... பூத்த முல்லைப்
பசுமுகைத் தாது நாறு நறுநுதல்
அரிவை தோளிணைத் துஞ்சிக்
கழிந்த நாளிவண் வாழுநாளே''

என்று குறுந்தொகை குறிப்பதனாலும், கோதை அருளிய கருத்தின் மாட்சி நனி விளங்கக் காணலாம்.

'தலைவனோடு தலைவி பிரியாமல் இருக்கவே விரும்புவாள். அவனைப் பிரிந்தால் அவளின் மேனி வெளுத்து மெலிந்து காணப்படும். பாசி படர்ந்த குளத்தில் நீரை எடுக்கும்போது, பாசி விலகுதல் போன்று தலைவன் வருகையால் தலைவி மகிழ்ந்திருப்பாள். அவள் உடம்பில் படர்ந்திருந்த பசலை நீங்கிவிடும்' என்பதைப்

''புல்லிக் கிடந்தேன் புடை பெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு''

என்று திருவள்ளுவர் கூறுகின்றார். இதை நம் கோதை,

''மைத்தடங் கண்ணினாய் நீயுன் மணாளனை
எத்தனை போதும் துயிலெழ ஒட்டாய்காண்''

என்று கூறியதில் எம்பெருமானைப் பிரிந்தால் உயிர் தரிக்கமாட்டாள். எனவே அவனோடு பிரியாமல் துயில் கொள்வதைக் கூறுகின்றார்.

''ஊருணி கேணி உண்டுறைத் தொக்க
பாசி யற்றே பசலை காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்தலானே,''

என்று குறுந்தொகை கூறுவதற்கொப்ப, நப்பின்னை எம்பெருமானை விட்டுப் பிரியாது இணைந்து படுத்திருந் தாள். அப்படி படுத்திருப்பவளை நோக்கி,

'எத்தனை நாளைக்கு இவ்வாறு அவனோடு பிரியாமல் படுத்திருப்பாய்' என்று நப்பின்னையைப் பார்த்துக் கோதை கேட்கின்றார். நீ இந்த உலகத்திற்குத் தாய்! அருளாளனைத் தூண்டி அருளிடச் செய்பவள்; என்பதால் அவனைப் பிரியாமல் அவனுடனிருந்து செயற்படுத்து கின்றாயா? என்ற கருத்தில்,

''எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்''

என்று பாடுவார். படர்ந்து விரிந்த இந்த உலகப் பரப்பை நிரல்பட நடத்தும் நாயகனை உணர்த்திச் செயற்பட வைக்கும் நாயகி என்று அவளை உவந்து போற்றுகின்றார் கோதை.

''மலர் மார்பா வாய்திறவாய்'

என்றதில் 'குணமும் குணியும் போல ஒரு பொருளாய் சேர்ந்த நிலையில் இருப்பவர்களைப் பிரித்தலாகாது" என்று கூறும் கருத்துப்படி, எம்பெருமானைத் தானிருந்த இடத்திலிருந்தே பேசும்படி வேண்டியது இது. அவன் எங்கிருந்தாலும் வேண்டுவார்க்கு அங்கிருந்தே அருள்பவன் ஆதலால் அவனை அங்கிருந்தே பேசுமாறு கோருகின்றார். அவன் அருளாட்சியை நாங்கள் பெற முடியாத நிலையில், நீ அவனைக் கட்டிக் கொண்டும் அவன் எழுந்து வராதபடி யும் செய்வது உனக்கு அழகல்ல! என்று கூறியவர்,

''தத்துவ மன்று தகவு''

என்றார். இப்பாசுரத்தில் ஐந்து நிலைகளைக் காட்டு கின்றார். இறைநிலை, உயிர்நிலை, தடை நிலை, உபாய நிலை, பயன்நிலை என்பன. இவை பிராட்டியால் நிகழ்த்தப்படுகின்றன. கண்ணபிரான் நப்பின்னையின் தூண்டுதலால் உயிர்க் குலம் தோற்றம் முதலான வற்றைக் காணச் செய்கின்றான் என்பதைக் காட்டவே இப்பாசுரத்தில் பிராட்டிக்கு முதன்மை தந்து பாடினார் கோதை. எனவே நாமெல்லாம் கோதையுணர்த்திய வழியில் தொழிற்பட்டுக் கோவிந்தன் திருவருளைப் பெற்று உய்வோமாக!

### மாதவனைக் காண்போம்

ஞான நெறியனைத்தும் நற்றிருப் பாவையிலே
தேனாய்ச் சுவைப்பார்க்குத் தீந்தமிழில் தந்தவர்
கோதை அருள்உணர்வைக் கூடி அனுபவித்து
மாதவனைக் காண்போம் மகிழ்ந்து!

# விமலனைப் பாடு விழைந்து!

முப்பத்து மூன்றாய் மொழியும்தே வர்க்கெல்லாம்
கப்பம் தவிர்த்தமேகக் கண்ணனிடம்—இப்போதே
வந்தின்பம் தாவென்று வாய்மணக்கக்
கோதையன்னை
தந்ததிருப் பாவையே சால்பு.

—கவியமுதனார்

'முப்பத்து முக்கோடி தேவர்களுக்கெல்லாம் பகைவர்களால் ஏற்பட்ட நடுக்கத்தைத் துடைத்தவன் மேக வண்ணன். அவனிடம் இப்போதே வந்து தம்மை ஏற்றுக் கொண்டு இன்பம் நல்க கோதை அன்னையார், வாய் மணக்கத் தமிழ்த்திருப் பாவையினைச் சால்புடன் பாடியருளினார்' என்று கவியமுதனார் மேற்குறித்த வெண்பாவால் பாடித் தெரிவிக்கின்றார். இவ் வெண்பாவின் ஈற்றடியில் திருப்பாவையே சால்பு'' என்று குறித்ததில், திருப்பாவையின் பெருமையினைக் குறித்ததோடு, இப் பாவையைப் பாடுவோரும் சிறப்பை எய்துவார்கள் என்றும் குறித்துள்ளார்.

திருப்பாவை அருளாளனைக் காட்டும் கண்ணாடியாகும். ஆம் எம்பெருமானின் ஏற்றத்தையெல்லாம் இதில் போற்றிக் கூறியுள்ளார் கோதைப் பிராட்டியார்.

இவ்வாறு இனிது பாடியருளிய திருப்பாவையின் இருபதாம் பாசுரத்தில் அவரின் உணர்வைப் பார்க்க முயலுவோம்.

முப்பத்து முக்கோடி தேவர்களுக்குத் துன்பம் நிகழ்வ தாக இருந்தது. அத்துன்பம் ஏற்படுவதற்கு முன்பே எழுந்தருளி அவர்களின் நடுக்கத்தைத் தீர்த்த கண்ண பெருமானே! பரிமளம் மிகுந்த படுக்கையில் பாங்குடன் படுத்து இருப்பதைவிட்டு எழுந்து வருவாயாக! வியக்கின்ற செயலைச் செய்து உயர்வில் நிற்பவனே! பகைவரின் கொடுமையை வீழ்த்தும் வலிமையுடையவனே? விரோதி களுக்கு அச்சத்தையுண்டாக்கும் ஆற்றல் உடையவனே! தூய நெறியாளனே! நீ துயில் கொள்வதை விட்டு எழுந்து வருவாயாக!

பொற்கலசம் போன்று, விரக தாபத்தை உண்டாக்கு கின்ற மார்பகத்தையும், சிவந்த வாயையும், நுண்ணிய இடையையும், உடைய ஒப்பிலா நப்பினைப் பிராட்டியே! அருளும் திருமகளே! அன்புடைய அன்னையே! துயில்வதை விட்டு எழுந்து வருவாயாக! நீ துயிலுதல்விட்டு எழுந்து வந்து நோன்புக்கு வேண்டிய பொருளான விசிறியையும், கண்ணாடியையும் கொடுத்து உதவுவதோடு, நோன்பு சிறக்க உன் நாயகனான கண்ணபெருமானையும் எம்முடன் அனுப்பி வைத்து, எம் விருப்பத்தை நிறைவேற்ற இப்போதே நீயே உடன் வந்து நீராட்ட வேண்டுமென்று கோருகின்ற வகையில், கோதைப் பிராட்டியார்,

''முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே! துயிலெழாய்!
செப்பம் உடையாய்! திறலுடையாய்! செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா! துயிலெழாய்;
செப்பன்ன மென்முலை செவ்வாய்ச் சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய்! திருவே! துயிலெழாய்!
உக்கமும் தட்டொளியும் தந்துன் மணாளனை
இப்போதே எம்மைநீ ராட்டேலோர் எம்பாவாய்!''

என்று இந்தச் செந்தமிழ்ப் பாசுரத்தைச் சிந்தை மகிழப் பாடியருளினார். இப்பாசுரத்தில் ஒப்பில்லா அப்பனான— அருளாளனை எழுப்பியப் பின்னர், செப்பவொண்ணா எழிலைப் பெற்று விளங்கும் நப்பின்னைப் பிராட்டியையும் எழுப்புகின்றார்கள் ஆயச்சிறுமியர்கள். இவ்வாறு எழுப்பிய முறை ஏற்றம் அருள்வது அன்று என்று உணர்ந்த இச்சிறுமியர்கள் பின்னர் பிராட்டியின் மூலம் பெருமானின் அருளைப் பெற எண்ணி நப்பின்னைப் பிராட்டியிடம் தம் எண்ணத்தை எடுத்துக்கூறி இப்போதே வந்து உதவிட வேண்டுகின்றார்கள்.

''முப்பத்து மூவர் அமரர்— என்று கூறியதில் முப்பத்து மூன்று தலைமையினரான தேவர்கள், பிரிவு ஒன்றுக்கு ஒருகோடிப் பேராக, முப்பத்து மூவர்க்கும் முப்பத்து முக்கோடி தேவர்கள் எனக்குறித்தார் கோதை. வடமொழிக் கருத்தைத் தமிழ்நெறியில் சுருக்கி முப்பத்து மூவர்'' என்றார்.

ஆய்ச்சியர்கள், தேவர்களின் துயரைத்தீர்த்த எம்பெருமானிடம், உனக்கே நாம் ஆட் செய்வோம்,

எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றனோடு
உற்றோமே யாவோம்' என்று கூறி வேண்டுபவர்கள்.

உன்னையன்றி எமக்கும் வேறு கதியில்லை என்று குறித்தார்கள். இதில், தேவர்களுக்கு உதவிய நீ! உன்னையே நம்பிப் போற்றுகின்ற அன்பர்களான எங்களுக்கு உதவ வாராமலிருத்தல் நலமோ? என்று கூறுகின்றார்கள்; ஆடவர்களுக்கெல்லாம் ஆக்கம் நல்கிய நீ! பெண்களாகிய எங்களுக்கு உன் திருவருளை வழங்காமலிருக்கின்றாய்! ஏனோ? என்று கோருகின்றார்கள். இப்பாசுரத்தின் முதலடியில் ''முன் சென்று'', என்ற தொடருக்கு, தேவர்களுக்குத் தீங்கு வருவதற்கு முன்பே எம்பெருமான் சென்று அவர்களின் நடுக்கத்தைப் போக்கினான் என்று பொருள் கொள்ளவேண்டும். அசுரர்களால் குடியிருப்பையும்

இழந்து, புகலிட மற்று, நடுக்கமுற்ற தேவர்களின் துயரத்தைக் களைந்த எம்பெருமானின் சிறப்பை மேற் குறித்த தொடர் தெரிவிக்கக் காணலாம்.

''கப்பம் தவிர்க்கும் கலியே''— என்ற தொடர் மொழியில் உள்ள ''கலி'' என்பது வலிமைக்குப் பேராய் உள்ளது. இஃது வலிமையுடையோனுக்குப் பேராய் அமையவில்லை. எனவே, இதைத் தவிர்க்கும் 'கலியே' என்று, ஒரு சொற்றொடர் ஆக்கி அன்மொழித் தொகை யாகக் கொண்டு, தவிர்க்க வல்ல வலியையுடையவனே! எனப்பொருள் கொள்ளுதல் மிகப் பொருத்தமென்று இலக்கண நுட்பம் தெரிந்தவர்கள் கூறுகின்றார்கள். இது கோதையின் இலக்கணத் திறத்தைக் காட்டுகிறது.

எல்லாவற்றையும் காக்கவல்ல எம்பெருமானுக்கே உரியதாகையால் 'கலி' என்னும் சொல்லைப் பெய்து அருளாளனின் பெருமையைக் கோதை குறித்துக் காட்டி னார் என்று எண்ணிப் போற்றுதல் சிறப்பு.

செப்பமுடையாய் —என்பதற்கு இருவகையாகப் பொருள் கூறலாம். ஒன்று விரோதிகளை அழிக்கப் போர் புரிந்த போது, தனக்கு ஒரு கெடுதியும் வாராமல் காத்துப் போர் புரிந்த செவ்வி உடையவனே என்பது; மற்றொன்று, நினைப்பு, சொல், செயல் ஆகியவை ஒன்றாக விளங்கும் வகையில்,

பல்வகையான உயிர்களுடனே தொடர்பு கொண்டு, செயற்படுத்தும் திறத்தோடு நிற்கும் இவன், எவர்க்கும் இனியனாய், இன்பம் அருள்பவனாய் இருக்கும் சிறந்த குணத்தையுடையவனே! என்பதைக் குறித்ததாகும். செப்பம் என்பது பண்புப் பெயர் ஆதலால். அப்பண்பில் சிறந்த எம்பெருமானைச் செப்பம் உடையாய் என்று இன்பம் தோன்ற சொன்னார் கோதை.

வெப்பம்— என்று கூறிய இச்சொல்லை, எம்பெருமானுக்கு எதிரியாக இருந்தவர்கள் அஞ்சி நடுங்கி வாழ்ந்தார்கள் என்பதைத் தெரிவிக்க எடுத்தாண்டார். பகைவர்கள் தன்னைப் பார்த்ததும் ஏற்படும் சுடர்ஒளி அவர்களை அஞ்சி ஓடுமாறு செய்யும் என்ற எம்பெருமானின் தன்மையை ''வெப்பம் கொடுக்கும்'' என்ற தொடரால் விளக்கினார்.

'விமலா' என்றது எல்லா உயிர்களுக்கும் தொல்லை நிகழாதவாறு காக்கும் பரம்பொருள், தன்னடியார்களுக்குப் பகைவர்களால் உண்டாகும் துன்பங்களை ஒழிக்க அக்கொடியவர்களை அழிப்பதனால் அருளாளனுக்கு எந்த வித குறையும் ஏற்படுவதில்லை என்பதை எடுத்துக் காட்டக் கூறியது. இவ்வாறு அவனைச் சிறப்பித்து, ஆய்ச்சியர்கள் கூறியவற்றிற்கெல்லாம், அவன் வாய் திறந்து பேசாமல் அமைதியுடன் இருந்தான்.

பின்னர் இவர்கள் நப்பின்னையை எழுப்புதற்கு, செப்பென்ன மென்முலை— என்று, மார்பகத்தின் சீர்மையைக் கூறினார்கள். இத்தொடர்மொழியை ஆண்ட கோதைப் பிராட்டியார் தாம் ஒரு சிறந்த கவிஞர் என்பதைக் காட்டினார் என்று பெருமையாகச் சொல்லலாம். ஒரு பெண் தன் விரக தாபத்தைப் பொறுத்துக் கொள்ள இயலாமல் இருக்கும் தன்மையை ''மென் முலை'' என்ற தொடரால் கோதை குறித்தார்.

திருவே துயிலெழாய் என்றது திருமகளின் எல்லாச் சிறப்புத் தன்மைகளையும் கொண்டு, அடியார்கள்பால் இரக்கம் காட்டி உதவுகின்ற பண்பில் உயர்ந்து விளங்குவதால் நப்பின்னைப் பிராட்டியை மேற்குறித்த பெயரால் சிறப்பித்தார்.

''துயிலெழலாய்'' என்றதைக் கேட்டவுடன் நப்பின்னை ஆய்ச்சியரிடம் நான் உறங்கவில்லை. உங்கள்

நன்மைக்காகவே நான் விழித்துக் கொண்டிருக்கிறேன்! உங்கள் தேவை என்ன என்று நப்பின்னை நயந்து கேட்டாள்.

ஆய்ச்சியர்கள், நோன்புக்கு வேண்டிய கருவிகளான விசிறி, கண்ணாடி முதலியவற்றைத் தருவதோடு. உன் மணாளனையும் எம்முடன் அனுப்பி வைத்து நீயே வந்து எங்களை நீராட்டி வைக்க வேண்டுமென்று நப்பின்னை யிடம் வேண்டினார்கள்.

உள்ளுறைப் பொருள்— தேவர்களுக்கேற்படும் துன்பத்தைத் துடைக்கும் வீரமுடையவனே! உன்னடியார் களைக் காக்கும் கருணையுடையவனே! அற்பர்களை வீழ்த்தி நற்குணமுடையவர்களுக்குக் காப்பாயிருந்து நலஞ் செய்பவனே! பிறப்பு முதலிய தொழில்களைச் செய் தாலும் அவற்றால் குறை நேராதவாறு மிளிரும் விமலனே! வேறு பற்று இன்றி, உன்பற்றை நாடி வந்த எங்களுக்கு அருள் சுரக்க வேண்டுமென்று ஆய்ச்சியர்கள் ஆராவமுத னிடம் வேண்டினார்கள்:

பக்தி வைராக்கியம் ஆகியவற்றைக் காட்டும் திண்மை மனம் பெற்ற நப்பின்னைப் பிராட்டியே! அருள் நல்கும் அன்னையான நீயே எம்பெருமானிடம் எடுத்துக் கூறி உதவி செய்வாயாக! அகப்பற்றையும் புறப்பற்றையும் விலக்கும் விசிறியையும், உள்ளொளியை எடுத்துக்காட்டும் கண்ணாடியையும் எங்களுக்குத் தரவேண்டும்.

கண்ணபெருமானையும் எங்களையும் ஒரு துறையில் நீராடி ஒன்றி இன்பமெய்த வகை செய்ய வேண்டும். இத்திறமை உனக்குத்தான் உண்டு. உன்னை விட்டால் எங்களுக்கு வேறு கதியில்லை என்று ஆய்ச்சியர்கள் கூறுவ தால் அருள் தரச்செய்வது பிராட்டியே என்று உணரலாம்.

கப்பம் தவிர்த்தல் என்றது அஞ்ஞானம் தலையெடுக்கு முன் அதைத் தடுத்து ஆட்கொள்பவன் எம்பெருமான் என்பதை விவரித்தலாகும்.

ஞாலமனைத்திற்கும் நாயகனாய் நின்று நலமருள் பவன் எம்பெருமான் என்றாலும் அடியார்கள் கோரும் நலத்தைக் கொடுக்கத் தூண்டுபவள் எம்பெருமாட்டியே என்பதால், இப்பாசுரத்தில் எம்பெருமாட்டியான நப்பின் னையின் மூலம் ஆய்ச்சியர்கள் வேண்டுவதை மாண்புடன் இசைக்கின்றார் கோதைப்பிராட்டியார்.

## பாவையில் இலக்கியச் செய்திகள்

ஈடும் எடுப்புமற்ற வகையில் திருப்பாவையை அருளிய கோதை, இன்னிசை இன்பம் தோன்றப் பாடினார். இந்த இருபதாம் பாசுரத்தின் தொடக்கத்தில் 'முப்பத்து மூவர் அமரர்' என்று குறித்த அவர்கள் யார்? அவர்களோ ஆதிபிரமனுக்கு நினைவால் தோன்றிய பிரமர் பதின்மரும், இப்பதின்மருள் காசிபன் மக்களாகிய ஆதித்தர் பன்னிரு வரும், வசுக்கள் எண்மரும், அச்வினி தேவர்கள் இருவரும் ஆவார் என்ற விவரத்தை

''.........விதியின் மக்களும்
மாசில் எண்மரும், பதினொரு கபிலரும்
தாமா விருவரும்''

என்று மூன்றாம் பரிபாடலில் (6-7-8 அடிகளில்) முப்பத்து மூன்று தேவர்களை ஆசிரியர் கடுவன் இளவெயினனார் குறித்தார். மேலும் இவரே இந்தப் பரிபாடல் 28ஆம் அடியில்

''நாலெண் தேவரும் நயந்து நிற்பாடுவோர்'' என்று கூறுவார். இதில் முப்பத்து மூன்று தலைவர்களைக் கொண்ட (வசுக்கள் எண்மர்; திவாகரர் பன்னிருவர்; உருத்திரர் பதினொருவர் மருத்துக்கள் இருவர்). முப்பத்து மூன்று கோடி தேவர்களும் விரும்பி நின்னைப் புகழ்வர் என்று கூறுகின்றார்.

எட்டாம் பரிபாடலைப் பாடிய ஆசிரியன் நல்லந்துவனார்:

''உலகிருள் அகற்றிய பதின்மரும் இருவரும்
மருந்துரை இருவரும் திருந்துநூல் எண்மரும்
ஆதிரை முதல்வனிற் கிளந்த
நாதர்பன் னொருவரும்''

எனக் கூறுகிறார். ஆதிரை முதல்வன் பெயரால் சொல்லப் பட்ட நாதர்— உருத்திரர்; இதில் ஆதித்தர் முதலாக உருத்திரர் ஈறாக முப்பத்து மூவரையுங் கூறினார். திருமுருகாற்றுப் படையைப் பாடிய நக்கீரர்.

நால்வே றியற்கைப் பதினொருமூவர் என்று தலைமையுடைய தேவர்கள் முப்பத்து மூவர் எனக் கூறினார். இதையே சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகள்,

''நால்வகை தேவரும் மூவறு கணங்களும்
பால்வகை தெரிந்த பகுதித் தோற்றத்து
வேறு வேறு கடவுளர் சாறு சிறந்தொருபால்''

என்று பாடியதால் முப்பத்துமூன்று கோடித் தேவர்களைப் பற்றி நாம் அறிய தெளிவாக விளக்கிக் கூறினார். இந்த முப்பத்து முக்கோடி தேவர்களெல்லாம் உன்னில் தோன்றியவர்கள் என்பதை

''மாயோய் நின்வயிற் பரந்தவை யுரைத்தேம்
மாயா வாய்மொழி யுரைதர வலந்து''

என்று மூன்றாம் பாடலிற் கூறுதல் காணலாம்.

தேவரும் மூவேழுலகமும் உயிர்ப்பன்மையும், நின்கண் தோன்றின என்று கண்ணபெருமானின் பேராற்றலை மூன்றாம் பரிபாடலின் ஆசிரியர் 10-ஆம் அடியில் அழகுறக் காட்டினார்.

இதைக் கோதை

''முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று
கப்பம் தவிக்கும் கலியே''

எனப் பாடிக் காட்டியவர், எம்பெருமான் முப்பத்து மூவர் களையும் தோற்றுவித்ததோடு அவர்களின் கவலையையும் தவிர்த்தவன் என்று சங்க இலக்கிய ஆசிரியர்களைக் காட்டிலும் இன்னும் ஒரு படி மேலே சென்று கூறியிருக் கின்றார்.

எம்பெருமான் கொடியவரை அஞ்சி நடுங்குமாறு செய் கின்ற தன்மையில் தன் கைகளில் சங்கொடு சக்கரம் ஏந்தி நிற்கின்றான். இந்தச் சங்கின் திறத்தையும் சக்கரத்தின் ஆற்றலையும் இரண்டாம் பரிபாடலில் கீரந்தையார் கூறி யுள்ளார். இப்பாடலில் 36-முதல் 40-அடிவரை சங்கின் திறத்தைப் பற்றி,

''கெடாத மனவெழுச்சியோடு வெகுண்டு உடனி யைந்து காற்றையொத்து எதிர்ந்த அவுணர் கொடிகள் அற்று இற்றுச் செவிகள் செவிடுபட்டு முடிகள் அதிரப் படிகள் நிலை தளர மிகவும் முழங்குகின்ற நின்சங்கு இடி யைப் போன்றதாகும்''

என்பதை,

''ஒடியா வுள்ளமொ டுருத்தொருங் குடனியைந்து
இடியெதிர் கழறுங் காலுறழ் பெழுந்தவர்
கொடியறு பிறுபு செவிசெவிடு படுபு
முடிக ளதிரப் படிநிலை தளர''

எனப்பாடியும், இதேபாடலில் 40-முதல் 49 ஆம் அடிவரை சக்கரத்தின் ஆற்றலை,

''நின்ற நிலையில் தொலைந்து வேரும் தூரும் மடலும் குருத்தும் பறியாதநீண்ட கரிய பனைமிசைப் பலபதினாயிரம் குலைகள் அதன் தலையினீங்கித் தரைக்

கண் உதிர்வனபோலத் தலைகள் வலியழிந்து சாய்ந்து ஒன்றும் உடன்மிசை நில்லாமற் கொத்தாக இற்றுத் தரித்த தாரொடு புரளும் படி ஒரு காலத்திலே கொய்தல் பெற்று உடனே உருண்டு பிளந்து நெரிந்து பின்வேறு வேறாய் உருண்டு சிதறி அளறு சொரிந்து நிலத்தின்கண் சோர அவுணர் உயிரைச் செகுக்கும் நீ ஏந்திய ஆழிப் படை'' என்பதை,

''நனிமுரல்வளை முடியழிபிழிபு
தலையிறுபு தாரொடு புரள
நிலைதொலைபு வேர்தூர்மடல்
குருகு பறியா நீளிரும் பனைமிசைப்
பல பதினா யிரங் குலைதரை யுதிர்வபோல்
நில்லா தொருமுறை கொய்பு கூடி
ஒருங்குருண்டு பிளந்து நெரிந்துருள்பு சிதறுபு
அளறு சொரிபு நிலஞ் சோரச்
சேரார் இன்னுயிர் செகுக்கும்
போரடு குருசில் நீயேந்திய படையே''

என்று பாடியும், எம்பெருமானின் சக்கரத்தின் ஆற்றலை எடுத்துக் காட்டினார். இத்தகைய பரம்பொருளைக்கண்டு பகைவர்களாகிய அவுணர்கள் அஞ்சி நடுங்கி வாழ்ந்த நிலையினைச் சங்க இலக்கியச் சான்றோர்களின் நெறியில் கோதை,

''வெப்பங் கொடுக்கும் விமலா''

என்று பாடுகின்றார். எம்பெருமான் வாய் வைத்து ஊதிய சங்கால், கையகத்து நின்று சுடரும் சக்கரத்தால் அவுணர்கள் அஞ்சி நடுங்கினார்கள் என்று கீரந்தையார் கூறிய கருத்தை, 'வெப்பம் கொடுக்கும்' என்னும் தொடர் மொழியால் சுருங்கக் கூறி, விளங்க வைக்கின்றார். வெப்பம் என்பதை உரையாசிரியர்கள் அச்சம் என்றும் சுட்டெரிக்கும் ஒளியென்றும் கூறுகின்றார்கள். இவர்கள்

கருத்தால், 'வெப்பம்'' என்னும் சொல் அதிர்ச்சியைத் தந்த சங்கினையும் சுட்டெரித்துப் பயத்தை உண்டாக்கிய சக்கரத்தையும் உணர்த்தும் என்று கொள்ளுதல் பொருந்தும். பகைவர்களால் உண்டாகும் கொடுமையை அழித்து நல்லோர்கள் உள்ளம் மகிழச் செய்பவன் எம்பெருமான் ஆதலால் அவனை ''விமலா'' என விளித்துச் சிறப்பிக்கின்றார். கோதை.

கண்ணபெமருான் மணந்த பிராட்டிமார்களுள்ளே, தமிழ்நூல்களில் மிகுதியும் சிறப்பித்துக் கூறப்படுவர். நப்பின்னைப் பிராட்டியே! தமிழ்ச் சான்றோர் அனைவரும் இப்பிராட்டியையே சிறப்பாகக் கூறிப் பேசுதலைக் காணலாம்.

பேரழகு வாய்ந்த நப்பின்னைப் பிராட்டியைச் சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகள்.

வண்டுழாய் மாலையை மாயவன் மேலிட்டுத்
தண்டார்க் குரவை தானுள் படுவாள்—கொண்டசீர்
வையம் அளந்தான் தன்மார்பிற் றிருநோக்காப்
பெய்வளைக் கையாள் நப்பின்னை தானாம்.''

என்று பாடுவதில், மணமிகுந்த துழாய் மாலையை மாயவன் தோளிலிட்டு, இசை நூலார் வரையறை செய்த இலக்கணப்படி, குரவைக் கூத்திற்கு உட்பட்டு ஆடுவாள்; உலகளந்த மாயவன் தன்னுடைய திருமார்பை இடனாகக் கொண்ட அழகுடைய திருமகளை நோக்காமல் இருப்பதற்குக் காரணமாயிருப்பவள்; அழகும் சிறப்புமுடையவள்; வளைகுலுங்கும் கையை உடையவள், என்று நப்பின்னையின் ஒப்பில்லாதன்மையை எடுத்துக் காட்டினார்.

கூர்மையான கொம்பினையுடைய இமிலேறுகளைப் பறையறைந்து வெளியில் விடுத்து அவற்றைத் தழுவிப் பிடிப்பானுக்கே மகளைக் கொடுப்பது என்னும் மண

விதியை ஆயர்கள் தொன்றுதொட்டு நடத்திவந்த அவ்விதி முறையைக் கலித்தொகை என்னும் இலக்கியம் கூறு கின்றது. இம்முறைப்படி ஏழு காளைகளை அடக்கிய கண்ணபிரான் நப்பின்னையை மணந்தான் என்பதை

''ஏர்பின்னை தோள்முன் மணந்தவன்''

என்று திருக்கோவையாரும்.

''பின்னை நம்பும் புயத்தான்''

என்று தேவாரமும் கூறுதல் காணலாம். இவ்வாறு சைவ இலக்கியங்களும் நப்பின்னையின் எழிலையும், கண்ண பெருமானின் வலிமையையும் கூறிச் சிறப்பிக்கின்றன.

'உப்பக்கம் நோக்கி உபகேசி தோள் மணந்தான்
உத்தர மாமதுரைக் கச்சென்ப—இப்பக்கம்
மாதாநு பங்கி மறுவில் புலச் செந்நாப்
போதார் புனற் கூடற் கச்சு''

என்று 'நல்கூர் வேள்வியார்' திருவள்ளுவ மாலையில் பாடு கின்றார். இதில் 'உபகேசியார்—என்பவர் நப்பின்னைப் பிராட்டியார் .என்று உரை கூறுதலால் உபகேசி என்பதும் இவருக்குப் பழைய காலத்தில் வழங்கிய பெயர் என்று அறிய முடிகிறது.

நப்பின்னையை நயந்து மணந்தவன் கண்ணபெருமான் அவன் அவதரித்த ஊர்வடமதுரை. இவ்வாறு மேற்குறித்த வெண்பாவில் நப்பினையின் பெருமை கூறி, கண்ணன் அவள் தோளை மணந்தான் என்று நல்கூர் வேள்வியார் நவில்கின்றார்:

நப்பின்னை என்பதிலுள்ள ந. சிறப்புப் பொருள் உணர்த்துவதோர் இடைச் சொல்; இது நக்கீரன் என்றார் போல நப்பின்னை (என்பதன்) விகாரமுமாம் என்றார் நச்சினார்க்கினியர். இவர்கள் கூறிய கருத்துகளால்

நப்பின்னையின் ஒப்பில்லாப் பேரழகு நமக்கு நன்கு புலனாதல் காணலாம்.

கண்ணபெருமான் வியந்து நயந்து ஏற்குமளவில் விளக்கிக் கூற வியலாத சிறப்பில், கண்ணைக் கவரும் தன்மையில் நப்பின்னை. செப்பன்ன மென் முலையுடன், சிவந்த வாயுடன், ஒடிந்து விடுமோ என்று கூறத்தக்க வகையில் மிக நுண்மையான உடுக்கையைப் போன்ற இடையுடன் விளங்கியவள். முப்பத்திரண்டு அங்க லட்சணங்களையுடைவள். திருமகள் அப்பிராட்டியைப் போன்று மிளிர்வதால் இப்பிராட்டியைச்

''செப்பன்ன மென்முலை செவ்வாய் சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய் திரு வே.''

என்று கோதை பாடி, அழகு கொலுவிருக்கும் நங்கையான நப்பின்னையைத் ''திருவே'' என்று சிறப்பித்தார். அருளாளனை அருளும் தன்மையில் வைப்பவள்; எம் பெருமானைத் தூண்டி அடியாருக்கு உதவும்படி செய்பவள்.

நப்பின்னையாதலால், ஆயச் சிறுமியர்கள் துயிலெழுந்து, துன்பத்தைத் தூர விலக்குவதைக் காட்டும் விசிறியையும் ஆன்ம நிலையைக் காட்ட அடையாளமாயுள்ள கண்ணாடியையும் தந்து, அன்புக்குரிய எம்பெருமானை எம்மோடு நீராட வைத்து, எம்மை அவனோடு சேர்ந்து இன்பமுறச் செய்விப்பாயாக என்று நப்பின்னையிடம் கூறுகின்றார்கள்.

பிராட்டியின் கருணையால் பெம்மானின் திருவருள் பேறுகிட்டும் விவரத்தைக் கோதைப் பிராட்டியார் கூறி இந்தச் செந்தமிழ் இருபதாம் பாசுரத்தின் உயரிய செய்திகளை நாம் அறிந்து கொள்ளச் செய்கின்றார்.

சங்க இலக்கியங்களில் பயின்று வரும் இனிய கருத்து களை எடுத்துக் கூறும் வகையில் அழகோவியமாகத் திருப்பாவையைச் செய்தருளினார். தாமட்டும் அனுபவிக் கும் நிலையில் இல்லாமல் உலகோர் அனைவரும் அனுப விக்கத் தந்தருளிய சிந்தைக்கினிய கோதைப் பிராட்டியை யும் அவர் வரைந்தருளிய செந்தமிழ்ப் பனுவலையும் பந்தமுடன் போற்றிப் பாடி மகிழ்ந்து பரம்பொருளை அடைந்து வாழ்வோமாக!

## கோதையைப் பாடுவோம்

அழகுடை நப்பின் னையை
அகங்குழைந் தினிது வேண்டி
அழகனாம் கண்ணன் தன்பால்
அன்புடன் சேர்க்க நெஞ்ச
விழைவுடன் திருப்பா வையை
மிகச்சிறப் பாய்இ சைத்து
வழங்கிய கோதைத் தாயை
மகிழ்வுடன் துதித்து வழ்வோம்

# தோற்றமாய் நின்றானைச் சொல்லு!

*வள்ளல் பெரும்பசுக்கள் வாய்த்தநந்த கோபனையே*
*உள்ளம் கவர்ந்த ஒருமகன்தான்—வள்ளலவன்*
*கண்ணனையே தாம்பாடிக் கைப்பிடித்த கோதையார்*
*பண்ணிசைத்த பாவையே பாட்டு!*

*—கவியமுதனார்*

சிந்தைக்கினிய செயலால் பிறரைக் கவர்ந்தவன் நந்தகோபாலன்; அவன் மாட்சியுடன் ஆயர் பாடியில் ஆட்சி புரிந்தான்; அவன் வைத்திருந்த பசுக்கள் வள்ளன்மையுடையன; வரையாது பாலை வழங்கும் பசுக்களைப் போல அவனும் இல்லையென்று சொல்லாமல் நல்கும் வள்ளல். அவன் பெற்றமகன் கவலையை மாற்றும் கண்ணன்.

அந்த வள்ளலை உள்ளம் உவந்து பாடியவர் கோதை. அவர் பாடிய திருப்பாவை தேனனையதாகும். இப்பாட்டால் கோதை கண்ணனைக் கணவனாகக் கைப் பிடித்ததைப் போன்று. அப்பாவையென்னும் தேன் பாட்டை நாம் பாடினால் அவனைப் பெற இயலும் என்று கூறுகின்றார் கவியமுதனார்.

பெற்ற உணர்வில் மாற்றமின்றி, பெற்றம் மேய்த்துண்ணும் கண்ணனே உற்ற தெய்வம்; நற்றமிழ் தெய்வம் என்று சிறக்கப் பாடினார் கோதை. தாயின் குடல் விளக்கம் செய்தவனைச் சிறப்பித்தார்.

ஆயர் பாடியிலுள்ள பசுக்கள் சுரந்த பாலை ஏற்ற கலங்களிலிருந்து எதிர் பொங்கி வழிந்தன. அப்பசுக்கள் பாலை இடையறாமல் பொழிந்தன. பெண்கள் தம் கண் களாகப் பசுக்களைப் பேணி வந்தனர்.

வள்ளன்மையுடைய பசுக்களை மிகுதியாக உடைய வன் நந்தகோபாலன்; இவன் பந்தமுடன் பெற்றெடுத்த மகனே கண்ணபிரான். எண்ணிறந்த அழகையுடைய இவனைஆயர் குலச் சிறுமியர்கள் அணுகி வேண்டுகின்றார் கள்.

அடியார் நலத்தில் அக்கறையுடையவனே! ஒளி போல் விளங்குபவனே! நீ துயில்வதை விடுத்து எழுந்து வருவா யாக! எதிரிகள் உன்னைக் கண்ட மாத்திரத்தில் வலிமை யிழந்து போகின்றார்கள்; அப்பகைவர்கள் உன்னைச் சரணடைந்து நலன் பெற்றதைப் போல, எங்களுக்கும் நன்மை செய்வாயாக!

உன்னை வணங்கி, வாழ்த்திசைத்து, புகழ்ந்து உன் வாசலில் நின்று வேண்டுகின்றோம். நீ எங்கள் குறையைக் கேட்டு நிறைவை உண்டாக்குவாயாக! பகைவர்களுக்கு உதவும்! நீ உன் அடியாரான எங்களுக்கும் உதவி செய் வாயாக! என்று அன்புடன் வேண்டியவர்களின் இனிய கருத்தை,

''ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப
மாற்றாதே பால்சொரியும் வள்ளற் பெரும்பசுக்கள்
ஆற்றப் படைத்தான் மகனே! அறிவுறாய்!
ஊற்ற முடையாய்! பெரியாய்! உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே! துயிலெழாய்;
மாற்றார் உனக்கு வலிதொலைந்துன் வாசற்கண்
ஆற்றாது வந்துஉன் அடிபணியு மாபோலே,
போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோர் எம்பாவாய்!

எனப் பாடித் தெரிவிக்கின்றார் கோதை. இப்பாசுரத்தில் ஆயச் சிறுமியர்கள் நப்பின்னைப் பிராட்டியுடன் சேர்ந்து கண்ணனைப் புகழ்கின்ற கருத்தினைக் கூறப்படுகின்றது. அன்னையின் அருளின்றி ஆராவமுதன் ஏறெடுத்துப் பார்க்க மாட்டான். ஆதலால் இவர்கள் நப்பின்னையின் நல்லருளைப் பெற்று நாரணனிடம் செல்கின்றார்கள்.

இப்பாசுரத்தில் முதன் இரண்டரை அடிகளில் நந்தகோபனுடைய செல்வச் செழிப்புப் புகழப்படுகின்றது· பதினேழு, பதினெட்டாம் பாசுரங்களில் நந்தகோபனின் அறப்பண்பும் வீரத்தின் வலிமையும் பேசப் டெ்பறன.

இப்பாசுரத்தில் அவனுடைய கறவைச் செல்வத்தைச் சிறப்பிக்கப்படுகின்றது, இவர்கள் கண்ணனைப் பலமுறை நந்தகோபன் மகனே என்று விளித்ததற்கு, அவன் வைகுந்த வாசத்தை விட்டும், பனிக் கடலில் பள்ளிக் கொண்ட இருப்பை விடுத்தும், திருவாய்ப் பாடியில் எங்கள் குறையைத் தீர்ப்பதற்குப் பிள்ளையாய்ப் பிறந்தான் என்பதைக் காட்டவே கூறியதாகும்·

'ஏற்ற கலங்கள்', என்ற தொடரால் பசுக்கள் தரும் பாலை நிரப்பி வைக்கக் கலங்கள் இல்லாமையைக் காட்டவே சுட்டியதாகும். எத்துணைப் பெரிய கலங்களிருந்தாலும் அவற்றை நிரப்புகின்ற பசுக்கள் இருந்தன; என்பதை விளக்கவே,

''எதிர்பொங்கி மீதளிப்ப''

என்ற தொடர் மொழியை ஆண்டார். ஆயர் பாடியிலுள்ள பசுக்களின் மடிக் காம்புகளைத் தொட்டாலே போதும், ஒரு பீறிலே கலங்கள் நிறைந்து விடும். பசுக்களைக் கறக்காமல் விட்டாலோ முலைக் கடுப்பாலே பால் சொரிந்து கொண்டே இருக்கும். என்பதை,

''மாற்றாதே பால் சொரியும்'' என்பதால் தெரிவிக்கப்படுகின்றது.

இப்பசுக்களின் சிறப்புக்கு ஓர் எடுத்துக் காட்டினைக் கூறுகின்றார்கள் உரையாசிரியர்கள். பராசர முனிவரை அணுகிய மைத்ரேயர் தத்துவங்கள் பற்றிக் கூற வேண்டினார்; பராசரர் நல்லதத்துவங்களையெல்லாம் சொல்லிக் கொண்டேயிருந்தார்; மைத்ரேயர் வியக்கும் படி சொன்னார்; ஆம் கேட்க வந்த மைத்ரேயர் போது மென்று சொல்லும் நேரம்வரை அளவிறந்த தத்துவங் களைப் பராசரர் வழங்கியதையைப் போன்று, ஆயர் பாடியிலுள்ள பசுக்கள் பாலைச் சொரிந்தன என்று கூறுகின்றார்கள். இத்தகைய பசுக்களை,

''வள்ளற் பெரும் பசுக்கள்''

என்றார் கோதை. இந்த வள்ளற்பெரும் பசுக்களை மூன்றாம் பாசுரத்திலும் பெருமை செய்துள்ளார்.

''மகனே அறிவுறாய்''

என்றதில், செல்வனுடைய மகனாக நீயிருத்தலால் நீ காலைப் போதில் உணர்ந்து எழுந்திருக்காமல் இருக்கின்றாயே ஏன்? நீ காலம் உணர்ந்து செயலாற்றும் நந்தகோபன் மகன் ஆதலால் அவரைச் சிறப்பிக்கும் வகையில் எழுந்து வந்து எமக்கு உதவி செய்வாய் என்று கூற வந்தவர் மேற்குறித்த தொடரை ஆண்டார். இப்படி உணர்த்தியும் கண்ணன் எழுந்திருக்கவில்லை. அவன் அறிதுயில் கொண்டே இந்த அவனியை இயக்குபவன். இத்தகையவன் தூங்குவானா? மாட்டான்! தன் அடியார் களின் மன உறுதியினை அறியவே இவ்வாறு இருந்தான்.

கண்ணபிரானின் திண்மையை எடுத்துக்காட்ட

''ஊற்ற முடையாய்!'' என்றார்கள். இதற்கு

இருவகையாகப் பொருள்கூறலாம். ஒன்று, பகைவர்கள் அஞ்சி ஓடும் படிதிண்மையுடன் எதிர்த்து நிற்பவன்; மற்றொன்று, தன்னடியார்களைக் காப்பதில், உறுதி யுடையவன் என இருவகையாக எடுத்துக் காட்டுவர்.

''பெரியாய்'' என்றதில் தேவர்களும் அடியார்களும் போற்றுகின்ற பெருமையில் எல்லையற்றவனாக இருப்பவன் என்று அவனின் சிறப்பைக் கூறியது

''உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே!''

என்று விளித்தலால் இவன் பெற்றியினை ஒரு சிலர் மட்டும் போற்றிக் கூறவில்லை உலகமே புகழ்ந்து கூறுகின்றது. என்று அவன் எங்கும் நின்று ஒளிரும் நிலையைத் தெளிவிக்கின்றது.

மாந்தர்களாய் உள்ளவர்கள் எடுக்கும் பிறவிகள் தோறும் துன்புற்று ஒளிநலம் அற்றுக் குன்றிப் போவார்கள். பரம்பொருள் உலக நலனுக்காகப் பிறவியெடுக்கின்றான். அப்படி எடுக்கும் பிறவிகள் தோறும் பேரொளி பெற்றுப் பிறங்கி நிற்கின்றான். பேரொளியின் முன்பு பிறவொளிகள் மங்கிப் போகும்.

என்றும் எப்போதும் பேரொளியுடன் இருக்கும் அவனைக் கோதைப் பிராட்டியார்

''தோற்றமாய் நின்ற சுடரே''

என்றார். இத்தகைய நிலையில் ஆற்றலுடன் மற்றவர் போற்ற விளங்கும் நீ! ஒரு நொடிப்பொழுதும் சோர்வேயின்றி உழைத்ததால் இப்பெருமையைப் பெற்றாய்! இத்தன்மையுடைய குணங்கள் அழியாமல் நிலைக்க, எங்களுக்கு உதவிசெய்யத்

''துயிலெழாய்''

என்று அவனை இவர்கள் பள்ளி உணர்த்தினார்கள். வணங்கா முடிகளான அசுரர்களை வீழ்த்தியவன். அவனைக் கண்ட மாத்திரத்தில் அசுரர்கள் அஞ்சி நடுங்கினார்கள். இவ்வாறு வீரத்துடன் விளங்கிய அவனிடம்

''மாற்றார் உனக்கு வலிதொலைந்து.''

என்று கூறி வலிமையுடன் திகழ்ந்த அவனை வாயாரப் புகழ்கின்றார்கள். இராமபிரான் விட்ட அம்புக்கு அஞ்சி வீழ்ந்த காகம் போல, அதாவது அவனிடமே தஞ்சம் புகுந்த காகம்போல நாங்கள் உன்னிடம் தஞ்சம் புகுந்தோம் என்று கூறுவதாக,

''ஆற்றாது வந்துன்''
''அடி'' பணியுமா போலே''

என்றதில் 'பணியும் ஆ' என வந்தது. இதில் 'ஆ' என்பது 'ஆறு' என்கின்ற வழியைக் குறித்தது. 'ஆறு' எனபதே 'ஆ' எனக் குறுகியது. இதனால் உன் வழியைத் தவிர எங்களுக்கு வேறு வழியில்லை என்பது குறிக்கப் பெற்றது, 'நீயேகதி வேறு கதியில்லை' என்று எம்பெருமானிடம் இவர்கள் இறைஞ்கி நின்றதை இது காட்டுகிறது. இதை மேலும் தெளிவு படுத்தும் வகையில்,

''போற்றியாம் வந்தோம்''

என்று கூறப்பெற்றது. பகைவர்களுக்குதவிய நீ! எங்களுக்கு உதவமாட்டாயா? பணிபவர்களுக்கு இணங்கி உதவும் நீ! கனிந்த மனத்தால் வந்து அருள் புரிவாய் என்றார்கள். உன்னுடைய உறவு என்றும் நீங்காமல் இருக்க நன்மை புரிவாயாக என்றார்கள்.

## பாவையில் இலக்கியச் செய்திகள்

பக்தியிலக்கியமான திருப்பாவையை மனித குலத்திற்குச் சிறப்பாக அமைய வாழ்வியல் இலக்கியமாக ஆக்கித் தந்தார் கோதை. உலகியலோடு தொடர்புடைய மக்களைப் பண்பு நலத்தில் பிறங்க வைத்து, அருளியல் உலகத்திற்கு அழைத்துச் செல்லவே, இத்திருப்பாவையினை அருளினார்.

ஒவ்வொரு பாசுரத்திலும் சங்கநூற் கருத்தினைப் பெய்து தருகின்றார் கோதை. குறுந்தொகையில் 334ஆம்

பாடலில், பசு தன் கன்றை நினைந்து பால் கொடுக்க வருகின்ற கருத்தினை

...''வீங்கு முலை செருத்தல்
பால் வார்பு குழவியுள்ளி''

என்று குறிக்கப்பட்டது. இதனால் கன்றுக்குப் பால் கொடுக்க நினைந்து வந்த பசு, முலைக் கடுப்பினால், கன்று ஊட்டுவதாகக் கருதி, வீணே சொரிந்து விடுகின்றது என்று சுட்டப் பெற்றது.

மணிமேகலையில் சீத்தலைச் சாத்தனார்
''கறவை கன்றார்த்திக் கலநிறைபொழியும்''

என்று கூறுவதில், கன்று குடிப்பதாக எண்ணி, கறவை, கலம் நிறையப் பாலைப் பொழிந்து விடுவதாகக் கூறப்படுகின்றது. பசுவின் முலை கடுப்புற்று விடுவதால் கன்றும் உண்ணாமல் கலமும் நிறையாமல் வீணாகக் கீழே போய் விடுவதை, குறுந்தொகை 27ஆம் பாடலில், கொல்லம் அழிசி என்னும் நல்லிசைப் புலவர்

''கன்றும் உண்ணாது கலத்தினும் படாது
நல்லான் தீம்பால் நிலத்துக் காஅங்கு,''

என்று கூறுவார். இவர் கருத்துக் கொப்ப கோதையார்,

''ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப
மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்.''

என்று பாடுவார். வள்ளல் பெரும் பசுக்கள் என்றதால் முன்பு கூறிய பசுக்களைப் போல் இதில் வரும் பசுக்களும் முலைக் கடுப்புற்றுத் தாமாகவே பாலைப் பொழிந்து விடும் தன்மையில் வளமுடைய பசுக்களாகும்.

உலக இருளை நீக்கிய உலகளந் தானைப்பற்றி

''மாயோன் மேஎய மன்பெருஞ் சிறப்பிற்
றாவா விழுப்புகழ் பூவை நிலையும்''

என்று தொல்காப்பியர் பாடுவார். இதில் மன்பெருஞ் சிறப்பு என்றது, 'முடிவற்ற அழிவில்லா வீடு' என்று குறித்தார். இவ்வீடு பேற்றை அளிப்பவன் மாயோன். இப்பரம்பொருளின் நிறம் காயம்பூ போன்றது. இந்நிறத் தவனே மேலான பரமபதத்தை அருள்பவன். இந்தப் பரம்பொருள் எடுக்கும் அவதாரத்தினை, அவன் எடுக்கின்றதற்கான காரணநிலையினை மெய்ஞ்ஞானம் பெற்ற முனிவர்களும் அறிதற்கு இயலாது. காலத்தாலும் இடத்தாலும் வரையறுக்கப் படாமல் எங்கும் விளங்கி நிற்கும் பரம்பொருள், ஒரு காரணம் பற்றி, தன் விருப்பத் தாலே, காலத்தாலும் இடத்தாலும் வரையறுக்கப்பட்ட ஒரு வடிவம் தாங்கி வந்து தோன்றுகின்றான் என்பதை,

''இருவர் தாதை இலங்கு பூண்மாஅல்
தெருள நின்வர வறிதல்
மருளறு தேர்ச்சி முனைவர்க்கும் அரிதே''

என்று முதற்பரிபாடல் விளம்புதல் காணலாம். இவ்வாறு விளம்பிய பரிபாடல் கருத்தை உளங்கொண்டு

''உலகினில் தோற்றமாய் நின்ற சுடரே''

என்று கோதை முன்னோர் மொழிந்த பாதையில் நின்று எங்கும் மங்காமல் ஒளிபரப்பும் உலகளந்தானைப் படம் பிடிக்கின்றார். எம்பெருமானாகிய பெருஞ்சுடரில் பல்வகையாகக் கூறப்பெறும் உயிர்கள் தோன்றி விளக்கம் பெறுகின்றன. அவனன்றி ஓர் அணுவும் அசைவதில்லை எவ்வுயிரும் தோன்றுதலில்லை. எனவே, சுடராக உருவகம் செய்து அச்சுடரில் எண்ணிறந்த உயிர்கள் பணியாற்றி உய்கின்றன. எல்லா உயிர்களும் எண்ணும் பணியினைச் செய்ய அவன் காரணனாய் இருத்தலால், அவனை,

''ஊற்ற முடையாய்''

என்று போற்றுவார்.

இப்பாசுரத்தில் பசுக்களை ஞானிகளாக உருவகப் படுத்துகின்றார். ஞானிகள் ஞானமாகிய பாலைப் பக்குவப்பட்ட உயிர்களுக்கு வரையாது வழங்குவார்கள். அந்த ஞானப்பாலை விழைந்து அருந்திய அடியார்களும் ஞானிகளாக மிளிர்கின்றார்கள். முன்பு உணர்த்திய ஞானிகளுக்கும் நெறிகளை நினைவுபடுத்தும் தகுதியினை உடையவர்களாக இருப்பார்கள். இவ்வாறு ஞானமெய்திய வர்களை இனிது போற்றுபவன் நந்தகோபன். நல்ல சிந்தையுடைய அவனுக்குத் தொல்லையறுக்கும் பிள்ளை யாகக்

கண்ணபெருமான் வந்து தோன்றினான். அவனைத் தான் ''ஊற்ற முடையாய் என்றும்,

தோற்றமாய் நின்ற சுடர்'' என்றும் அழகாகப் படம் பிடித்தார். அன்பிற்கு வயப்படும் அவனையே 'ஆற்றாது வந்துன் அடிபணியுமாபோலே

போற்றியாம் வந்தோம்' என்று புகழ்ந்து கூறுகின் றார். ஏற்றம் தருபவன் எம்பெருமான் ஆதலால் அவனைப் போற்றிய கோதை நாமும் போற்றத்தூண்டுகின்றார். அவர் நெறியில் சென்று உவப்பினை எய்தி வாழ்வோமாக.

கோதை நலம் போற்று!

ஊற்ற முடைய உலகளந் தானை
போற்றினார் கோதை புகழுற இசைத்த
ஆற்றலால் திருப்பா வையாம் தன்னை
எற்க நமக்குத் தந்தார்தாள் போற்று!

# சாபம் களைவானைச் சாற்று!

*மன்னர்கள் சங்கமித்து வாயாரப் போற்றினார்போல்*
*அன்பாக ஏத்துகின்றோம் ஆய்ச்சியர்யாம்—என்றதனைப்*
*பாட்டிசைத்த கோதை பரமனையே தாம்சார்ந்தார்*
*மாட்சிமையைச் சொல்வோம் மகிழ்ந்து.*

*—கவியமுதனார்.*

அக்காலத்தில் கண்ணன் படுத்திருந்த இடத்திற்குச் சென்று மன்னர்கள் கூடி அவனை வாயாரப் போற்றினார்கள். இவர்கள் போற்றியவாறு நாங்கள் போற்ற வந்தோம் என்று ஆயக்குலச் சிறுமியர்கள் கண்ண பிரானிடம் கூறி, அருள்தர வேண்டினார்கள். இச்செய்தியைக் கோதை பாடிக் கோவிந்தனை அடைந்தார். தாம் கூறியதை ஆயச்சிறுமியர்கள் மேல் ஏற்றிப் பாடித் தெரிவித்தார். கோதை கோவிந்தனை அடைந்த மாட்சிமையை, திருப்பாவையின் மூலம் சொல்லி மகிழ்வோம் என்றார் கவியமுதனார்.

அழகியதாயும் அகன்று பெரியதாயும் உள்ள இப்பூமியிலிருக்கும் நாடுகளை ஆளுமை செய்கின்ற அரசர்களெல்லாம் தம்முடைய அகந்தை அடங்கியவர்களாய் ஒன்று கூடி நீ பள்ளி கொண்டுள்ள சிங்காசனத்தின் கீழ் திரண்டிருத்தல் போல, நாங்களும் உன்னிருப்பிடத்தை நாடி வந்துள்ளோம்.

பாதியளவே வாயைத் திறந்துள்ள சதங்கை என்னும் கிண்கிணிக்கு ஒப்பாக விரிந்துள்ள செந்தாமரைப் பூப் போல, உன் சிவந்த திருக் கண்களைக் கொண்டு சிறிது சிறிதாகத் திறந்து எங்களைப் பார்க்க வேண்டுகிறோம். சந்திரனும் சூரியனும் ஒரே காலத்தில் சேர்ந்து ஒளி பொழிதல் போல நீ உன் இரண்டு திருக்கண்களால் பார்த்து, அருளினைப் பொழிந்தால் எங்கள் பாவம் ஒழியும் என்ற ஆய்ச்சியர்கள் கருத்துகளைக் கோதை

''அங்கண்மா ஞாலத் தரசர், அபிமான
பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட் டிற்கீழே
சங்கம் இருப்பார்போல் வந்து தலைப்பெய்தோம்
கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப் போலே
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ,
திங்களும் ஆதித் தியனும் எழுந்தாற்போல்
அங்கண் இரண்டும்கொண் டெங்கள்மேல்
நோக்குதியேல்
எங்கள்மேல் சாபம் இழிந்தேலார் எம்பாவாய்!''

என்று பாடுவார். ஏதும் பேசாமலிருக்கும் கண்ணனை நோக்கி 'எங்கள் துயரைத் தீர்க்கமாட்டாயா?' என்று ஆய்ச்சியர்கள் இறைஞ்சி நின்றார்கள். முன்னாளில் இப் புவியைப் பாயாகச் சுருட்டிக் கொண்டு கடலில் ஓடி ஒளிந் தான் இரணியாக்கதன். அவனை எம்பெருமான் வராக அவதாரம் எடுத்துத் தண்டித்தான்.

தேவர்கள் முதலானோர்களின் துயரத்தைத் தீர்க்கவே இந்த அவதாரத்தை எடுத்தான். இவன் செய்த நன்மையை அறிந்த அரசர்கள் நன்றி பாராட்டும் வகையில், எம்பெருமான் படுத்திருந்த பள்ளிக் கட்டிலைச் சூழ்ந்து புகழ்ந்தார்கள்.

இவ்வரசர்கள் போற்றியதைப் போல நாங்களும் உன் திருமாளிகையை நோக்கி வந்து போற்றுகின்றோம் என்று ஆய்ச்சியர்கள் இயம்பினார்கள்.

''ஒருநா யகமாய் ஓட உலகுடன் ஆண்டவர்
கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர்
பெருநாடு காண இம்மையி லேபிச்சை தாம்கொள்வர்,

என்று நம்மாழ்வார் பாடுவார். இதில் ஆசையால் அலையும் பேய் மனம் கொண்டு ஆளும் அரசர்கள் இழிந்து போவார்கள் என்று ஆசையை அகற்றி மாசின்றி வாழ உணர்த்தினார் அவர். ஆசையை நீக்கி அகந்தையைக் களைந்த அரசர்கள், எம்பெருமான் செய்த செயலை அபிமானங் கொண்டு, அவனைச் சூழ்ந்து போற்றினார்கள் என்று கோதை கூறுகின்றார். இவ்வரசர்கள் தம் அரச போகத்தைக் காட்டிலும் எம்பெருமானை ஏத்துதல் சிறந்ததெனப் போற்றினார்கள். பரதன் தனக்குக்கிட்டிய அரச வாழ்வைத் துறந்து, எம்பெருமானைப் போற்றுதலே சாலச் சிறந்ததெனக் காடு நோக்கி இராமனிடம் சென்றதைப் போன்று, இவ்வரசர்கள் கண்ணபிரானை நாடிப் போற்றினார்கள்.

தாமிருந்தஇடத்திலிருந்துஇம்மன்னர்கள் போற்றாமல் கண்ணனிருந்த இடத்தை நாடிப் போற்றியதற்குக் காரணம், மாணவன் ஆசிரியரிருக்கும் இடந்தேடி அறிவு பெறுவதைப் போன்று இவர்கள் அவன் அருளைப் பெற அவனிடம் நாடிச் சென்றார்கள்.

''வந்து தலைப் பெய்தோம்'' என்று ஆயர்குலச் சிறுமியர் கூறியதற்கு. இவர்களிடம் எண்ணிறந்த செல்வங்கள் இருந்தாலும், அவை அழியும் தன்மையன. அழியாமல் நிலைத்து நிற்பது உன் திருவருளே ஆதலால் உன்னிடம் வந்தோம் என்றார்கள்.

'கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப்பூப் போலே'' என்றதில், 'கிண்கிண்' என ஒலிக்கும் சலங்கைகள் பாதி

யளவே வாய்திறந்து இருத்தல் போலத் தாமரை மலர் முழுமையாக விரியாமல் இருக்கும் காலம், மாலை வேளை யில் வானில் ஞாயிறும் திங்களும் இருக்கின்ற காலமே யாகும். இக்காலத்தில் தாமரை மலர் பாதி மூடியும் பாதி விரிந்தும் இருக்கும்; இந்நிலையில் எம்பெருமானுடைய கண்கள் திறந்து எம்மை நோக்க வேண்டும் என்று எம் பெருமானிடம் ஆய்ச்சியர் கூறினார். கிங்கிணி போல, தாமரை விரிந்திருப்பதற்கு ஒப்பாக எம்பெருமான் கண் கள் இலங்க வேண்டும் என்று பாடினார். இவ்வாறு பாடிய கோதைப்பிராட்டியார் உவமையைக் கையாண்ட திறத்தை அறிஞர் உலகம் எண்ணிப் பாராட்டாமல் இருக்காது.

கண்ணனின் பார்வை முழுதும் உயிர்கள் மீது படக் கூடாது. அப்படிப்பட்டால் குற்றங்குறைகளுள்ள உயிர்கள் மாயும். எனவே அவன் திருப்பார்வை பாதி மூடியும் பாதி திறந்தும் இருத்தலே சிறப்பாகும். உலக உயிர்களின் நலத் திற்காகப் பாதி மூடியும், உயிர்கள் துன்பத்தால் வருந்தும் போது அதை நீக்கப் பாதி திறந்தும் அவன் விளங்குவான் என்பதை,

'செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ'' என்றார்.

அவனிடம் இந்த இனிய பார்வையோடு நீ நோக்க வேண்டுமென்றார் கோதை. வாடிய பயிருக்கு மழையை வேண்டும் உழவன், அடை மழையை விரும்ப மாட்டான், அடை மழை பயிரை அழித்து விடும். ஆதலால் சிறிது சிறிதாக மழை பெய்து பயிரை வாழ வைப்பதைப் போல, எம்பெருமானே,

''செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ''

என்று மனம் உருகவே பாடிய இவர்கள் அவனை வேண்டி னார்கள் கிங்கிணி வாய்ச்செய்த என்ற தொடரில்'செய்த' என்பது உவம உருபு என்பர்,

''ஓங்கி உலகளந்த உத்தமன்'' என்னும் பாசுரத்தில் ஈற்றடியில் ''நிறைந்து'' என்றதை நிறைந்திடும் என்று வினைமுற்றின் குறை என்று கொண்டாற்போல இதில் ''இழிந்து'' என்பதை இழிந்திடும் என்று வினைமுற்றின் குறை எனக் கொள்ள வேண்டும்.

''சாபம்'' என்றது முன் வினைச் சாபமாகும். அச்சாபத்தை அனுபவித்தே தீர வேண்டும். இச்சாபம் அழிய இன்னமுதனின் திருவடியைப் பற்ற வேண்டும். அவனுடைய பார்வை நம் மேல் விழ வேண்டும். இதைத் தான் ஆய்ச்சியர்கள் ''எம் மேல் விழியாவோ'' என்றார் கள்.

அவன் விழிப் பார்வை விழுந்தால் எங்கள் மேல் உள்ள சாபம் இழியும் என்றார்கள். இப்பாசுரத்தில், அவனுக்கு மட்டும் அடிமையாய் இருத்தல் பற்றிக் கூறினார். இதனால் நாம் வேறு யாருக்கும் அடிமையாய் இருத்தல் கூடாது என்பதை அறியலாம், புறப்பற்று, அகப்பற்று என்ற பகையை நீக்கி, தான் ஒரு சுதந்திர முடையவன் அல்லன் என்ற அறிவோடு, எம்பெருமானுக்கு அடிமை யாகி, அவனே தனக்கு எல்லாம் என்று அவனைச் சிக்கெனப் பற்றிக் கொண்டு தொண்டு புரிய வேண்டும்.

அருளாளனே கருணையுடன் நமது அஞ்ஞானங்களை நீக்கிப் பாவமற்ற பாதையில் பயணம் செய்ய வைப்பான். 'போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினிற் தூசாகும்' என்று ஐந்தாம் பாசுரத்தில் கூறியபடி, நம்வினை கள் அவன் கருணையாகிய பார்வையால் நீங்கும். முதற் பாசுரத்தில் 'கதிர் மதியம் போல் முகத்தான்'' என்று பாடியவர் இப்பாசுரத்தில் ''ஆதித் தியனும்'' என்று இசைத்தார். அடியார்களின் இடர்ப் பாட்டினை நீக்க, சூரிய பார்வையும் அவர்கள் மகிழ நிலவுப் பார்வையும் எம்பெருமான் பெற்றான் என்றார். இந்தச் செந்தமிழ்ப் பாசுரத்தில் அகங்கார மமகாரங்களைக் கூறி இவற்றை

மாற்ற வழியையும் கூறப்பட்டது. ஒருவன் பாவத்தை நீக்க அருளாளன் பால் சரணாகதி அடைய வேண்டும்.

அவன் இரண்டு கண்களால் நோக்க வேண்டுமென்பதற்கு, ஒரு கண்ணில் ஞானமும் ஒரு கண்ணில் அருளையும் பொழிய வேண்டும் என்பதைக் குறித்துச் சுட்டிக் காட்டியது இது.

இவ்வாறு உலகியலில் செவ்வியுடன் வாழ ஒவ்வொருவரும் எம்பெருமானை ஏத்த வேண்டுமென்று கூறி நன்னெறியைக் காட்டுகின்றார் கோதை.

## பாவையில் இலக்கியச் செய்திகள்

'அங்கண்மா ஞால'மென்று பாடியதில் அழகாக, அகலமாக உள்ள இப்புவியைக் குறித்தார்; இந்த அழகிய அகன்ற பெரிய பூமியில் உள்ள உயிர்கள் யாவும் கண்ண பெருமானால் தோன்றியது என்றார். இரணியாக்கதனால் இப்பூமி கடலுக்குள் கிடந்தது. இதை வராக அவதாரம் எடுத்து எம்பெருமான் கொணர்ந்தான் என்பதை கூறாமல் உள்ளுறையாக உணர்த்தினார் கோதை.

'இக்கருத்தைச் சங்க நூலான பரிபாடலில் கீரந்தையார் கூறுவார்.' திருமாலே! மண்ணுலகமும் விண்ணுலகமும் பாழ்பட, திங்களும், ஞாயிறும் கெடுதலால், அழகிழந்து போன ஊழிகள் முறையே கழிய அதன் பின் ஆகாய ஊழியும், காற்றுத் தோன்றிய ஊழியும் அதிலிருந்து செந்தீயும், அதிலிருந்து மழை முதலியனவும் அவற்றிலிருந்து நிலம் தோன்றிய ஊழிகள் அளவிறந்த காலம் கழிந்த பின் உயிர்கள் தோன்றுதல் பொருட்டு வராகத் திருக்கோலம் கொண்டு நிலத்தினை எடுத்தாய்.

இந்தச் செயலால் தோன்றிய இக்கற்பத்தை வராகக் கற்பம் என்று கூறப்பட்டது. இப்பெயர் நின் செயலில் ஒன்றை உணர்த்தும் இங்ஙனம் நீ செய்த பல செயல்

களால் ஏற்பட்ட உரிய கற்பங்களை யாவராலும் உணர வியலாது. அத்தகைய பெருமையை உடைய ஆழிமுதல்வ! நின்னைத் தொழுவோம் என்றார். இக்கருத்தை இரண்டாம் பரிபாடலில்

''தொன்முறை'' என்று தொடங்கி,
ஆழிமுதல்வ நிற்பேணுதும் தொழுதும்''

என்று முடிய, பத்தொன்பது அடிவரை பாடித் தெரிவிக்கின்றார் அப்புலவர் பெருமான்.

இவ்வாறு தோற்றுவித்த இந்த அகன்ற பெரிய உலகத்தை எம்பெருமானே தன்னாற்றலால் காத்து வருகின்றான் என்பதைம் முல்லைப் பாட்டில் நப்பூதனார்.

''நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை''

எனப் பாடுவார். சங்கு சக்கரத்தை ஏந்திய பெரிய கையை யுடைய எம்பெருமான் அகன்ற இந்தப் பெரிய உலகத்தை நடத்தி வருகின்றான் என்றார். திருவள்ளுவரும் உலகத்திற்கு மூல காரணமாக, முதலாக உடைய பரம் பொருளைத் தம் முதற் குறளிலேயே

''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு''

என்றார். எழுத்துகள் அகரத்தை முதலாகக் கொண்டிருத்தல் போன்று எம்பெருமானை முதலாகக் கொண்டு உலகம் இயங்குகின்றது என்றார். கம்ப நாட்டாழ்வார்.

''உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட் டுடையார் அவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே''

என்று பாடுவார்.

இதில் 'உலகத்தை உண்டாக்கியவன் அதை நிலை நிறுத்தினான் என்றும், பின்னர் அவ்வுலகை இல்லாமல் செய்தான் என்றும், மீண்டும் அதைத் தோற்றுவித்தான் என்றும் இப்படிச் செய்வது அவனுக்கு விளையாட்டு என்றும் கூறி, அவனே தலைவன், அவனைச் சரணடைகின்றேன்' என்றார் கம்பர்.

'திரிகடுகம்' என்னும் நூலை வழங்கியவர் நல்லாதனார். அவர்,

''கண்ணகன் ஞாலம் அளந்தானை''

என்று உலகளந்த நாயகனைப் பாடினார். இவன் அளந்த உலகத்தைக் கோதை.

''அங்கண்மா ஞாலம்''

என்றார். உலகமும் உயிர்க் குலமும் அவனால் நிகழ்ந்து வருகின்றன என்றார். அழகிய உலகமென்றும் விரிந்த உலகமென்றும் பெரிய உலகமென்றும் கூறப்படுகின்ற இந்தவுலகம் இன்றளவும் நிகழ்வதற்குப் புகழுக்குரியவனான எம்பெருமானே காரணம் என்று பாவையில் பாடிக் காட்டினார்.

கீரந்தையார் என்னும் புலவர் இரண்டாம் பரிபாடலில்,

''மூவா மரபும் ஓவா நோன்மையும்
சவா மரபின் அமரர்க்காச் சென்றநின்
................ ... மரபினோய் நின்னடி
தலையுற வணங்கினேம் பன்மாண் யாமும்
கலியில் நெஞ்சினேம் ஏத்தினேம் வாழ்த்தினேம்''

என்று பாடுவார். எம்பெருமான் தேவர்களுக்கு அமுதத்தைக் கொடுக்க எண்ணினான். அப்படி எண்ணிய அளவிலே அவர்களுக்கு அதன் பயன் ஆகிய மூவா மரபும் ஒழியாவலியும் தம் சாவா மரபு போல உரியவாயின.

அதனால் நின்புகழ் பரந்தன. இத்தகையவனான உன்னை வணங்கினோம்; நெஞ்சில் தூய்மையைப் பெற்றோம்; உன்னைப் பலகாலம் வாழ்த்துவோம்! என்றார்.

இவரை அடியொற்றி உன்னைப்போற்றி எம்சாபம் நீங்க வாழ்வோம் என்றார் கோதை.

''அங்கண் இரண்டும்கொண் டெங்கள்மேல்
நோக்குதியேல்
எங்கள்மேல் சாபம் இழிந்து''

என்பதில் எம்பெருமானின் இருகண் பார்வையும் எங்கள்மேல் விழுந்தால் சாபம் அழியும் என்று கூறினார். அவன் பார்வை நம்மேல் விழ அவனை வழிபட வேண்டும் என்று வலியுறுத்துகின்றார் கீரந்தையார், எம்பெருமான் நினைத்த மாத்திரத்திலேயே தேவர்கள் சாவாமருந்தான அமுதத்தைப் பெற்று வாழ்ந்தார்கள். யானும் அவனைப் போற்றி வாழ்வேன் என்றார்.

கோதையார், 'அபிமானத்துடன் வந்த அரசர்கள் அவனைப்பாடி நலம் பெற்றதைப் போல நாங்களும் அவனை வணங்கி எங்கள் சாபம் நீங்கி நலம் பெறுவோம் என்றார்.

இதுகாறும் கூறியவற்றால் சங்கத்துச் சான்றோர்கள் நெறியில் திருப்பாவையைப் பாடிய கோதை அவன் பெருமையைக் கூறி உயர்வை எய்தியதைப் போன்று நாமும் கோதையைப்பாடி கோவிந்தனைப் பற்று வோமாக!

# பூவைப்பூ வண்ணனைப் போற்று

சிங்கா சனத்தில் திகழ்ந்துலகை ஆளுகின்ற
பங்கயக்கண் ணாஉனைப் பாடுகின்றோம்— எங்களின்
எண்ணத்தைக் கூட்டுவிப்பாய் என்றிசைத்த
கோதையர்தம்
பண்திருப் பாவையைப் பாடு!

—கவியமுதனார்.

சிங்கத்தை ஆசனமாகக் கொண்டு உலகை ஆளுகின்ற தாமரை போன்ற சிவந்த கண்களுடைய எம்பெருமானே! உன் திருவருளைப் பாடுகின்றோம். நெடுநேரமாக நின்று உன்னை இறைஞ்சுகின்றோம்.

எங்களின் குறையைக் கேட்டுத் திருவருள் புரிவாயாக! என்று கோதைப் பிராட்டியார் பண்ணுடன்கூடிய திருப்பாவையை இசைக்கின்றார். இசைத்தவர் பெற்ற பேரின்ப நிலையை மற்றவரும் அடைய, கோதையின் பாசுரத்தை இசைக்க வேண்டுகின்றார் கவியமுதனார்.

மேற் குறித்த வெண்பாவில் திருப்பாவையில் வரும் இருபத்திமூன்றாம் பாசுரத்தை நினைவு படுத்துகின்றார் இவர்.

மழைக்காலத்தில் மலையில் உள்ள குகைகளில், பெண் சிங்கத்துடன் இணைந்து படுத்து உறங்குகின்ற, வீரமுள்ள ஆண்சிங்கமானது. உணர்ந்தெழுந்து' நெருப்புப் பொறி

பறக்கும்படி கண் விழித்து, தன் மேனியிலுள்ள மயிர் களைச் சிலிர்த்தும் நாற்புறங்களிலும் புடைபெயர்ந்தும்

அசைந்தும், உதறியும், சோம்பல் நீக்கியும், கர்ச்சனை செய்தும் வெளியே புறப்பட்டு வருவதைப் போன்று காயாம் பூ நிறத்தையுடைய பிரானே! நின் திருக்கோயிலி லிருந்து, வெளியில் வந்து உன்னுடைய அழகிய, பெருமை வாய்ந்த இடமான, சிங்காசனத்தில் இங்கிதமாய் வந்த மர்ந்து, உன் அடியார்களாகிய யாங்கள் இங்கே வந்த செய்தியைக் கேட்டு, அருளவேண்டுகின்றோம் என்று ஆய்ச்சியர்கள் கூறினார்கள். இச்செய்தியை,

''மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணாஉன்
கோயில்நின் றிங்ஙனே போந்தருளிக் கோப்புடைய
சீரிய சிங்கா சனத்திருந்து யாம் வந்த
காரியம் ஆராய்ந் தருளேலோர் எம்பாவாய்!''

என்று பாடுகின்றார் கோதை. மழைக்காலத்தில் எல்லாவிடங்களிலும் நீர் தேங்கியிருக்கும். இக்காலத்தில் எவரும் வெளியில் செல்ல இயலாமலிருப்பர். மன்னர் களெல்லாம் பகையை மறந்து, படையைத் திரட்டிக் கொண்டு போர் செய்வதைத் துறந்து இருப்பார்கள். சில மாதங்களில் தம் இருப்பிடத்திலேயே மன்னிக்கிடப் பார்கள்.

சக்ரவர்த்தித் திருமகனான இராமபிரானும் பிராட்டி யினைப் பிரிந்து இருந்தவன் பிராட்டியை விரைவில் மீட்க, சுக்கிரீவன் துணையை நாடினான்.

மழைக்காலமானதால் சுக்கிரீவனை நான்கு மாதம் கழித்து வருமாறு இராமபிரான் கூறினான். இராமபிரா

னும் இளையபெருமானும் ரிஷியமுகப் பருவதத்திலே தங்கி அக்காலத்தைக் கழித்தனர். மாரிக் காலத்திற்குப் பின்னரே சுக்கிரீவன் துணையுடன் இராமபிரான் இராவணனுடன் போரிட்டுப் பிராட்டியை மீட்டான்.

மாரிக்காலம் பிரிந்தவர் கூடும் காலமானதால் அக்காலத்தில் மலைக் குகைகளில் சிங்கம் கிடந்துறங்கும். அப்போது சிங்கத்திற்குப் பகையானகளிறு பிளிறினாலும் தெரியாது. பின்னர் அது விழித்ததும் நம் எல்லைக்குள் வந்தது யார்? எனச்சீறி நோக்கி மயிர்களைச் சிலிர்க்கும்.

உறங்கும்போது முடங்கிக் கிடக்கும் சிங்கமானது, எழுந்ததும் திமிர்ப்புத் தீரும்படி அவயவங்களை, உதறி,சோம்பலை முறித்து, கண்களில் தீப்பொறிப் பறக்கும்படி நாற்புறமும் நோக்கும். பின்னர் வீரகர்ச்சனை செய்யும். பின்னர் தன் இருப்பிடத்தை விட்டுப் புறப்படும். இது தனித்தன்மை பெற்ற வீரமிகுந்த சிங்கத்தின் இயல்பு.

சிங்கத்தைப் போன்ற வீரமுடையவன் ஆராவமுதன். பேராற்றலுடையவனான கண்ணபெருமான் மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்படும் சிங்கத்தைப் போன்று புறப்பட்டு வந்து சிங்காசனத்தில் அமர்ந்திடவேண்டும் என்று ஆய்ச்சியர்கள் கூறுகின்றார்கள்.

சிங்கம் மலைமுழைஞ்சில் தன் துணையுடன் கிடந்து உறங்குவதைப் போன்று, இந்த யசோதை இளஞ்சிங்கம் நப்பின்னை கொங்கை மேல் வைத்துக் கிடந்த மலர் மார்பனாவான். சிங்கம் பிறக்கும் போதே மிருகேந்திரன்' மிருகராசன் என்ற சிறப்புப் பெயர் பெற்றதைச் ''சீரிய சிங்கம்'' எனப்பட்டது.

கண்ணபெருமான் நரசிங்க அவதாரம் எடுத்தபோது தன்னுடலில் ஒரு பாகம் சிங்க வடிவும் மற்றொரு பாகம் மானுட வடிவும் கொண்டிருத்தல் பற்றி, சிற்றாயர் சிங்கம், எசோதை இளஞ்சிங்கம் என்ற அடைமொழி கொடுத்துப் பெருமை செய்கின்றார் கோதை.

அறிவுற்று:— என்பது அறிவில்லாத ஒன்று அறிவு பெற்றதைக் குறித்துக் காட்டுவது. சிங்கம் தன் துணையுடன் இருந்தபோது அறிவிழந்து இருந்தது என்பதைத் தெரிவிக்கவே ஆளப்பெற்றது. பேரறிவாளனான எம்பெருமான் என்றும் சுடர்ந்து நிற்பவன். அவனை யார் அறியாமலிருக்கின்றார்களோ? அவர்களை அவன் அறியமாட்டான். அவனை நினைக்கும் அடியார்களை அவன் நினைந்து அருள் சொரிவான். என்றும் அறிவுற்றவனாகவே இருக்கும் அவன் அறிதுயில் கொண்டு உலகை நெறிபடுத்தி வருகின்றான். அவனை,

தீவிழித்து:— என்ற சொற்களால் அழைக்கின்றார்கள். ஆய்ச்சியர்களின் கூக்குரலைக் கேட்டு இவர்களுக்கு யாரால் என்ன துன்பம் நேர்ந்ததோ என்று அவனின் திருக்கண்கள் சிவக்கச் சீற்றத்துடன் நோக்கினான் என்பதை மேற்குறித்த தொடரால் காட்டப் பெற்றது.

அருளாளனின் சீற்றம் தன் அடியார்களின் துயரத்தை மாற்றவே ஏற்பட்டதாகும்.

வேரி மயிர் பொங்க—என்பதில் சிங்கத்தின் ஆற்றலைக் காட்டும் வகையில் அதன் மயிர்கள் அமைந்திருக்கும் தன்மையைக் கூறப்பட்டது. சிங்கம் கிடந்துறங்கும்போது, மயிர்நெருக்குண்டு படிந்து அழுந்திக் கிடக்கும். உணர்ந்து, எழுந்ததும் அதன்மயிர்கள் மலர்ந்து நிமிர்ந்து, புடைபெயர்ந்து, குத்தலிட்டு நிற்கும், இஃது அதற்கு இயல்பாகவே அமைந்த தன்மையாகும்.

''எப்பாடும் பேர்ந்து உதறும்''— எல்லாப்பக்கங்களிலும் பெயர்ந்து சிலிர்க்கும் என்று கூறுகின்றார். ''மூரி நிமிர்ந்து'' என்று கூறியது சோம்பல் தீரும்படி நிமிர்ந்து உதறி நின்றது என எடுத்துக் காட்டியதாகும்.

கோப்பு என்றது பெருமையைக் குறித்ததாகும். அறத்தையும் மறத்தையும் எடுத்துக்காட்டி, மறத்தை

நீக்கியும் அறத்தைப் போற்றியும் வரும் எம்பெருமான் இருந்து ஆட்சி செய்யும் சிம்மாசனத்தை மேற்குறித்த சொல் விளக்குதல் காணலாம். சிம்மாசனம் என்னும் வடசொல்லை இனிய தமிழ்ச் சொல்லால் சிங்காசனம் என்றார் கோதை. இது வடசொல் விகாரமாகும். எம்பெருமான் சிங்காசனத்தில் இருந்து சிறக்க ஆட்சி புரிவதைக் காட்ட, இப்பாசுரத்தில் இனிது பாடித்தெரிவிக் கின்றார்.

''யாம் வந்த காரியம் ஆராய்ந்து அருள்!'' என்று கூறியதில் அவன் எதையுமே ஆராய்ந்து அருள்பவன். உண்மையானவர்கள் யார் என்று அறிந்த பின்னரே, அவர்களைத் தன்னடியார்களாக எண்ணி இசைந்து அருள்வான். ஆதலால் நாங்கள் வந்த காரியத்தையும் ஆராய்ந்து அருள்வாயாக! என்று ஆய்ச்சியர்கள்அவனிடம் கோருகின்றார்கள்.

நீ அருள்வதை நாங்கள் ஏற்கும் கலங்களாக உள்ளோம். தூயவர்களாக நேயங்கொண்டு உன்னிடம் வந்துள்ளோம். எங்கள் காரியத்தை ஆராய்ந்து அருள் வாயாக! எனறு கோரி நின்றார்கள்.

ஒருவரிடம் உதவி பெறச் சென்றவர்கள், உடனே தம் விருப்பத்தைச் சொல்லமாட்டார். அவர் கேட்டபோதும் சும்மா வந்தேன்; பார்த்துவிட்டுச் செல்ல வந்தேன் என்று சொல்வார். பின்னர் திரும்பும்போது கடைசியாகத் தம் கருத்தைச் சொல்லி வேண்டுவார்.

இந்நிலையில்தான் ஆய்ச்சியர்கள் கடைசியாக ''யாம் வந்த காரியம் ஆராய்ந்து அருள்'' என்று கண்ண பெருமானிடம் கோருகின்றார்கள்.

இப்பாசுரத்தில் ஏழு அடிகளில் எம்பெருமானின் பேராற்றலை எல்லாம் சொல்லியவர் கடைசியாக எட்டாம் அடியில் காரியம் ஆராய்ந்து அருள் என்றார்.

கோதை. உதவி செய்பவரை உயர்த்தி, இதமாகப் பேசிய பின்னரே தமக்கு வேண்டியதைக் கோருவதைப் போல, எம்பெருமானைப் பலவகையிலும் சிறப்பித்துக் கூறிய பின்னரே தமக்கு வேண்டியதைக் கோருகின்றார். இதனால் இவர் உலகியலை நன்குணர்ந்தவர் என அறியலாம்.

எம்பெருமானுக்குச் சிங்கத்தை உவமையாகக் காட்டினார் கோதை. விலங்குகளுக்கு அரசன் சிங்கம். தேவர்களுக்கெல்லாம் தேவன் திருமால்; மாரிக்காலத்தில் தன் துணையுடன் குகையில் சிங்கம் ஒடுங்கிக் கிடக்கும்.

எம்பெருமான் பிரளய காலத்தில் நப்பின்னை என்னும் சக்தியுடன் ஒன்றி, யோக நித்திரை புரிவான். பசியின் மிகுதியால் கண்களில் தீப்பொறி பறக்க விழிக்கும் சிங்கம் போல், அடியார்களின் அபயக்குரல் கேட்டு யாரால் என்ன தீங்கு நேர்ந்ததோ? என்று சீறி விழிக்கின்றவன் கண்ணன்.

உலகத்தைப் படைத்த அவன் அவ்வுலகத்தில் நிகழும் கொடுமைகண்டு வெகுண்டும், அக்கொடுமையினை அழிப்பதற்கு, நிமிர்ந்தும் வீறுகொண்டு சிங்கமாக நின்றான் என்றார்.

## பாவையில் இலக்கியச் செய்திகள்

நூண்மாண் நுழைபுலமிக்கவர் கோதை. திருப்பாவை பரம்பொருளைப் படம் பிடித்துக் காட்டும் அருளியல் நூலாக இருந்தாலும், உலகியலுக்குரிய செய்திகளை எல்லாம் எடுத்துப் பேசுகின்றவகையில் படைத்தருளினார். மலைக் குகையில் துயிலும் சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து, பிடரி மயிரை உதறிவரும் காட்சியை எவரும் எக்காலத்தும் மறக்க முடியாத வகையில்,

''மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரி மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலே''

என்று பாடுவதில் உண்டாகும் இசையோட்டத்தில் சிங்கத்தின் ஆற்றலைக் காணலாம். கம்பீரமான வேகத்துடன் பாட்டுச் செல்லக் காணலாம். இவ்வோசையில் சிங்கத்தின் கர்ச்சனையைக் கேட்க முடியும். மழைக் காலத்தில் குகையில் உறங்கிக் கிடக்கும் சிங்கம் மழை விட்டதும் அறிவுற்றுத் தீவிழித்துப் பிடரி மயிரை உதறிக் கொண்டு கம்பீரமாக நிமிர்ந்து முழங்கிக்கொண்டு புறப்படுவதைப் போன்று கண்ணா நீ புறப்பட்டு வர வேண்டும் என்று அவன் வடிவழகைக் காண ஆய்ச்சியர்கள் அகங்குழைந்து வேண்டுகின்றார்கள்.

இந்த உவமை எம்பெருமானின் செவ்வியையும் வீரத்தையும் புலப்படுத்துதல் அறியலாம். கோதைப் பிராட்டி மலைக் குகையில் உள்ள சிங்கத்தை நேரில் பார்த்திருக்கக் கூடும். பார்த்தவாரே, தாம் அனுபவித்த வாறே பாடுகின்றார்.

வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் திருவாக்கின்படி 'கிரியருகில் உள்ள புத்தூரில்' வாழ்ந்து வந்த கோதை, சிங்கத்தின், இயல்புகளை நன்கு கண்டு அவ்வழகினைப் பிறர் அறியும் வண்ணம் இப்பாசுரத்தில் அமைத்துக் கண்ணபெருமானுக்கு உவமையாக்கிப் பாடியருளிய பெற்றி, மிகவும் போற்றுவதற்குரியதாகும். திருப்பாவை பேரிலக்கியமாகத் திகழ்வதில் வியப்பு யாது? என்றார். எவற்றையும் உவமையுடன் காட்டுவது பெருமைதரும். அந்த வகையில் உவமைகளைப் பயன் படுத்தித் திருப்பாவையின் அருளியல் நிலையை உயர் வாக்கிக் காட்டுகின்றார் கோதை.

"உவமை யென்னும் தவலரும் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய வரங்கிற் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவ ரிதய
நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே!"

என்று காட்டும் உவமை நெறியில் இவர் பாவையில் உவமைகளைப் பயன்படுத்திச் சிறப்பிக்கின்றார். தம் பாசுரங்களில் பொருள்களை அவற்றின் இயல்புகளை எடுத்துக் காட்டுதலோடு அவற்றிற்குரிய உவமைகளைக் கூறியே பொருத்திக் காட்டிச் சிறப்பிக்கின்றார். பொருள் களைப் புலப்படுத்துவதற்கு உவமைகளே சிறப்புக்குரியன வாகும். என்ற செய்தியினை எவரும் அறியத்தக்க ஒன்றாம். எட்டாம் பரிபாடலில் இருபத்தோராம் அடியில் "மலை முழை" என்று பாடப் பெற்றுள்ளது. இது மலையில் உள்ள குகையைக் குறிக்கும். இதைக் கோதைப் பிராட்டியார் தம் பாசுரத்தில்,

"மாரி மலைமுழைஞ்சில்"

என்றார். பரிபாடல் ஆசிரியர் மலைக்குகைக்குள் இருந்து வெளிப்படும்ஒலியையே,

"அதிர்ப்பு மலை முழை"

எனறார். இதற்கு உரை வரைந்த பரிமேலழகர், 'மதமிக்க களிறு மாறு மாறாகப் பிளிறுதலானும் மலை முழைக்கண் எழுகின்ற எதிரொலியானது, மறு தலையாக நின்றது' என்றார். மலை முழைஞ்சில் உள்ள சிங்க மானது. வெளிவரும்போது,

"மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு" வரும் என்பதைக் கண்ண பெருமானின் ஆற்றலுக்கு ஒப்புமை காட்டினார் கோதை.

"அணங்குடை நெடுங் கோட்டளையக முனைஇ
முணங்குநிமிர் வயமான் முழுவலி யொருத்தல்"

என்று புறநானூற்றில் வரும் 52ஆம் பாடல் பகர்கின்றது. 'தெய்வங்களை யுடையதாகிய நெடிய சிகரங்களையுடைய மலையிலே உள்ள முழையின் கண் துயிலை வெறுத்து மூரி நிமிர்ந்து மிக வலிமையுடைய புலி உறுமி வருதலை' மேற் குறித்த வரிகள் சுட்டுகின்றன. சோம்பலை முறித்து நிமிர்ந்து வருவதை

''மூரி நிமிர்வன போல''

என்று பெருங்கதை பேசுகின்றது. மேலும் இதை

''மூரி தவிர முடுக்கு முதுசாடி''

என்ற இருபதாம் பரிபாடல் இயம்புகிறது. ஊடல் கொண்ட பெண்ணின் நிலையைக் காட்ட வந்த கம்ப நாட்டாழ்வார்.

''உய்த்தபூம் பள்ளியின் ஊடல் நீக்குவான்
சித்தமுண் டொருத்திதன் அன்பன் றேர்கிலான்
பொய்த்ததோர் மூரியான் நிமிர்ந்து போக்கினாள்
எத்தனை இறந்தன கடிகை யீண்டென்றாள்''

என்று பாலகாண்டத்தில் பகர்வார். இவ்வாறு வரும் 'மூரி'யென்னும் சொல்லைச் சிங்கத்தின் மேல் வைத்து அச்சிங்கத்துக்கு ஒப்பாகவுள்ள கண்ணனை மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு, சீரிய சிங்காசனத்தில் வந்து அமர்ந்து தம் குறையைக் கேட்டு, அதனை நீக்க வேண்டும் என்று ஆய்ச்சியர்கள் கோரி நின்றார்கள். ஆம் அவன் குறை யொன்றுமில்லாத கோவிந்தன். பிறர் குறையைப் போக்கி அவர்கள் நிறைவான வாழ்வினை எய்த உதவிசெய்பவன் ஆதலால் அவன் மீது காதலுற்ற ஆய்ச்சியர்கள் இவ்வாறு வேண்டி நின்றார்கள்.

மறை முடிவாகிய பொருளைப் பிரம்மம் என்பர்; பிரம்ம வடிவமே சிங்கன்; கருடன் மீதமர்ந்து செல்ப வனே சிங்கன்; இச்சிங்கன் கொடியோரைப் பங்கம் செய் பவன்; அடியாரை அரவணைப்பவன். அடி தொடங்கி

என்று புறநானூற்றில் வரும் 52ஆம் பாடல் பகர்கின்றது. 'தெய்வங்களை யுடையதாகிய நெடிய சிகரங்களையுடைய மலையிலே உள்ள முழையின் கண் துயிலை வெறுத்து மூரி நிமிர்ந்து மிக வலிமையுடைய புலி உறுமி வருதலை' மேற் குறித்த வரிகள் சுட்டுகின்றன. சோம்பலை முறித்து நிமிர்ந்து வருவதை

''மூரி நிமிர்வன போல''

என்று பெருங்கதை பேசுகின்றது. மேலும் இதை

''மூரி தவிர முடுக்கு முதுசாடி''

என்ற இருபதாம் பரிபாடல் இயம்புகிறது. ஊடல் கொண்ட பெண்ணின் நிலையைக் காட்ட வந்த கம்ப நாட்டாழ்வார்.

''உய்த்தபூம் பள்ளியின் ஊடல் நீக்குவான்
சித்தமுண் டொருத்திதன் அன்பன் றேர்கிலான்
பொய்த்ததோர் மூரியான் நிமிர்ந்து போக்கினாள்
எத்தனை இறந்தன கடிகை யீண்டென்றாள்''

என்று பாலகாண்டத்தில் பகர்வார். இவ்வாறு வரும் 'மூரி'யென்னும் சொல்லைச் சிங்கத்தின் மேல் வைத்து அச்சிங்கத்துக்கு ஒப்பாகவுள்ள கண்ணனை மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு, சீரிய சிங்காசனத்தில் வந்து அமர்ந்து தம் குறையைக் கேட்டு, அதனை நீக்க வேண்டும் என்று ஆய்ச்சியர்கள் கோரி நின்றார்கள். ஆம் அவன் குறை யொன்றுமில்லாத கோவிந்தன். பிறர் குறையைப் போக்கி அவர்கள் நிறைவான வாழ்வினை எய்த உதவிசெய்பவன் ஆதலால் அவன் மீது காதலுற்ற ஆய்ச்சியர்கள் இவ்வாறு வேண்டி நின்றார்கள்.

மறை முடிவாகிய பொருளைப் பிரம்மம் என்பர்; பிரம்ம வடிவமே சிங்கன்; கருடன் மீதமர்ந்து செல்ப வனே சிங்கன்; இச்சிங்கன் கொடியோரைப் பங்கம் செய் பவன்; அடியாரை அரவணைப்பவன். அடி தொடங்கி

என்றார். 'சீரிய' என்னும் அடை கொடுத்து அழகுறப் பேசுகின்றார். இரணியனை வதைத்த சிங்கம், சிறந்த பக்தனான பிரகலாதனைக் காத்த சிங்கம் எனவே, ''சீரிய சிங்கம்'' என்று இன்னமுதனைப் பெருமையாகவே பாடுகின்றார். அன்பின் விளக்கமாகத் திகழும் இன்னமுதன் பெற்ற மேனி 'காயாம் பூ' போன்றிலங்கும் அழகு மேனி, இத்தகைய பூவைப் பூப் போன்ற மேனியுடையானைத் தொல்காப்பியர் புகழ்ந்து பேசுவார். மன்னர்க்குத் திருமாலை உவமை கூறும் 'பூவை நிலை' என்னும் புறத் துறையைப் பற்றிக் கூறுமிடத்து,

''மாயோன் பேய மன்பெருஞ் சிறப்பிற்
றாவா விழுப்புகழ்ப் பூவைநிலையும்''

என்று பாடிய தொல்காப்பியர், 'பூவை நிலை'யை மாயவன் திருவுருவத்தோடு உவமித்துப் பேசுதல் அறியலாம்.

''கறவை காவலன் நிறனொடு பொரீஇப்
புறவலர் பூவைப் பூப்புகழ்ந் தன்று''

என்று புறப் பொருள் வெண்பா மாலை கூறுதல் காணலாம்.

''பறவாம் பூவைப் பூவி னோயே''
என்று மூன்றாம் பரிபாடலும் காட்டுதல் காணலாம்.

''கார்மலர் பூவை கடலை யிருண்மணி
அவை யைந்தும் முறழ மணிகிளர் மேனியை''

என்று பதிமூன்றாம் பரிபாடலும் காட்டுதல் அறியலாம் இந்தப் பூவைப் பூ வண்ணனைக் கோதை

''போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணா உன்
கோயில்நின் றிங்ஙனே போந்தருளி''

என்று பாடுகின்றார். சங்க இலக்கியக் கடலுள் மூழ்கியவர், தம் இனிய பாசுரத்தின் பெற்றி விளங்க. தேவைக்குரிய இனிய சொற்களாகிய முத்துகளை எடுத்து வந்து சித்திரித்துள்ளார். இவ்வாறு செவ்வி விளங்கச் சித்திரித்த இப் பாசுரத்தின் இனிமை ஒப்பின்றி விளங்குதல் காணலாம், இவ்வாறு படைத்தளித்த கோதைப் பிராட்டியாரின் பாசுரத்தைப் பாடிச் சீராளனான எம்பெருமானைப் பற்ற முயலுவோமாக.

வந்து தருவான்வாழி

மாரியே யின்றி யிங்கே
மக்களே வருந்தும் போது
மாரியாய் நன்மை செய்யும்
மாதவன் ஆற்ற லோடு
மாரியாம் மலைமுழைஞ்சில்
மன்னிய சிங்கம் போன்று
மூரியே வந்து இன்பம்
முனைந்துமே தருவான் வாழி!

# குன்றை எடுத்தானைக் கூறு!

*உலகளந்தான் பெற்ற உயர்திருப் பாதங்கள்*
*நிலையில்மா றாமல் நிறுத்தும்—நலமருளும்*
*என்றுரைத்துக் கோதை இசைத்த திருப்பாவை*
*இன்பமெலாம் தந்திடுமே ஏத்து!*

—கவியமுதனார்.

உலகளந்தானின் திருப்பாதங்கள் நம்மை நிலையில் திரியாமல் நிறுத்தும்; நலமருளும்; என்று கோதை அவன் திருப்பாதத்தின் மாட்சி கூறி, திருப்பாவையை இசைத்தார். அவனைப் பெற விழைந்தார். அவர் பெற்ற விழைவை நாம் பெறத் திருப்பாவையை இசைக்க வேண்டுமென்று கவியமுதனார் கூறுகின்றார்.

இந்திரன் முதலான தேவர்கள் மாவலி மன்னனால் துன்பம் அடைந்தார்கள். எம்பெருமானிடம் தம் துன்ப நிலையைக் கூறினார்கள். அவர்களின் குறையைப் போக்க; மாவலியின் கொடுமையை ஒழிக்க எம்பெருமான் எல்லா உலகங்களையும் ஈரடியால் அளந்தான். இப்படி அளந்தவனின் திருவடியை வாழ்த்தி வணங்குவோமாக!

சீதாப் பிராட்டியைக் கவர்ந்த இராவணனை அவனிருக்கும் இடத்திற்குச் சென்று அழித்த இராமபிரான் இலங்கையையும் பாழ்படுத்தினான். அத்தகையவனின் திருவடியினைப் போற்றிக் கூறுவோமாக!

# குன்றை எடுத்தானைக் கூறு!

உலகளந்தான் பெற்ற உயர்திருப் பாதங்கள்
நிலையில்மா றாமல் நிறுத்தும்—நலமருளும்
என்றுரைத்துக் கோதை இசைத்த திருப்பாவை
இன்பமெலாம் தந்திடுமே ஏத்து!

—கவியமுதனார்.

உலகளந்தானின் திருப்பாதங்கள் நம்மை நிலையில் திரியாமல் நிறுத்தும்; நலமருளும்; என்று கோதை அவன் திருப்பாதத்தின் மாட்சி கூறி, திருப்பாவையை இசைத்தார். அவனைப் பெற விழைந்தார். அவர் பெற்ற விழைவை நாம் பெறத் திருப்பாவையை இசைக்க வேண்டுமென்று கவியமுதனார் கூறுகின்றார்.

இந்திரன் முதலான தேவர்கள் மாவலி மன்னனால் துன்பம் அடைந்தார்கள். எம்பெருமானிடம் தம் துன்ப நிலையைக் கூறினார்கள். அவர்களின் குறையைப் போக்க; மாவலியின் கொடுமையை ஒழிக்க எம்பெருமான் எல்லா உலகங்களையும் ஈரடியால் அளந்தான். இப்படி அளந்தவனின் திருவடியை வாழ்த்தி வணங்குவோமாக!

சீதாப் பிராட்டியைக் கவர்ந்த இராவணனை அவனிருக்கும் இடத்திற்குச் சென்று அழித்த இராமபிரான் இலங்கையையும் பாழ்படுத்தினான். அத்தகையவனின் திருவடியினைப் போற்றிக் கூறுவோமாக!

நிகழ்ச்சியில் பாடுவோரின் இனிய பாட்டில் மெய்மறந்து அங்கேயே நின்று விட்டார். வந்த செயலை மறந்தவரைப் போன்று இந்த ஆய்ச்சியர்கள் அருளாளனிடம் கோரி வந்ததை மறந்து அவனழகில் மயங்கி நின்றார்கள். ஆதலால் அவன் திருவடிப் பெருமையினை உயர்வாகப் போற்றினார்கள். யார் யாருக்கு என்ன தேவையென்பதை உணர்ந்தவன் கண்ணன். எனவே, தம் கருத்தை அவன் தெரிந்து செய்வான் என்பதால், கோரி வந்த கருத்தை விடுத்து அவன் திருவடியைப் புகழ்ந்தார்கள்.

தலைவனுக்கு மேன்மை ஏற்படுத்துவது தொண்டனின் கடமை. ஆதலால். தலைவனான கண்ணனுக்குத் தொண்டர்களான ஆய்ச்சியர்கள் அவனின் சிறந்த குணங் களை விரும்பி அருளும் தன்மைகளைச் சொல்லிப் புகழ்ந்தார்கள்.

இந்திரன் முதலான தேவர்கள் மாவலியால் துன்புறுத் தப்பட்டார்கள். அவர்களின் துன்பத்தை நீக்க, சிறிய வடிவத்தோடு சென்று, பெரிய உருவம் எடுத்து, கொடுமை செய்த மாவலியை நசித்தான் நாரணன்- அவன் செய்த இத்திறத்தை

''அன்றிவ் வுலகம் அளந்தாய் அடி போற்றி''

என்றார் கோதை. இதில் ''அளந்தான்'' என்று கூறாமல் அளந்தாய்!' என்றது ஈறு திரிந்த விளியாகும்.

கண்ணன் குழந்தையாய்த் தொட்டிலில் கிடந்தபோது கம்சனால் ஏவப்பட்ட சகடாசூரன் வண்டி உருவத்தில் கொல்ல வந்தான். சதிகாரனின் நிலையையறிந்த மாயன் தொட்டிலில் கிடந்தவாறே பாலுக்காக அழும் குழந்தை தன் கால்களை உதைத்துக் கொள்வதைப் போன்று உதைத்துக் கொடிய அச் சகடனைப் பொடியாக்கினான். இதைக் கோதைப் பிராட்டியார்,

''பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ்போற்றி''

என்றார். தென்னிலங்கையி லிருந்த பொல்லாத இராவணனை வீழ்த்தியதைச்

'சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல் போற்றி' என்றார். கன்றின் வடிவமாக வந்தவன் வத்சாசூரன். அவனை மாமாயன் தடியாக்கி, மரத்தில் விளாங்காய் வடிவில் தொங்கி நின்ற கபிதாசூரனை அடித்து வீழ்த்தி இருவரையும் ஒரு சேரக் கொன்றான். இதனைக்

'கன்று குணிலா வெறிந்தாய் கழல் போற்றி''

என்றார். இந்திரன் இறுமாந்து செய்த இடர்ப்பாட்டைக் கண்ணன் கோவர்த்தன மலையை எடுத்துக் குடையாய்ப் பிடித்து ஆயர்களையும் ஆவினத்தையும் காத்தான். மலையெடுத்துக் காத்த இத் தெய்வத்தைக்

''குன்று குடையா வெடுத்தாய் குணம் போற்றி''

என்று கூறுகின்றார். நந்தகோபாலன் வேலை உடையவனாயிருந்தான். பொறுமைக்கு இருப்பிடமான அவன் ஆயர்பாடி மக்களுக்குத் துன்பம் நிகழாதவாறு காக்க ஆட்சி புரிந்தவன் ஆதலால் அவனைக் 'கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன்' என்றார். அவன்வேல் கூர்மையுடையது அதனால் கூர்' என்று அடை கொடுத்துக் "கூர்வேலெ'ன்றார்;

நந்தகோபனுடைய மகனான கண்ணனும் வேலை உடையவனாயிருந்தான். இவனின் வேலுக்கும் கோதை அடைமொழி கொடுத்து

''வென்று பகை கெடுக்கும் நின்கையில் வேல்'— போற்றி'' என்றார். 3 ஆம் நாச்சியார் திருமொழி 5 ஆம் பாசுரத்தில், கண்ணன் பிடித்திருந்த வேலைப் பற்றி,

''வேலைப் பிடித்தென்ன மலர்கள்''

என்று பாடுவதாலும், அவன் வேலின் திறத்தை அறியலாம். அந்த வேலுக்கும் போற்றிக் கூறுகின்றார்.

''எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றனோடு
உற்றோமே யாவோம்; உனக்கே நாம்
ஆட்செய்வோம்''

என்று கூறிய ஆயச் சிறுமியர்கள் உனைப் பாடிப் பறை கொள்வான் இன்று யாம் வந்தோம்'' என்று அவனிடம் கூறுகின்றார்கள்.

எம்மை ஆட்படுத்தி அருளும் குணத்தையுடையவன் நீ! ஆதலால் உன்னிடம் வந்தோம், ஆம், உன்னை விட்டால் எமக்கு வேறுகதியில்லை எனவே,வேட்கையோடு காணவந்தோம். என்ற தம் மனஆதங்கத்தை

''யாம் வந்தோம்''

என்று ஆய்ச்சியர்கள் நேயமுடன் தெரிவித்தார்கள். ஆளும் அரசனிடம் மக்கள் குறையிரந்து வேண்டுதல்போல, இவ்வாய்ச்சியர்கள் உலகையாளும் உலகளந்தானிடம் தம் நிலையை எடுத்துக் கூறி வேண்டி நின்றார்கள்.

இப்பாசுரத்தில் கண்ணன் ஆயர்குலச் சிறுமியர்களின் கோரிக்கையை நிறைவேற்றதன்பள்ளியறையை விட்டு, சிங்காசனத்திற்கு வருகின்றான். அவன் வருகின்றபோது அந்த நடையழகைக் கண்ட இவர்கள் அவனுக்கு மங்களம் உண்டாகப் பண்ணிசைத்தார்கள்.

அன்று உலகை அளந்த திருவடிக்கு, கானகத்தில் திரிந்து ஞானியர்களுக்கு நலஞ் செய்த திருவடிக்கு, சகடத்தை உதைத்துக்கொடுமையை வீழ்த்தியதிருவடிக்கு, கன்றை எறிந்து பொன்று வீழ்த்திய போது குஞ்சித்த திருவடிக்கு, மலையைக் குடையாய்ப் பிடித்தபோது ஊன்றி நின்ற திருவடிக்கு மனம் நெகிழ்ந்து திருவடிப் புகழ்ச்சி பாடினார் கோதை.

இப்பாசுரத்தில் விரோதிகளான அறுவரைக் குறித்தார். இவர்களில் ஐவர் அசுரர்கள். ஒருவன் இந்திரன்.

இவன் குரோத எண்ணத்தால் எதிரியானான். பின்னர் தன் தவற்றை உணர்ந்ததால் தண்டிக்கப் படாமல் மன்னிக்கப் பெற்றான்.

இவ்வறுவரையும் அகப் பகைவர்களாகக் குறிக்க லாம். மாவலி ''அகங்கார'' மதம் கொண்டவன். இராவணன் ''காம''வெறி பிடித்த கயவன். சகடன் ''மோக'' முற்றவன். வத்சன் ''லோப'' குணத்தன். கபிதன் ''மாச்சரியப் போக்கன்'' இந்திரன் ''குரோத'' மனத்தன். இக்குணங்களை மாய்ப்பவனே ஞானவான். இத்தீய குணங்களால் கொடுமை செய்வோரை வீழ்த்து பவன் சிறந்த வீரன். அவனே எம்பெருமான். திருந்திய வரை ஆட்கொண்டும் திருந்ாதவரை வீழ்த்தியும் உலகை நெறிப்படுத்துபவன் மாயன். அவனே ஞானவள்ளல்.

அன்று பெரியதாகி உலகையளந்த மாபெரும் திருவடி இன்று எமக்காகச் சிறியதாகி, மென்மையுடையதாகி, பேரழகு வாய்ந்ததாகி எங்களை ஆளவந்த சேவடி என்றார்கள். இறைவனைக் காண்பதற்கு முன்பு அவனிடம் 'அது வேண்டும் இதுவேண்டும்' என்று கேட்கத் திட்டமிட்டவர்கள், அவனைப் பார்த்ததும் அவனின் பேரழகில் மயங்கி எதையும் கேளாமல் மயங்கி நிற்பவர்களைப் போல, இவ்வாய்ச்சியர்களும் தமக்காக எதையும் கேட்காமல் அவன் திருவடிக்குப் பல்லாண்டிசைத்தார்கள்.

## பாவையில் இலக்கியச் செய்திகள்

மாவலியின் செருக்கை அடக்குவதற்கு, மிகச் சிறிய வடிவமாய் வாமனன் என்னும் பெயரால் அவன்முன் மூன்றடி மண்ணுக்கு இரந்தான். இம்மாயனின் தன்மையை உணராமல் மாவலி கேட்டபடி நீர்கொண்டு தாரை வார்த்துக் கொடுக்கும் போது, மாயனின் கையில் நீரை

ஊற்றிக் கொண்டிருந்தான்: அப்போது சிறிது சிறிதாக மாமாயன் மண்ணுக்கும் விண்ணுக்குமாக ஓங்கி நின்று மாபெரும் உருவுடன் உலகை ஈரடியால் அளந்தான். இன்னும் ஓரடிக்கு மண்தரவியலாத மாவலி தன்தலையைக் காட்டினான். நிலையில் திரிந்த அவனின் தலையில் காலை வைத்துக் கலங்கிவீழ அழித்தான். இச்செய்தியைமுல்லைப் பாட்டாசிரியர் ''நீர் செல நிமிர்ந்த மாஅல் போல''

என்று பாடினார். இவர் கூறிய பாட்டின் கருத்தை விளக்கும் இலக்கியமாகக் கோதை

''அன்றிவ் வுலகம் அளந்தாய் அடிபோற்றி!''

என்று திருப்பாவையில் பாடினார். கருணா மூர்த்தியின் திருவிளையாடலை இவ்விருவரும் பெருமையாகப் பாடினர். அடுத்து ஐங்குறு நூற்றில் 429-ஆம் பாடலில்

....... ''செற்றார்<br>
வெல்கொடி யரண முருக்கிய<br>
கல்லா யானை பகை வெலற்கே''

என்று கூறப் பெறுகிறது.

''பொருவேம் மென்றவர் மதந்தபக் கடந்து<br>
செருமேம் பட்ட செயிர்தீர் அண்ணல்''

என்று பரிபாடல் பேசுகிறது.

''செற்றவர் அரசு பெயர்குவை''

என்று மதுரைக்காஞ்சி மொழிகிறது.

''செருவர்க்கு உவகையாகத் தெறுவர''

என்று குறுந்தொகை கூறுகிறது. இந்தச் செந்தமிழ் இலக்கியங்களின் கருத்துகளைக் கோதைப் பிராட்டியார்,

''சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய்<br>
திறல்போற்றி

என்றுபாடும் (இராமபிரானின்) திறத்தை நாம் அறியலாம்.

திரிகடுகம் பாடிய நல்லாதனார் கண்ணபிரானின் கழலைப்பற்றி

''மாயச் சகடம் உதைத்ததுவும்.......

பூவைப் பூ வண்ணன் அடி''

என்று சிறப்பித்தார். இவர் கருத்தை மேலும் சிறப்பிக்கும் வகையில், நம் கோதைப் பிராட்டி,

''பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ்போற்றி''

என்று பாடிக்காட்டினார். குணில் என்பது குறுந்தடி, இக்குறுந்தடியால் அடித்த விவரத்தை,

''பான்றைக் கண்ணிப் பல்லான் கோவலர்

கரும்பு குணிலா மாங்கனி யுதிர்க்கும்''

என்று பாடியதில் 'பான்றைக் கண்ணி' என்பது சிவந்த பூவாலான மாலை, 'பல்லான் கோவலர்' என்பது பசுக்களை மிகுதியாகப் பெற்ற ஆயர்—குணில்—என்பது குறுந்தடி கொண்டு மாங்கனிகளை உதிர்த்த செய்திகளை ஐங்குறு நூற்றில் காட்டப் பட்டுள்ளது.

''கன்று குணிலாக் கனி உதிர்த்த மாயவன்''

என்று சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் கூறுவார். இத்தொடர் மொழியை விவரிக்கும் வகையில் கோதை,

''கன்று குணிலா எறிந்தாய் கழல்போற்றி''

என்றுபாடி, அருளாளன் கழலுக்குப் போற்றிப் புகழ் மாலை சூட்டுகின்றார். முல்லைப் பாட்டின் இறுதி வெண்பாவில்

''கன்றெடுத் தோச்சி கனிவிளவின் காயுகுத்துக்

குன்றெடுத்து நின்ற நிலை''

என்றதில் கன்றின் உருவமாய் விளங்காயின் உருவமாய் வந்த இரு அரக்கர்களை அழித்ததோடு குன்றைக் குடையாய்ப் பிடித்து ஆயர்களுக்கும் ஆவினத்திற்கும்

காப்பளித்ததோடு, இந்திரனின் செருக்கையும் அடக்கியவன் மாமாயன் என்று கூறிய கருத்தை அடியொற்றி, கோதை

''கன்று குணிலா எறிந்தாய் கழல் போற்றி!
குன்று குடையா வெடுத்தாய் குணம் போற்றி!''

என்று பாடிப் பரவுகின்றார். இவ்வாறு எம்பெருமானின் ஏற்றத்தைப் போற்றுகின்றார்.

''பேராண்மை என்ப தறுகண் ஒன்றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு''

என்ற குறளுக்கு, பகைவர்கள் மேல் தாட்சண்ணியம் காட்டுகின்ற போர்மறவருக்கு நூல்வல்லோர் பெருமையாகப் போற்றிக்கூறுவர். அவரை ஆண் தகமை யுடையவர் என்று சிறப்பிப்பர். பகைவர்க்குத் தாழ்வு அப்போது நிகழின் தாட்சண்ணியம் காட்டி உதவ வேண்டும். இவ்வாறு உதவி செய்வதைக் கூர்மை'' என்பர்.

ஊராண்மை என்றது உபகாரம் செய்யும் தன்மை. இலங்கை வேந்தன் போரிட்டபோது தன்பரிவாரங்களை, படைக்கலங்களை இழந்து நின்றான்; தனியனாகி நின்றவனைத் தாக்காமல் 'இன்று போய் நாளை வா' வெனக் கூறிய இராமபிரானை, ஊராண்மை உடையவனாய் அதாவது உபகாரியாய் இருந்தான் என்று பரிமேலழகர் உரைகூறிச் சிறப்பிக்கின்றார் திருவள்ளுவர் பகைவர்கட்கு விட்டுக்கொடுக்கும் தன்மையை ஊராண்மை என்றார்.

''விழித்தகண் வேல்கொண்டெறிய அழித்திமைப்பின்
ஓட்டன்றோ வன்கண் ணவர்க்கு''

என்று கூறும் வள்ளுவம் 'பகைவரைச் சினந்து நோக்கிய கண் அவர் மீது வேலை எறியும் போது மூடி இமைக்கு மானால், அது வீரமுடையவர்க்குத் தோல்வி' என்று கூறு

கின்றது. பகைவர் தன்மீது வேல் எறியும்போது கண் மூடாமல் எதிர் நிற்பவரே வீரர்' என்கின்றது. இத்தகைய வீரனே கண்ணபெருமான் ஆதலால் அவனைச் சிறப்பிக்கவே

''வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி'' என்று புகழ்கின்றார். திருவள்ளுவர் கருத்துக்கு உரிய வீரனாகக் கண்ணபிரானைப் பண்ணிசைத்துக் காட்டினார் கோதை. அடிபோற்றி, திறல்போற்றி, புகழ்போற்றி, கழல்போற்றி குணம்போற்றி என்றவர், பகைகெடுக்கும் வேல் என்று அடைமொழி கொடுத்து வேலைப்போற்றி னார் என்பதற்கு அவன் கைத்திறத்தின் வன்மையைக் காட்டவே இவ்வாறு உரைத்தார் எனக்கொள்ளுதலே சிறப்பு.

இந்தப் போற்றிப் பாசுரத்தின் மூலம் பிறரும் உணர்ந்து போற்றவேண்டும், போற்றிப் பயன் எய்த வேண்டும் என்ற தம் அவாவினைத் தெரிவிக்கின்றார். கோதை. இவர்தம் பெருநோக்கை அறிகின்ற நாம் அவர் பாசுரத்தைப் பாடினால் அருளாளனே தன் திருவருளைத் தேடிவந்து வழங்குவான் என்பது தேற்றம்.

### இன்னமுதனைப் போற்றுவோம்

அன்பர்க் கன்பனாய் அருள்புரிவான் என்றும்
துன்பஞ் செய்யும் தீயரை வீழ்த்துவான்
நன்மை செய்குவான் தன்னடி யாருக்கே
இன்பம் பெருக்கும் இன்னமுதனைப் போற்றுவாம்

# வருத்தத்தைப் போக்கிடுவான்
# வாழ்த்து!

*நெருப்பென்ன நின்ற நெடுமாலைப் போற்றி*
*அருமைத் திருப்பாவை ஆக்கிப்—பெருமையுறச்*
*சங்கத் தமிழ்மாலை சாற்றியவர் நம் கோதைத்*
*தங்கத் தமிழ்காப்போம் சார்ந்து!*

*—கவியமுதனார்.*

*கண்ணபிரான் நெருப்பாகப் பகைவர்கட்குக் காட்சி யளித்தான். தன் சுடரில் தோன்றும் ஒளியால் அடியாரைக் காத்தான். இவனைத் திருப்பாவை என்னும் சங்கத் தமிழ் மாலையைப் பாடிப் போற்றினார் கோதை. அவர் மொழி தங்கத்தமிழ்மொழி. அம்மொழியைக் காத்து, சேர்ந்து போற்றி வாழக் கவியமுதனார் இவ்வெண்பாவில் இசைத்தார்.*

கோதைமொழி, வேதனையைப் போக்கும் இனிய மொழி. அந்தச் செந்தமிழ் மொழியைப் பாடினால் நந்தகோபன் குமரன் வந்தருள்வான் என்று இதில் கூறினார்.

ஒருத்தி மகனாய்ப் பிறந்த கண்ணன், பிறந்த அதே இரவில் மற்றொருத்திக்கு மகனாய்த் தகுதியுடன் சிறப் பாக வளர்ந்தான்; தேவகிக்கு மகனாகப் பிறந்தவன் யசோதையிடம் மகனாக வளர்ந்து பெருமையுற்றான்.

இந்தச் சிந்தைக்கினியவனைப் பொறாமை எண்ணமுடைய கம்சன் கொல்ல எத்தனித்தான். இவன் எண்ணத்தில் மண்வீழச் செய்தான் மாயன்.

கொடிய கம்சனின் நெஞ்சில் சஞ்சலத்தை உண்டாக்கிய கண்ணன் நெருப்பாக நின்றான். விருப்புடையவர்களிடம் கருணை வள்ளலாகத் திகழ்ந்தான். இவனை ஆய்ச்சியர்கள் அகமகிழ்ந்து வேண்டிப் போற்றினார்கள். குறையை யகற்றும் பறையைக் கோரினார்கள். கோரி வந்த பொருளை விரும்பி யருள வேண்டுகின்றோம் என்றார்கள். நீ இப்பறையைத் தந்தால் நாங்கள் விரும்பிய நலனைப் பெறுவோம். உன்னைப் பிரிந்து வாடும் துயரம் நீங்க வருகைதந்து அருள வேண்டும் என்றார்கள். இக்கருத்தை,

''ஒருத்தி மகனாய்ப் பிறந்து, ஓரிரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளரத்
தரிக்கிலான் ஆகித்தான் தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே! உன்னை
அருத்தித்து வந்தோம் : பறைதருதி யாகில்,
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோர் எம்பாவாய்!''

என்று பாடுகின்றார். எம்பெருமான் தனக்குப் பல்லாண்டு பாடும் ஆய்ச்சியர்களை நோக்கி இந்தக் குளிர் காலத்திலேயே உங்கள் உடலை வருத்திக் கொண்டு ஏன் வந்தீர்கள்? என்றான். உன்னிடம் நாங்கள் வந்தது பறையைப் பெறவே என்றாலும் அப்பறையைக் கொடுக்கும் போது உன் அழகையும் கண்டு அனுபவிக்கவே வந்தோம் என்றார்கள்.

இப்பறையைக் கோரியவர்கள் ஒப்பற்ற மாயனின் வரலாற்றை இப்பாசுரத்தில் புகன்றார்கள்.

''ஒருத்தி மகனாய்ப் பிறந்து' என்னும் அடி தொடங்கி நெருப்பென்ன நின்ற நெடுமாலே'' என்னும் அடிவரையில் அவனின் வரலாற்றைக் கூறுகின்றார்கள், கம்சனின் தங்கை தேவகி; வசுதேவருக்குத் தேவகியை மணமுடித்து வைத்தான் கம்சன். தங்கையை அவள் கணவனோடு, ஊருக்குத் தன் தேரில் அழைத்துச் செல்கின்றான் கம்சன்; கணவன் வீட்டிற்குத் தங்கையை அழைத்துச் செல்லும் போது 'அசரீரி' கம்சனைப் பார்த்து, 'உன் தங்கைக்குப் பிறக்கப் போகும் எட்டாவது குழந்தை உன்னைக் கொல்வான்' என்றது.

உடனே தன் உடைவாளைத் தங்கையின் மீது வீசத் திட்டமிட்டான் கம்சன். உடனிருந்த வசுதேவர் கம்சனைத் தடுத்து, தேவகியின் குழந்தைதான் உன்னைக் கொல்லப் போவது; தேவகியல்லள் என்று கூறித் தடுத்தார். தேவகிக்குப் பிறக்கும் குழந்தைகளை உடனே உன்னிடத்தில் ஒப்படைப்பேன் என்றதால், கம்சன் சினம் தணிந்து, தேவகியையும் வசுதேவரையும் விலங்கிட்டுச் சிறையிலடைத்தான்.

இவ்வாறு சிறையிலிருந்த தேவகி பெற்ற ஆறு குழந்தைகளைக் கல்லில் மோதிச் சாகடித்தான் கம்சன். ஏழாவது குழந்தை பலராமன். இக்குழந்தை தேவகி வயிற்றில் முதல் ஆறு மாதம் இருந்து, பின்னர் ஆறு மாதம் வசுதேவரின் இரண்டாம் மனைவி ரோகிணி என்பவளின் வயிற்றிலிருந்து பிறந்ததால், 'ரோகிணி மகன்' எனப் பலராமன் கொல்லாமல் விடப்பட்டான். தேவகி பெற்ற எட்டாவது குழந்தை கண்ணன். இவன் பிறந்ததும் இவர்களுக்கு இடப் பெற்றிருந்த விலங்கு உடைந்தது. கண்ணனின் கைகளில் சங்கு சக்கரம் மிளிர்ந்தன. இக்குழந்தையைக் காப்பாற்ற இவர்கள் நினைத்தார்கள். சிறைக்கதவு திறந்தது. குழந்தையை ஆயர்பாடிக்கு எடுத்துச் சென்றார் வசுதேவர். பெருக்கெடுத்து ஓடிய யமுனை நதியோ முழங்கால் அளவாகி வழிவிட்டது.

எடுத்துச் சென்றவர் ஆயர்பாடியில், யசோதையின் பக்கத்தில் வைத்து விட்டு, யசோதை பெற்ற பெண் குழந்தையைத் தூக்கிக் கொண்டு சிறைக்கு வந்து விடு கின்றார், வந்ததும் சிறைக்கதவு முன் போல் மூடிக் கொள் கிறது. இவர்களின் கை விலங்கு மறுபடியும் வந்து பூட்டிக் கொள்கிறது. குழந்தை பிறந்த செய்தி கம்சனுக்கு எட்டி யதும் குழந்தையைக் கொல்ல எத்தனித்த போது அக்குழந்தை கம்சன் கையில் இருந்து மேலே சென்று. என் அண்ணன் ஆயர்பாடியில் வளர்கின்றான். அவனே உன்னைக் கொல்லும் கூற்றுவன் என்றது.

இவ்வரலாற்றைத்தான்,

''ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளர,
தரிக்கிலான் ஆகித்தான் தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே!''

என்று கோதை பாடுவார். ஒரு பெரிய வரலாற்றுச் செய்தியை இவ்வடிகளில் படம் பிடித்துக் காட்டுகின்றார், இவற்றில் தேவகி மகனாய்ப் பிறந்த கண்ணன் யசோதை யின் மகனாய் ஆயர்பாடியில் ஒளித்து வளர்ந்தான் என்பதை விளக்குகின்றார்.

கண்ணனைப் பெற்றும் வளர்த்தும் வந்ததால் தேவகிப் பிராட்டியையும் யசோதைப் பிராட்டியையும் புகழ் கின்றார் கோதை. தேவகி கண்ணனைப் பெற்ற குணவதி. யசோதை எம்பெருமானை வளர்த்த புண்ணியவதி என்பதை ஒருத்தி என்னும் சொல் நயத்தால் விரித்துக் காட்டுகின்றார்.

'ஓரிரவில்' என்னும் சொல்லால் கண்ணபிரான் தோன்றிய அதே இரவில் மற்றோர் ஊரான ஆயர்பாடி யில் யசோதைக்கு மகனாய் இருந்த விவரத்தை இயம்பி

னார். வளர்ந்த நிலையைக் கொண்டு யசோதையின் மகனாகக் கூற இயலுமா? எனக் கேட்கலாம்.

யசோதையிடமே அமுது கண்ணன் முலைப்பால் குடித்ததால், அவனைத் தம் கண்போல் எண்ணி வளர்த்த தால், 'யசோதையின் மகன்' என்று கூறுதலே பொருந்தும்.

'ஒளித்து வளர' என்பதில், பிறந்த இடத்திலும். தொல்லையுடன் தோன்றியவன், வளர்ந்த இடத்திலும் பூதனை முதலானவர்களின் தொல்லைக்கும் ஆளாகி வளர்ந்தவன் கண்ணன். இத்தகையவனை ஆயர்கள் கொடியவர்களின் கண்களில் படாதவாறு வளர்த்தார்கள். எனவே, இந்நிலையில் வாழ்ந்த இவனை மேற்குறித்த தொடரால் இயம்பினார் கோதை.

''அசுரர்கள் தலைப்பெயல் யவங் கொலாங்
கென்றாழு
மென்னாகுயிர் ஆன்பின் போகேல்,'' ''கண்ணா நீ
நாளை தொட்டுக் கன்றின்பின் போகேல்
கோலஞ்செய் திங்கேயிரு''

என்று பாடியதைக் கொண்டு 'கண்ணனை ஆயர்கள் ஒளித்து வளர்த்தார்கள்' என்பதை யறியலாம்.

'தரிக்கிலா னாகி' என்று பாடியதில், உன்னுடைய பகைவன் ஆயர்பாடியில் வளர்கின்றான் என்று நாரதர் முதலானோர் சொல்லியதைக்கேட்ட கம்சன், பொறாமை யால் கண்ணபிரானை அழிக்கத் திட்டமிட்டான். பொறாமை கொண்ட இவனின் மனநிலையைக் காட்டவே இவ்வாறு ஆண்டார் கோதை.

'தீங்கு நினைந்த' என்பதால், சகடம், கொக்கு, கன்று, விளாமரம், கழுதை, குதிரை ஆகிய வடிவங் கொண்ட அசுரர்கள் கண்ணனை அழிக்கத் திட்டமிட்டார் கள். அவர்கள் திட்டத்தை அழித்து அக்கொடியவர்களை

யும் மாய்த்தான் என்பதைக் காட்டவே இவ்வாறு கூறி னார். கம்சனின் எண்ணத்திலும் மண்ணறைந்தான் கண்ணன் என்பதையும் இதில் குறித்தார் பெரியாழ்வார் திருமகள்.

கம்சனின் கெட்ட நினைப்பு அவனுடனே முடிந் தொழியக் கண்ணன் மடித்தான். அவன் எண்ணம் மண் மேடாகச் செய்து ஒழித்ததைத் தெரியப்படுத்த,

''கருத்தைப் பிழைப்பித்து' என்ற தொடரை எடுத் தாண்டார். கண்ணனின் பெற்ற தாயும் வளர்த்த தாயும் வயிறெரியச் செய்தவன் கம்சன் ஆதலால் அவன் வயிற்றில்

''நெருப்பென்ன நின்ற நெடுமால்''

தோன்றி எரித்தான் என்பதைக் காட்டினார் கோதை. ''நெடுமாலே'' என்ற விளியால் பரம் பொருளின் பேராற் றலைக் குறித்தார்; புகழ்ந்தார்.

'அருத்தித்து வந்தோம்.' என்றதில், ஆய்ச்சியர்கள் கண்ணனிடம் நீ பிறந்து காட்டவும், வளர்ந்து காட்டவும், கொன்று காட்டவும்வேண்டா என்றுகூறி உன் அழகினைக் காட்டினால் போதும் என்று விளம்பியவர்கள் உன் திருநாமத்தை ஒலிக்கின்ற பறையைக் கோருகின்றோம் என்ற விவரத்தைக் கூறினார்கள்.

'தருதியாகில்' என்று கூறியதால் உயிர்கள் தம் விருப் பத்தைப் பரம்பொருளிடம் முறையீடு செய்வதை விளம் பியது. சத்வகுண முடையவர்கள் எல்லாப் பயனும் எய்த வியலும் ஆதலால் அருளாளனை நோக்கி அவர்கள் கோரி யதை எடுத்துரைக்கப் பெற்றது.

''வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து''

என்றதில் அவனால் நம் வருத்தமும் தீரும் நமக்கு மகிழ்ச்சி யும் ஏற்படும்; எவற்றாலும் தீராத துன்பம் அவனால் போகும்; நம் பாவமாகிய நோயை எம்பெருமான் என்

கின்ற பெயரே களையும். இருளைநீக்கும் ஒளியைப்போல, நம் துயரைப் போக்கும் பேரொளி என்று அவனை அருள் ஒளி என்றே கூறுகிறார். அந்தப் பேரொளியான நெடுமால் என்ற பெயரே கொடுமையை ஒழிக்கும் மருந்து என்று போற்றியருளினார் கோதை. நள்ளிரவில் தேவகிக்குக் கண்ணன் பிறந்ததை யாரும் அறிய மாட்டார்கள். உலகம் அவனை யசோதையின் மகனாகவே கூறக் கேட்கிறோம். யாரும் அறியாதபடி தோன்றிய ஒருபொருள் ஆற்றலுடன் யாவரும் அறியும் படி ஒளியாகமிளிர்ந்தது. இப்பொருள் செம்பொருள்—எம்பெருமான் என்றார்,

தன்னைப் பெற்ற வயிற்றையும் வளர்த்த வயிற்றையும் எரியும்படி செய்த கஞ்சனின் வயிற்றில் நெருப்பாக நின்று கண்ணன் எரித்தான். 'வினை விதைத்தவன் வினை அறுப்பான்' என்றதைப்போல கஞ்சன் செய்த தவற்றாலே கவலை கொண்டு மாய்ந்தான்.

அருளாளனைப் பாராயணம் செய்தால், வினையறும். அவனை நினைக்கும் அடியார்கள் உயர்வைக் காண்பார்கள். அவனின் திருத்தக்க செல்வமும் சேவகமும் பாடுவோருக்கு நீடுபுகழ் கிட்டும் என்று இப்பாசுரத்தில் பெரியாழ்வார் பெண்பிள்ளை அருமையாக விவரித்தார்.

## பாவையில் இலக்கியச் செய்திகள்

திருப்பாவை பக்தியிலக்கியமாக மட்டும் அல்லாமல் வாழ்வியல் இலக்கியமாகவும் உள்ளது. உலகியல் பண்புகளைக் கூறும் அறஇலக்கியமாவும் நின்று இறைவனின் வரலாற்றை வழங்கும் இனிய சிறந்த நன்மைபயக்கின்ற இலக்கியமாகவும் உள்ளது.

சங்க இலக்கியமாக இலங்கும் இரண்டாம் பரிபாடலில் கீரந்தையார் என்னும் நல்லிசைப் புலவர்,

''நீயே வளையொடு புரையும் வாலியேற்கு அவன்
இளையன் என்போர்க்கு இளையை யாதலும்!''

என்று பாடுவார். வசுதேவருக்கும் தேவகிக்கும் கண்ணன் என்னும் பெயரோடு, பலராமனுக்கு இளையவனாய்ப் பிறந்தான். தேவகி மைந்தனான இவனே யசோதையின் மகனாக விளங்கினான். என்று இதில் கூறுவார்.

கண்ணபெருமான் நெருப்பினுள் சூடாக, மலரினுள் மணமாக, கற்களுள் மணியாக, சொல்லினுள் உண்மை யாக, அறத்தினுள் அன்பாக இருப்பான்; எல்லாப்பொருள் களினுள் இருக்கும் அவனோ ஓரிடத்திலும் உறைவதில்லை. எல்லா இடங்களிலும் நிற்பவன் என்று மூன்றாம் பரி பாடலைப்பாடிய ஆசிரியர் கடுவன் இளவெயினனார் விளம்புவார். இச்செய்தியை,

''தீயினுள் தேறல்நீ! பூவினுள் நாற்றம் நீ!
கல்லினுள் மணியும் நீ! சொல்லினுள் வாய்மை நீ!
அறத்தினுள் அன்புநீ! மறத்தினுள் மைந்துநீ!
வேதத்துள் மறைநீ! பூதத்து முதலும் நீ!
வெஞ்சுடர் ஒளியும் நீ! திங்களுள் அளியும் நீ!
அனைத்தும் நீ! அனைத்தின் உட்பொருளும் நீ!
ஆதலின்
உறைவும் உறைவதும் இலையே! உண்மையும்
மறவியில் சிறப்பின் மாயமார் அனையை!

என்று பாடினார். இவன் தீயோரை வீழ்த்த நெருப்பாக நின்றான். அடியாருக்கு மலர்தரும் மணமானான். உலகத் தில் கொடுமை நீங்க! உண்மை விளங்க,—அறம் அன்பு மிளிர, அவன் பல்வேறான நிலையில் நின்று, எல்லாப் பொருள்களிலும் தானிருந்து நடத்துகின்றான். இவன் தான் கஞ்சன் வயிற்றில் நெருப்பாக நின்றவன். ஒருத்திக்கு

மகனாய்ப் பிறந்து மற்றொருத்திக்கு மகனாய் வளர்ந்தான். இக்கருத்தைத்

'தீயினுள் தேறல்' என்பதாலும். 'உறைவும்

உறைவதும் இலையே' என இயம்பியதாலும் அறியலாம். அறியாமையுடைய நெஞ்சத்தைப் பெற்ற கஞ்சனின் வஞ்சகச் செயலினையெல்லாம் கண்ணன் பஞ்சாய் எரித்தழித்தான். கொடிய நூற்றுவரை அடியோடு அழித்தான். நாற்றிசையும் போற்றுமாறு வேதங்கள் அவன் பின் சென்றன.

இத்தகைய சத்தியசீலன் பாண்டவர்களுக்குத் தூது சென்று நன்மையைச் சாதித்தவன். இவனை இளங்கோவடிகள்.

''மடந்தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும்போற்ற
படர்ந்து ஆரண முழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே!
நாராயணா என்னா நாவென்ன நாவே!''

எனப்பாடுவார். வஞ்சித்த கஞ்சனை மாய்த்த செய்தியையும், கரவுடைய நெஞ்சத்தார் நூற்றுவரை நொடித்து மடித்த செய்தியையும், அடியாராக வாழ்ந்த பாண்டவருக்காகத் தூது சென்ற செய்தியையும் கூறி மாயப்பிரானைப் புகழ்கின்றார் இளங்கோவடிகள். இவர்தம் செய்தியை உளங்கொண்ட கோதை,

''ஒருத்தி மகனாய்ப் பிறந்து'' என்னும் பாசுரத்தில் ஐந்து அடிகள் வரை அவனைப் பாடியுள்ளார். 'நெடுமாலே!' என்று கூறி, அவன் செய்த திருவிளையாடல்களை அழகுறப் படம் பிடித்தார்.

இதில் கொடிய புலியை மறைந்திருந்து வீழ்த்தும் மறவன் போல, எம்பெருமான் ஒளிந்து கஞ்சனை ஒழித்தான். இக்கருத்தை,

''ஒளித்து வளர''

என்னும் தொடர்மொழியால் சுட்டினார். கஞ்சனின் சதிச் செயலை-வஞ்சத்தினை வீழ்த்தியவனை இளங்கோவடிகள் ''வஞ்சம் கடந்தானை'' எனப் பாடியதைக் கோதைப் பிராட்டியார்,

''தருக்கிலான் ஆகித்தான் தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமால்''

என்றார். கஞ்சனை வீழ்த்திய கண்ணனின் ஆற்றலைப் போற்றாத நாவென்ன நாவே! என்று இளங்கோவடிகள் இயம்பினார். கோதை கஞ்சனை வீழ்த்தியவனை,

''அருத்தித்து வந்தோம்'' எனப் பாடினார்.

''தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது.''

என்றார் திருவள்ளுவர். எம்பெருமானுக்கு உவமை காட்டவியலாது. அவனின் திருவடியைத் தொழாமல் மறந்தால் மனக்கவலையை மாற்றுதல் அரிதாகும். வணங்கினால் துன்பம் நீங்கி இன்பம் ஏற்படும், என்றார் அவர்,

இங்கே கோதை அவனை வழிபடுவதாலே வருத்தம் விலகும்; மகிழ்ச்சி தோன்றுமென்பதைத்

''திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து''

என்று பாடினார். பிறவிக் கடலைக் கடக்க இறைவனை வழிபடுதலே சால்பு என்று மேற்குறித்த அடிகளால் அறியலாம். அறிகின்றவர்களாகிய நாம் மகிழ, விளக்கமுற நாராயணனைப் பற்ற, கோதை பாடியருளிய சங்கத்தமிழ் மாலையைப் பாடி, கோடி நன்மை பெற்றுய்வோமாக!

# மாலவனைப் பாடி வணங்கு!

ஞாலத்தை யெல்லாம் நடுங்க ஒலிக்கின்ற
பாலன்ன சங்குடையான் பண்ணவனே—கோலமுடன்
இன்பம் தருவானை ஏத்தியே கோதைத்தாய்
நன்மை பெற் றாரே நயந்து.

—கவியமுதனார்.

ஞாலத்திலே உள்ள தீயவர்கள் நடுங்கிடப் பேரொலியை யெழுப்புகின்ற பால் நிறச் சங்கையெடுத்து ஊதினான் மாமாயன். பாரதப் போரில் அர்ச்சுனனுக்குத் தேர் செலுத்தியவன், பகைவர்கள் நடுக்கம் கொள்ள ஊதினான் சங்கை.

அப்படி ஊதிய பண்ணவமூர்த்தி எழிற்கோலம் கொண்டு மிளிர்ந்தான். ஒளிகொண்டு விளங்கிய அவனைக் கோதை திருப்பாவையில் பெருமையாகப் பாடினார். பாடியவர் அவனைத் தம் நாயகனாகக் கொள்ள வேண்டினார். பக்தியால் அவனைப் பெற்ற கோதை தாம் அருளிய திருப்பாவையைப் பாடியே பிறரும் பயன் எய்தத் தூண்டு கின்றார் என்று கவியமுதனார் பாடுகின்றார். இந்த வெண்பாவில் 'பண்ணவன் இன்பம் தருவான்' என்றியம் பியவர்; ஏத்திப் பக்தி செய்தால் தான் அவன் இன்பம் தருவான் எனப் புகன்று, எண்ணியவர்க்கே இரங்கி அருளும் அரங்க நாயகனின் கருணை உணர்வைக்

கவினுறப் படம் பிடித்துக் காட்டுகின்றார் கவியமுதனார். இந்த அரங்க நாயகனை,

''மாலே! மணிவண்ணா! மார்கழி நீராடுவான்,
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்?
ஞாலத்தை யெல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே,
போல்வன சங்கங்கள், போய்ப்பா டுடையனவே,
சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே,
கோல விளக்கே, கொடியே, விதானமே;
ஆலின் இலையாய்! அருளேலோர் எம்பாவாய்!

என்று பாடிப் பரவுகின்றார். இப்பாசுரத்தில் பாவை நோன்புக்குத் தேவையான பொருள்களை அருளாளனிடம் ஆயச்சிறுமியர்கள் கோருகின்றார்கள். அடியார் நலத்தில் அக்கறை கொண்ட அவன் எக்காலத்தும் பக்கத்தில் வந்து உதவி செய்வான்.

அவனை நோக்கி, 'ஆசைப் பெருக்கில் எம்மைத் திளைக்கச் செய்பவனே! நீலமணி போன்ற நிறத்தை உடையவனே! பிரளயகாலம் என்று கூறப் பெறுகின்ற மாற்றம் ஏற்படும் காலத்தில், ஆலிலை மேல் கண் வளர் பவனே!' என்று ஆய்ச்சியர்கள் விளித்தார்கள். முன்பு பெரியோர்கள் காட்டிய நெறியில் மார்கழி மாதத்தில் நீராடிய பின்பு நோற்கும் நோன்புக்கு வேண்டியவற்றை யெல்லாம் தருமாறு கோரினார்கள். நோன்புக்குச் செல்லும் போது, தடுக்கும் பகைவர்கள் நடுங்க மார்கழி யில் நீராடி நோன்பு நோற்பதற்குரிய பொருள்களைக் கார்வண்ணனிடம் கோரி நின்றார்கள். நீராடச் செல்லும் போது, நோன்புக்குப் பகையானவர்கள் நடுங்கி விலகி யோட, உன் பாஞ்ச சன்னியமும், கொட்டி முழங்கிடப் பெரிய பறையும்; செல்லும் போது காப்பிடுவதற்குப் பல்லாண்டு பாடுபவர்களையும் நீ அருளுதல் வேண்டும்.

மேலும், ஒருவர் முகத்தை ஒருவர் அறிந்து கொள்வதற்கு விளக்கும், தூரத்தில் வருபவர்கள் எம்மை அறிந்து கொள்ளுவதற்குக் கொடியும், எம் தலையில் பனி விழாமல் தடுப்பதற்கு மேற்கட்டியும் தருதல் வேண்டுமென்று ஆயர்சிறுமியர்கள் ஆவலுடன் தெரிவித்தார்கள்.

இதில், நோன்பு நோற்றல் என்பது உலகம் பயன் எய்த வேண்டும் என்பதற்காக மேற்கொள்ளப்பட்டது. இவ்வாறு அறம் விளங்க நோற்கத் தலைப்பட்ட இவர்கள் எளிவந்த பிரானாக உள்ள கண்ணபிரானை மற்றவர்கள் அறிந்து கொண்டு போற்ற

'மாலே! மணிவண்ணா!' என்று விளித்தார்கள். இத்தகைய உத்தமனுக்கு வேறொரு துணையும் உதவியும் இருத்தலை எடுத்துக் காட்டிச் சிறப்பிக்க,

''ஆலின் இலையாய்''

என்னும் விளியால் வெளிப்படுத்தினார். சங்கின் ஒலி ஓங்காரம் நாதம். இஃது அருளாளனின் ஞானத்தை எடுத்துக் கூறுவதாகும். ''பறையொலி''. அவனின் திருநாமத்தை ஒலித்து, பரத்துவ நிலையைத் தெரிவிப்பதாகும்.

''பல்லாண்டு'' என்பது சாத்வீகக் குணத்தை விளக்கிக் காட்டுவதாகும். ''விளக்கு''என்பது அவர்களின் பக்தி மேம்பாட்டைக் கூறுவதாகும். ''கொடி'' என்பது பக்தி யுடையாரின் தொண்டை விவரிப்பதாகும்.

'விதானம்' என்பது, தொண்டு செய்யும் பக்தர்களின் அறிவின் பெருக்கை உணர்த்துவதாகும். மேலும் இவர்கள் அடியார்கள் என்பதை இவை எடுத்துக் காட்டும். எம் பெருமானின் திருவருள் பேற்றினை அடைய நோன்பில் தலைப் படுவோர்க்கு இவை தேவை என்பதனால் கோதை மேற்குறித்த பொருளை விளக்கமாகத் தெளிவித்தார்.

இதில் பிரணவத்தின் சிறப்பையும், அதன் மேலான ஒலியையும், அதிலிருந்து உண்டான வேதங்களும், வேதங் களை ஓதுபவர்களின் உயர்நிலையையும், அவற்றால் வெளிப்படும் ஞானமும் பக்தர்களுக்குரியனவாய் ஆக்கம் தருவன என்று கூறுகின்றார். இராமபிரானைச் சரணா கதியை வழங்கும் அருளாளன் என்று, சீதாப் பிராட்டியார் கூறுவார். ஆனால் அடியார்களிடத்தில் ஆசைப் பெருக்கை உடையவன் கண்ணன். ஆதலால் அந்த விருப்பத்திற்குரிய வனை மாலே'' என்ற சொல்லால் கோதை சிறப்பிக் கின்றார்.

நாச்சியார் திருமொழியில் 'மாலாய்ப் பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை'' என்று குறித்திருத்தலைக் காணலாம். இவன் ஆய்ச்சியர்களுக்கு வெறுப்பை உண்டாக்கும் விளையாட்டை உடையவனாயிருந்தாலும், விடமுடியாத, விட்டுப் பிரிய இயலாத வகையில் மிக அன்புடையவன் ஆதலால், ''மணிவண்ணா'' என்று விளித்துக் கூறியதால் அறியலாம்.

இந்நோன்பு முன்னோர் காட்டிய வழியில் சென்று நோற்கும் நோன்பு, உலக நலங்கருதிச் செய்கின்ற நோன்பு. உன்னை நாங்கள் அடையச் செய்யும் நோன்பு ஆதலால், அதன் தேவைக்குரிய பொருளை அருள்வதற்கு, நீயே ''வேண்டுவன கேட்டியேல்''

என்று இயம்புகின்றார்கள். 'போய்ப் பாடுடையன'' என்பதைச் சங்குகளுக்கு அடைமொழியாக்கி இவை மிகவும் புகழுடையன'' என்று பொருள் உரைத்தலும் ஒக்கும்.

''சங்கரையா! உன்செல்வம் சாலவழகியதே''

''உண்பது சொல்லில் உலகளந்தான் வாயமுதம்

கண்படை கொள்ளில் கடல்வண்ணன் கைத்தலத்தே''

''மதுசூதன் வாயமுதம் பன்னாளும் உண்கின்றாய்''

என்னும் நாச்சியார் திருமொழியைக் காண்க!

திருப்பள்ளியெழுச்சிக்குச் சங்குகள் வேண்டும். புறப் படுவதற்குப் பறை வேண்டும். பறை கொட்டிக் கொண்டு போகும் போது பல்லாண்டிசைக்க அடியார்கள் வேண்டும். இவ்வாறு நோன்பின் தேவைக்குரிய பொருளை அருளாள னிடம் வேண்டுகின்றார்கள்.

அனைத்தும் தரவல்ல ஆற்றல் பெற்ற நீ. உன்னுடைய சிறிய வயற்றில் உலகங்களையெல்லாம் வைத்து ஓர் ஆலந் தளிரிலே கிடந்து அற்புதங்களைச் செய்தவன் நீ.

நாங்கள் கோருவதை மறுக்காமல் தரவேண்டுமென்று ஆய்ச்சியர்கள் அறிவித்தார்கள். இக்கருத்தை, ''ஆலின் இலையாய்'' என்னும் விளியால் கூறி, இன்னமுதன் பேராற்றலை விளக்கினார் கோதை.

இப்பாசுரத்தில் வரும் சங்கு ஓங்காரத்தையும், பறை அதன் நாதத்தையும், பல்லாண்டு வேதத்தையும், விளக்கு ஞானத்தையும், கொடி, விதானம் ஆகியவை கைங்கரியம் என்கின்ற தொண்டினையும் விண்டுரைக்கும். அருளா ளனை அடைய விழையும் அடியார்களுக்குத் தேவைப்படும் அங்கங்கள் என இவை கூறப்பெற்றன. பிரணவம் என்று கூறுகின்ற ஒலி உருவமும். அந்தப் பிரணவ ஒலி வடிவத்தி லிருந்து வேதங்களும், அவற்றை உவந்து பாடும் அறநெறி யாளர்களின் சேர்க்கையும், இச்சேர்க்கையால் உண்டாகும் ஞானமும், இந்த ஞானத்தை உடைய பக்தர்களும் வேண்டப்படுகின்ற நிலையை, இங்கே மிக அழகாக எடுத்து விளக்கி நமக்கு நல்வழி காட்டுகின்றார் கோதைப் பிராட்டியார்.

## பாவையில் இலக்கியச் செய்திகள்

கோதைப் பிராட்டியார் இந்த இருபத்தாறாம் பாசுரத்தில் ''மாலே'' என்று தொடங்குகின்றார். இச்சொல்லுக்கு விருப்பத்தைத் தன் மீது உடையவர்

களிடமே எம்பெருமான் விருப்பத்தைக் காட்டுபவன்' என்பது பொருள்.

கொழுந்து கொடியைத் தேடி ஓடிப் படர்வதைப் போலே நம் மனம் மாலவனைத் தேடி ஓடிப் பற்றுதல் வேண்டும்! கொடி கொம்பைப் பற்றுவதால், படர்ந்து சென்று பயனை நல்க இயலும். ஆதலால், நம் மனமும் மாலவனைத் தேடிப் பற்றிப் பேரின்பப் பயனைப் பெற வியலும் என்று இரண்டாம் திருவந்தாதியில் 27 ஆம் பாசுரத்தில் பூதத்தாழ்வார்,

''கோல்தேடி ஓடும் கொழுந்ததே போன்றதே
மால் தேடி ஓடும் மனம்''

என்றார். 'விருப்பத்தையருளும் மாலை நாடி மனம் ஓடும்' என்ற விவரத்தை ''மாலே'' என்ற சொல்லால் அல்லலைத் தீர்க்கும் அருளாளனை அழகுடன் காட்டுகின்ற கோதை, அடியார் பால் விருப்பத்தினையுடைய பரம்பொருள் இவனே என்று இச்சொல்லால் மெச்சிப் புகழ்ந்து கூறு கிறார்.

''மணிவண்ணன்'' நீல மணி நிறத்தவன்; குளிர்ந்த மேனியைக் காட்டி அடியாரின் மனத்தைக் குளிர்விப் பவன். இப்பெயரைப் பெற்றவனைச் சான்றோர்கள், மனம் உருகி இனிது புகழ்கின்றார்கள். இவனை அருமறை கள் யாவும் முதலும் முடிவாகத் துணிந்து பேசுகின்றன என்று வில்லிபுத்தூர் ஆழ்வார் தம் பாரதத்தில், காப்புச் செய்யுளாகப் பாடியதில்,

'ஆழ்மறை துணிந்தபொருள் ஆகும் அவன் என்னல்
ஊழ்உற உணர்ந்தமுதி யோர்கள் துணிபன்றோ?
கேழ்இல்பல அண்டமும்முன் நுகர்ந்து கிளர்செய்வாய்
ஆழிமணி வண்ணன் அடி அடைகுதும் விரைந்தே''

என்று இசைக்கின்றார். இதில் மணிவண்ணன் திருவடி யினை, ''அண்டமும் முன் நுகர்ந்து கிளர் செய்வாய்''

என்று கூறுகின்றார். 'இத்தகையவன் திருவடியை விரைந்து அடைவோமாக' என்று, நமக்கு உணர்த்தி அவன் திருவடியைச் பற்றியுய்ய உரைக்கின்றார். 'மணிவண்ணன் திருவடி, நவையறுக்கும் நல்ல திருவடி, செம்மையை நல்கும் திருவடி' என்பதைப் பரதன் கூறுவ தாகக் கம்ப நாட்டாழ்வார்,

''செம்மைநின் திருவடித் தலம் தந்துஈ''

என்று ஆராவமுதனின் திருவடியை இனிது பாடு கின்றார்.

இத்தகைய செம்மை சான்றவனைக் கோதை ''மணிவண்ணா'' என்று பாடி அழைக்கின்றார். குளிர் அமுதம் நல்கும் எளி வந்த பிரானாக ஒளி காட்டும் கண்ணனை இவ்வாறு விளிக்கின்றார்.

இந்த மணிவண்ணனின் பெற்றியினைக்

''குலம் தாங்கு சாதிகள் நாலிலும்
கீழிழிந்து எத்தனை
நலம்தான் இலாத சண்டாள
சண்டாளர்கள் ஆகிலும்
வலம்தாங்கு சக்கரத்து அண்ணல்
மணிவண்ணற்கு ஆள் என்றுஉள்
கலந்தார் அடியார்தம்
அடியார் எம் அடிகளே!''

என்று நம்மாழ்வார் தெரிவிக்கின்றார். 'இத்தரையில் எத்துணையும் நலத்தினையும் எய்த இயலாது சண்டாளர் களாக இருந்தாலும் அவர்கள் வலக்கையில் சக்கரத்தை உடைய அண்ணலான 'மணிவண்ணனைப் போற்றி அவனுக்கு அடியார்களானால், அவன் உள்ளத்தில் நிற்கும் நல்லோர்களானால். அவர்களே அடியாருக்கு அடியார் களாய் நான் போற்றும் அடியார்களாவார்கள்' என்று

கூறியவர் மணிவண்ணனை அணுகுமாறு உணர்த்து கின்றார். இந்த இனிய மணிவண்ணனை முன்னோர்கள் போற்றிய நெறியில் ''மாலே! மணிவண்ணா'' என்றார் கோதை'

சங்க இலக்கியத்தில் தைந் நீராடல் குறிக்கப் பெற் றுள்ளது. இது முற்காலத்தில் முழுநிலவு தோன்றும் நாளில் தொடங்கி முப்பது நாள்கள் நிகழ்ந்திருக்க வேண்டும். பின்னர் மார்கழித் திங்களில் மேற் கொள்ளப் பட்டதாகும். ஆம் சங்க காலத்திற்கு முன்பே வட புலத் தில் திரு வாய்ப் பாடியில் மார்கழியில் தான் ஆயர் குலப் பெண்டிர் நோன்பு நோற்றதால், கோதை அந்நெறியை மேற் கொண்டு, மாதங்களில் நான் மார்கழியை விரும்பு பவன் என்று கண்ணபெருமான் பேசியதால், அவன் உகந்த திங்களிலே நோன்பில் தலைப்பட்டார் கோதை.

தவத்தை மேற் கொள்ளும் பெண்கள் அதாவது நோன்பை மேற்கொண்ட பெண்கள் அன்று தைந் நீராடி னார்கள் என்பதை,

''தாய ருகா நின்று தவத்தைந் நீராடுதல்''

என்று பதினோராம் பரிபாடல் பகர்கின்றது. மேலும் அது நல்ல பண்புகளுடன் குறிக்கோளுடன் தைந் நீராடல் செய்ய வேண்டும் என்று விளக்குகின்றது.

இவ்வாறு தவத்தில் நின்ற பெண்கள் விழைந்து
''வையெயிற்றவர் நாப்பண் வகை யணிப் பொலிந்து நீ
தையி னீராடிய தவந்தலைப் படுவாயோ''

என்று ஒருத்தியைப் பார்த்து மற்றொருத்தி இத்தைந் நீராடும் நீ மாறாமல் தவத்தில் தலைப்படுவாயோ? என்று வினவுவதாக 59ஆம் கலித் தொகை பேசுகிறது. ஐங்குறு நூறும்,

''நறுவீ யைம்பான் மகளிராடும்
தைஇத் தண்கயம் போலப் பலர்படிந்து''

என்று பாடுதல் காணலாம். மண்ணுலகில் பெண்ணுலகம் நலங்கருதிக் கொண்டாடும் இந்நோன்பைப் பற்றிச் சங்க இலக்கியங்கள் தைந் நீராட்டம் என்று சாற்றுக்கின்றன. இந்நோன்பைக் கண்ணன் விரும்பும் மாதமான மார்கழி யில் கோதை மேற்கொண்டதால் இது மார்கழி நீராடலா யிற்று. அந்த வகையில் இந்த இருபத்தாறாம் பாசுரத்தில்

''மாலே! மணிவண்ணா! மார்கழி நீராடுவான்''

என்று பாடுகின்றார்.

இலக்கியத்தில் ஈடுபாடுடைய கோதை நீராட்டத்தைக் கண்ணன் விரும்பிய மார்கழியில் மேற்கொண்டார். என்பதை நாம் அறிகின்றோம். அருளாளனைப் பற்ற அவன் விரும்பும் மாதத்தில் நோன்பு நோற்பதே சால்பு என மேற் கொண்டார். மணிவாசகப் பெருமான்.

''பொங்கு மடுவிற் புகப்பாயந்து பாய்ந்துநம்
சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்ப
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல் பொங்கப்
பங்கயப் பூம்புனல் ஆடே லோர் எம்பாவாய்''

என்றும் இறுதித் திருவெம்பாவையில் மார்கழியில் நீராடிய செய்தியினைப்

''போற்றியாம் மார்கழிநீர் ஆடேலோர்
எம்பாவாய்''

என்றும் பாடுவதைக் கொண்டு அறியலாம். மார்கழி நீராட்டத்தை முடித்துவிட்டு, கண்ணனிடம், ஆய்ச்சியர் கள், முன்னோர்கள் நெறியைப் பொன்னே போல் போற்றி, எடுத்துக் கொண்ட பணி இனிது முடிக்க பாவைக்குரிய பொருளை அருளுமாறு வேண்டுகின்றார் கள். இவ்வாறு வேண்டுவோர் கருத்தை மாண்புடன் கோதை,

''ஆலின் இலையாய் அருள்''

என்று பாடி, கோடியின்பம் தருவோனை வேண்டுகின்றார். இதில் ஒரு வரலாற்றை எடுத்துக் காட்டுகின்றார்.

ஆம், பிரளய காலத்தில் உலகம் அழியாமல் காக்க அப்பிரளய வெள்ளத்தில், உலகத்தைத் தன் வயிற்றில் வைத்துச் சிறிய ஓர் ஆலிலையில் கிடந்தான் அவனை மாலே மணிவண்ணன் என்று தெரிவிக்கின்றார். இதை வில்லி புத்தூர் ஆழ்வார், மற்போர்ச் சருக்கத்தில் காப்புச் செய்யுளாகப், (கோமளபுரம் இராசகோபாலப் பிள்ளை—பதிப்பித்த வில்லிபுத்தூரார் பாரதம்)

''பங்கயனை உள்ளிட்ட பற்பல்உயிர்த்
தொகைபிறமுன் படைத்துக் காத்த
சங்கையற நீத்துவரு பெருநீத்தம்
தனில்ஆலின் தமாலம் மேவி
நங்கைசெழு மலர்மங்கை நனிமகிழ
மீட்டும்அவை நல்கும் அண்ணல்
கங்கையொடு பழமறையும் துணர்த்துளவும்
கமழ்கழற்கால் கருத்துள் வைப்பான்!''

என்று பாடுவார். இதில், 'நான்முகன் உள்ளிட உயிர்த் தொகை அனைத்தையும் படைத்துக் காத்துப் பிரளய வெள்ளத்தில் தனி ஆலின் இலையின் மேல் பொருந்தி யிருந்தவன். பெரிய பிராட்டியார் மகிழும் வண்ணம் மீண்டும் அவ்வுயிர்களையெல்லாம் தருகின்ற எம்பெருமானின் சிவந்த திருவடிகளைக் கருத்துள் இருத்துவாம்' என்று பாடுகின்றார்.

வில்லிபுத்தூர் பெற்றெடுத்த அற்புதச் செல்வி கோதையார் தந்த கருத்தை விளக்கும் இலக்கியமாக வில்லிபுத்தூர் ஆழ்வார் பாரதத்தில் சீரெழில் பிறங்கப் பாடினார். 'ஆலின் இலையில் கிடந்தவன் அருளும் பெரிய மனத்தையுடையவன்'. 'உலகம் யாவையும் தாம்

உளவாக்கும்' தகுதியில் சிறந்தவனாவான். இவனை ''வாலி அறிவுதந்து அருளினாய்'' என்று இயம்பிப் போற்றுகின்றான். இராமபிரான் விட்ட மிகக் கூர்மை உடைய அம்பினால் வீழ்ந்த வாலி, 'நாய்' என்று தாழ்த்திக் கொண்டவன், 'இந்த அடியேனை உயிர் போகும் வேளையில் அறிவுதந்து அருளினாய்' என்று இராமனை வாயரப் புகழ்கின்றான் இதைக் கம்ப நாட்டாழ்வார்,

''ஏவுகூர் வாளியால் எய்து நாய் அடியனேன்
ஆவி போம் வேளையில் அறிவு தந்து அருளினாய்,

என்று பாடுவார். இங்கே ஒன்றை நாம் அறிதல் வேண்டும் அறியாமல் அவனை நினையாமலிருப்பவர்களும் உயிர் போகும் நேரத்திலேனும் அவனை நினைத்தால் பேரின்பம் எய்த வியலும் என்பதை வாலி உரையால் கம்பர்பாடலால் அறியலாம்.

அருளும் தன்மையில் பேரருளின் சங்க நிதி பதும நிதியாக விளங்கும் அருளாளனை ஆய்ச்சியர்கள் வேண்டி நிற்றலை, கோதை தம் மன ஆதங்கத்தால் பாடுகின்றார். இப்படி அவனைப் பாடி, அவனையே அடைந்தவர் அருளிய திருப்பாவை சங்கத் தமிழ் மாலை; அச்சங்க தமிழ் மாலையான திருப்பாவையை உச்சி மேல் வைத்துப் போற்றிப்பாடிப் பச்சைமா மலை போல் மேனியனாய் இலங்கும் அவன் திருவடியை என்றும் ஏத்தி இனிது வாழ்வோமாக!

## பண்ணிசைப் போமாக!

அவனையே பாடி அவனையே பெற்ற
உவப்புடையார் கோதை உணர்த்தும்— சுவைமிகுந்த
தண்திருப் பாவையே சங்கத் தமிழ்மாலை
பண்ணிசைத் துய்வோம் பரிந்து!

எனப் பாடிப் போற்றுவோம்.

# கோவிந்தன் பேரருளைக் கூறு!

கூடாரை வென்றவனே! கோவிந்தன்; சால்பதனைப்
பாடித் திருப்பாவைப் பாட்டமுதை—நாடியே!
தந்தவனை நாயகனாய்த் தாமேற்ற கோதையார்
செந்தமிழை நாம் சுவைப்போம் சேர்ந்து!

—கவியமுதனார்

கூடாத கேடரை வென்றவன் கோவிந்தன்; அவன் பெற்ற சால்பினைப் பாடித் திருப்பாவையென்னும் அமுதப்பாட்டை இசைத்து நாயகனாக நயந்து ஏற்றார் கோதை. இவர்தம் செந்தமிழ்ப் பாசுரத்தை நாமெல்லாம் சுவைத்தனுபவித்து, சேர்ந்தின்புற்று, அவன் திருவடிப் பேற்றைப் பற்றுமாறு கூறுகின்றார், கோதை தம் திருப் பாவையைச் சங்கத்தமிழ்மாலை என்றார்; இதைக் கவியமுதனார் 'செந்தமிழ்' என்றார். இந்தச் செந்தமிழை நாம் பாடி நாடிக் கோவிந்தனைக் கூடி வாழ வேண்டும் என்கின்றார்.

நோன்பில் தலைப்பட்ட கோதை அந்நோன்பினை முடித்துக்கொண்டு அவனோடு சேர்ந்தின்புறும் காட்சியை இப்பாசுரத்தில் அழகாகக் கூறுகின்றார்.

பகைவரை, தன்அடியைப் பணியாதவர்களை வெல்லு கின்ற திறத்தினை உடைய கண்ணபிரானே! உன்னை வாயாரப்பாடி உன்னிடத்தில் யாம் வேண்டுகின்ற பறையைப் பெற்று, இன்னும் பெற வேண்டிய சன்மானமாவன:

நாட்டில் உள்ளவர்கள் புகழும்படி கையில் அணியும் ஆபரணமான சூடகங்களும், தோள்வளைகளும், காதுக்கிடும் ஆபரணமான தோடும், காதில்அணியும் இன்னொரு அணியான பூவும், பாத கடகமும், எனச் சொல்லப்படும் இவ்வாபரணங்கள் போன்ற மற்றும் பல ஆபரணங்களும் உன்னாலும் நப்பின்னைப் பிராட்டியாலும் பூட்டப்பட வேண்டும்; இப்படிப் பூட்டும் அணிகலன்களையே யாம் விரும்பி அணிவோம்! பின்னர் அழகுடைய சேலைகளை உடுத்திக் கொள்வோம்.

'அதற்குப் பின்பு (அக்காரக் கட்டியிட்டு ஆக்கிய) பால் சோறானது மறையும் படியாக நெய்யை ஊற்றி அந்த நெய்யானது முழங்கையில் வழியும் படியாக நீயும் நாங்களும் கூடியிருந்து உண்டு குளிர்ந்து மகிழ வேண்டும்' என்று ஆய்ச்சியர்கள் கண்ணபெருமானிடம் கூறுவதாகக் கோதை நயம் தோன்றப் பாடுகின்றார். இக் கருத்தினை.

''கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா! உன்தன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறும் சம்மானம்;
நாடு புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே என்றனைய பல்கலனும் யாம்அணிவோம்;
ஆடை யுடுப்போம்; அதன்பின்னே பாற்சோறு
மூட, நெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடி யிருந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய்!''

என்று பாடுகின்றார்.

இதில், கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா— என்ற விளியால், கூடுமவர்க்குத் தோற்று நிற்பவன் எம்பெருமான்; என்ற கருத்துப் புலப்படக் காண லாம். தன்னடியார்களுக்குஅன்புடையவனாகவும் தன்பால் கூடாதாரை வெற்றி கொள்ளும் வீரனாகவும் அவனிருந்

தான் என்கிற இரு கருத்துகள் தோன்ற கோவிந்தா என்னும் விளியால் கோதை பாடுவது ஏற்புடையதாகும்.

இராமவதாரத்தில் தன்னோடு கூடிய சுக்கிரீவன், வீடணன் ஆகியோருக்கு உகந்தவனாகவும், தன்னோடு கூடாமல் தருக்கி நின்ற வாலி, இராவணன் ஆகியோரை வென்றும், கண்ணனாக அவதாரம் எடுத்தபோது, பாண்டவர்களுக்கு வேண்டியவனாகவும் கூடாத நூற்று வர்க்குக் கூற்றுவனாகவும் வீழ்த்தியமையும் அறியத் தக்கது. இத்தகைய எம்பெருமானின் நிலையறிந்து இப் போது இவர்கள் இவ்வாறு விளித்துக் கண்ணா நீ எங்க ளுடைய மழலைச் சொல்லுக்குத் தோற்று, நாங்கள் விரும்பிய பறை முதலானவற்றைத் தந்தருளியவ னல்லையோ? என்ற செய்தியினை எடுத்துக் காட்டி னார்கள்.

வெல்லுஞ்சீர்—என்பது எல்லோரையும் தன் உயரிய குணத்தால் வசீகரிப்பவன் ஆவான். என்ற விவரத்தைக் குறிப்பது கூடுவாரைச் சீலத்தாலே வெல்பவன். கூடா தாரைத் தன் கூர்மையுடைய அம்பாலே வெல்பவன், அம்புக்கு இலக்கானோரை மருந்திட்டு ஆற்ற இயலும். அழகுக்கு இலக்கானோரை அதிலிருந்து விடுவித்தல் இயலாது. ஆனால் எம்பெருமானின் அம்புக்கு ஆட்பட்ட வர்கள் அழிந்தார்கள்; அவன் திருமேனி அழகில் ஈடுபட்ட வர்கள் அவனிலிருந்து பிரிக்க முடியாதவர்களாக ஒன்றிப் போனார்கள்.

அவன் அம்பு உடம்பில் பாய்ந்து அழித்துவிடுவது; அவன் அழகு நம்உ ள்ளத்தில் படிந்து கொள்ளையின்பம் அருள்வது. அழியும் உயிரைக் காத்து நலஞ் செய்யுமவன், ஏன் அழிக்கும் தொழிலில் ஈடுபட்டான்? அறநெறியில் ஒட்டி வாழாமல் கொடுமையான இழிந்த செயலில் இருப் பவர்கள் கயவர்கள். அவர்கள் உயிர்வாழ்தல் கூடாது என்பதால் அவர்களைக் 'களை எடுப்பது போல' அழித்து

ஒழித்தவன் ஆதலால் அவனைக் கோதைப் பிராட்டியார் 'கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா' என்று தம் பாவின் இன்னிசையால் பாடித் தெரிவிக்கின்றார்.

உன்தன்னை—என்றதால். நாங்கள் நீண்ட நாளாக அனுபவித்து வந்த துயரங்களையெல்லாம் நீங்கும்படி உன்னைப் பாடி நலம் பெற்றோம். அப்பாட்டினால் உன்னை எம்மிடம் மயங்குமாறு செய்தோம். இசைக்கு இசைந்தவன் நீ. எம்இசைச்கு வசப்பட்ட நீ, யாம் கோரிய பறையை அருளினாய்! மேலும் பலபரிசுகள் பெற வந் தோம் வந்த எங்களுக்கு மறுக்காமல் வழங்க வேண்டுகின் றோம். என்றார்கள். ஆம் நீ தரப் போகும் பரிசு, நாடு புகழும் பரிசு—' அதை நீ வழங்குதல் நல்லது. அதைக் கொடுத்து எம்மைச் சிறப்பிக்க வேண்டுமென்று ஆய்ச்சியர் கள் கோரி நின்றார்கள். அவர்கள் 'சூடகமே' என்று தொடங்கிப் 'பாடகம்' வரை அணிகின்ற அணிகலன்களை வேண்டினார்கள். வேண்டிய அந்த அணிகலன்களை அவனே வந்து அணிவிக்க வேண்டும் என்று அவனிடம் கேட்டார்கள். இஃதல்லாமல் எழிலுடைய கவர்ச்சியுடைய சேலைகளையும் கொண்டு எம்மை அணிசெய்ய வேண்டு மென்றார்கள்.

பாற்சோறு—இத்தொடர் மொழியால் 'வையத்து வாழ்வீர்காள்' என்னும் பாட்டில், 'நெய்யுண்ணோம் பாலுண்ணோம்' என்று உறுதியுடன் விரதமேற்கொண்ட இவர்கள், இன்று நோன்பு நோற்று முடித்ததாலே உணவை வேண்டுகின்றார்கள் என்று அறிதல் வேண்டும். இன்று வரை சுவையான உணவைத் தவிர்த்திருந் தார்கள் என்பதால் கண்ணபிரானும் உணவை உண்ணா திருந்தான் என்றதை அறிதல் இனிது. இவர்கள் உண்ணா மையால் ஆயர்பாடியில் நெய்,பால் அளவுக்குமேல் இருந்த தாலே, ''பாற்சோறு மூட, நெய்பெய்து முழங்கை வழி வார'' உண்ணுவோம் என்று கூறுகின்றார்கள். நோன்பு மேற்கொண்ட காலத்தில் ஆண்மீக நெறியாளர்

கள் உடம்பை வளர்க்கும் உணவைத் தவிர்த்து. உணர்வை வளர்க்கும் பண்பில் நிற்பார்கள். அந்த வகையில் இவர்கள் எம்பெருமானைப் பற்றும் நோன்பில் தலைப்பட்டதால் அப்போது உண்ணாமல், அவனைப் பற்றிய பின்னர், அவனுடன் உண்ண எண்ணுகின்றார்கள்.

அப்படி எண்ணுபவர்கள் மன மகிழ்ச்சி ஏற்பட ''கூடியிருந்து குளிர்ந்து'' உண்ணுகின்றார்கள். இந்தத் தொடர் மொழியால் பசி நீங்குவதற்காக உண்ணுகின்றார் களில்லை. கண்ணனை விட்டுப் பிரிந்திருந்த துயரம் தீருமாறு எல்லோருங் கூடிக் களித்து உண்ணுகின்றார்கள். என்ற கருத்துத் தோன்ற கோதைப் பிராட்டியார் பாடியிருக்கின்றார் என்று அறிதல் சிறப்பு. 'குளிர்ந்து' என்னும் வினையெச்சத்திற்குக் 'குளிர வேண்டும்' என்று பொருள் கூறுவது அருமையுடையதாதலால் கூடியிருந்து குளிர்ந்து,—பல்கலனும் யாமணிவோம், ஆடையுடுப்போம் என இயைத்து வினையெச்சப் பொருளாகக் கொள்வது நல்லது.

இப்பாசுரத்தில் அமைந்த உள்ளுறைப் பொருள் மிகச் சிறப்புடையதாகும். நோன்பால் அடையும் ஆன்ம நலத்தை இதில் கூறுகின்றார் கோதை. தன்னை விரும்பாமல் எதிர்க்கின்றவர்களைப் பலத்தாலும் அண்டிய அடியார்களை அழகாலும், குணத்தாலும் தன்வயப்படுத்தும் திறனுடையவன் மாமாயன்.

பசுக்களாகிற உயிர்களைக் காக்கும் கருணை வள்ளலே' உன்னை உபாயமாகக் கொண்டு உன் திரு நாமங்களைப் பாராயணம் செய்வதால் நாங்கள் அடைய விருக்கும் பயன்யாதெனில், கூறுகின்றோம்.

சூடகம் என்றது காப்பு, தோள்வளை என்றது சங்கு சங்கரம், தோடு என்றது எட்டெழுத்து மந்திரம், செவிப்பூ என்றது இரண்டு வாக்கியங்களால் அமைந்த மந்திரம்.

பாடகம் என்றது வைராக்கியம் என்னும் உறுதி. இவைகளே ஆச்சியர்களாகிய நாங்கள் கோரும் அணி கலன்கள். நோன்பு மேற்கொள்பவர்கள் அறிகுறியாகக் மஞ்சள் கயிற்றால் காப்புக் கட்டிக் கொள்வார்கள். அதை இவர்கள் 'சூடகம்' என்றார்கள். எம்பெருமான் நெறியில் நிற்பவர்கள் என்பதைக் காட்ட தோளில் சங்கு, சக்கரம் பொறித்துக் கொள்வார்கள். அவற்றைத் 'தோள்வளை' என்றார்கள்;

எட்டெழுத்து மந்திரத்தைச் சொல்லித் திட்பமுடன் நிற்பவர்கள் என்பதைக் காட்ட, காதில் அணிந்திருத்தலைத் 'தோடு' என்றார்கள். இரண்டு வாக்கியங்களால் அமைந்ததைக் (த்வைதத்தை) கேட்டவர்கள் என்பதைக் காட்ட 'செவிப்பூ' என்றார்கள்; இந்த நெறியில் வைராக்கியமாக உறுதியாக நிற்பவர்கள் என்பதைக் காட்ட காலில் அணிந்திருத்தலைப் 'பாடகம்' என்றார் கள். இவ்வாறு கண்ண பெருமானையே எண்ணிப் போற்றுபவர்களாக, பிறர் பாராட்டிக் கூறுபவர்களாக இருக்கவே, அவன் அடியார்களாக இலங்கவே இந்த அணி கலன்களை விரும்பினார்கள். எம்பெருமானிடம் கோரி நின்றார்கள்.

## பாவையில் இலக்கியச் செய்திகள்

கூடாரை வெல்லுகின்ற ஆற்றல் சான்ற எம்பெரு மானை மூன்றாம் பரிபாடலில் கடுவன் இளவெயினனார் என்ற புலவர்.

கோபிகைகளோடு குரவைக் கூத்து ஆடும்போது, அவர்களுக்கு வலமாகவும், இடமாகவும் சென்று ஆடுவோனே! குடக்கூத்து ஆடுவதில் ஈடும் எடுப்பும் இல்லாதவனே! பசு நிரைகளைக் காத்தலில் வல்லவனே! எல்லா உயிர்களையும் காப்பவனே! யாவராலும் எளிதில் காண முடியாத முறைமையினை உடையவனே! அன்பர்

களுடைய உள்ளத்தில் எப்போதும் நீங்காமல் நிற்பவனே! என்றும் அழிவில்லாத தலைவனே! இவ்வுலகை யாளும் அரசனே!

பழைமையான இலக்கணங்களையெல்லாம் கண்டவனே! இன்ப யாழிசையில் வல்லவனே! துளசி மாலையை அணிந்த செல்வனே! தோல்வியினை அறியாதவனே! பொன்னால் நெய்த ஆடையை அணிந்தவனே! வலம்புரிச் சங்கினை உடையவனே! சக்கரப் படையை வலப்பக்கத்தே தரித்தவனே! மற்போர் புரிவதில் வல்லவீரனே! திருமகளின் கேள்வனே! பெரிய வெற்றியினையுடைய வீரனே! என்ற கருத்தை,

இடவல! குடவல! கோவல! காவல!
காணா மரப! நீயா நினைவ!
மாய மன்ன! உலகாள் மன்னவ!
தொல்லியல் புலவ! நல்லியாழ்ப் பாண!
மாலைச் செல்வ! தோலாக் கோட்ட!
பொலம்புரி யாடை வலம்புரி வண்ண!
பருதி வலவ! பொருதிறல் மல்ல!
திருவின் கணவ! பெருவிறல் மள்ள!

என்று பாடித் தெரிவிக்கின்றார். கூடாரை வெல்லும் திறலுடைய கோவிந்தனை, ''பொருதிறல்மல்ல'' என்றும், ''பெருவிறல் மள்ள'' என்றும் கூறி, அவன் அருளுகின்ற வள்ளல் ஆதலால் உலகாள் மன்னவ! என்றும் அவன் அனைத்தையும் அறிந்தவன் என்பதைத் ''தொல்லியல் புலவ'' என்றும் கோபிகைகளோடு குரவைக் கூத்தாடியதைக் கோவல! காவல என்றும் சிறப்பிக்கின்றார். இவ்வாறு ஆற்றல் சான்ற இன்னமுதனைப் பெருமை செய்த இவர் நெறியில் நின்று கோதைப் பிராட்டியார் ''கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா'' என்று விளித்து அந்த உலகாளும் மன்னவனிடம் பொன்னால் செய்த

ஆடையை உடுத்திக் கொண்டு அருள்பவனிடம் நாடு புகழும் பரிசைக் கோருகின்றார்; அன்பர்களான அடியார் களிடத்தில் அணுக்கமாயிருந்தும், அவர்கள் உள்ளத்தில் உறைந்தும் நிற்பவன் அருளாளன். அவனிடம் உவந்து கோருகின்றார். அவனன்றி மற்றவர்கள் தருவதற்கு இயலாத அருளியல் பரிசை விழைந்து தருமாறு வேண்டு கின்றார்.

கோதை விழைந்த கோவிந்தனை, கோதையின் தந்தையார் விட்ணுசித்தர்,

''இடவ ணரைஇடத் தோளொடு சாய்த்து
இருகை கூடப் புருவம்நெரிந் தேறக்
குடவ யிறுபட வாய்கடை கூடக்
கோவிந்தன் குழல்கொ டூதின போது,
''சிறுவி ரல்கள் தடவிப் பரிமாறச்
செங்கண் கோடச் செய்யவாய் கொப்பளிப்பக்
குறுவெ யர்ப்புரு வம்கூட லிப்பக்
கோவிந்தன் குழல்கொ டூதின போது''

என்று பாடியருளினார். கோவிந்தன் தளர்நடைப் பருவத்தில் நடையிட்டபோது காற்சிலம்பு, கிண்கிணி இவைகளின் தெய்வீக ஓசை தம் செவியை ஈர்த்து இன்பம் பாய்ச்சியும், செங்கீரைப் பருவத்தின் தலையசைப்பும்' புன்சிரிப்பும் தம் மனத்தைக் கொள்ளை கொள்ளவும் செய்தன என்ற விவரத்தை மகிழ்வுடன் மேற்குறித்த வற்றில் இயம்புகின்றார்.

கோதை, கூடாரை வென்ற கோவிந்தனைப் பாடி அருள் வேண்டினார். விட்ணுசித்தர் குழல் ஊதித் தம்மைக் கவர்ந்த கோவிந்தனைப் பாடி அவன் அழகைக் கண்டு மகிழ்ந்தார். பாரதியாரும் கோவிந்தன் அருட் செயலால் கவரப் பெற்றவர். அவர் கூறுகின்றார்:

எளியவனாயிருக்கும் என்னிடத்தில்யான் எனது எனும் பற்றுள்ளது. அவற்றை எப்போது போக்கிடுவாய்? எம் பெருமானே காற்றிலேயும்,பறவையிலேயும்,மரத்திலேயும், முகிலிலேயும், வரம்பின்றியுள்ள வான வெளியிலேயும், கடலின் இடையிலேயும், மண்ணகத்திலேயும், வீட்டில் மிகக் களிப்பிலேயும் கோவிந்தா உன்னைக் கண்டு உன்னோடு நான் கலப்பது எப்போது என்று.

''எளியனேன் யான் எனலை எப்போது
போக்கிடுவாய் இறைவனே இவ்
வளியிலே பறவையிலே மரத்தினிலே
முகிலினிலே வரம்பில் வான
வெளியிலே கடலிடையே மண்ணகத்தே
வீதியிலே வீட்டி லெல்லாம்
களியிலே கோவிந்தா! நினைக்கண்டு
நின்னோடு கலப்ப தென்றோ?''

என்று பாடுகின்றார். கோதை, ''கோவிந்தா'' என விளிந்ததைப் போன்று, பாரதியாரும் 'கோவிந்தா!' என்றே விளித்தார். இருவருமே கோவிந்தனோடு கலக்கவே விழைந்தனர்.

கோதைப் பிராட்டியார் சூடிக் கொடுத்த பூமாலையையும், அவர் பாடிக் கொடுத்த தமிழ் மாலையையும் தரித்துக் கொண்டு மலை போன்ற தோள்களுடன் விளங்கும் கோவிந்தனின் திருவடித் தாமரையைக் கருத்தில் இருத்துவாம் என்று பாரதம் பாடிய வில்லிபுத்தூர் ஆழ்வார், கீசகன் வதைச் சருக்கத்தில்

''திருவளர் புதுவைக் கோதை
தேன்குழல் பூத்த மாலை
உருவளர் பவளம் பூத்த
தண்தமிழ் மாலை வேய்ந்த

பெருவளர் வரைத்தோள் மாலைப்
பேணிசெம் பதுமத் தாள்கள்
கருவளர் மாலை வீப்பான்
கருத்தினில் இருத்தல் செய்வாம்''

என்று பாடுகின்றார். [இப்பாடல் கோமளபுரம் இராச கோபாலப் பிள்ளை பதிப்பித்த வில்லிபுத்தூரார் பாரதம்-விராட பருவம் கீசகன் வதைச்சருக்கம் கடவுள் வாழ்த்துப் பாடலாகும்.] இதில் கோவிந்தன் விழைந்த கோதையைப் புகழ்ந்து, அவரை வரித்துக் கொண்ட பிரியன் கோவிந் தனைக் கருத்தில் நிறுத்திப் போற்றுகின்றார் வில்லிபுத்தூரார்.

இதுகாறும் கூறியவற்றால் திருப்பாவை சங்க இலக்கியத் தமிழ் மாலையாக, சமய இலக்கியத் தமிழ் மாலையாக மிளிரக் கோதை படைத்தருளினார். என்று அவரைப் போற்றி அவர் பாசுரத்தைப் பாடி கவலையை அறுக்கும் கோவிந்தனின் அடிபரவி அறத்துடன் உய்வோமாக!

**கோதை அன்னையைத் துதிப்போம்**

தீயரை வென்றும் நல்லோர்
சிறப்புற அருள்சு ரந்தும்
நேயமாய் எவரி டத்தும்
நின்றுமே உதவி நல்கும்
தூயனைப் பெற்றே ஒன்றிச்
சுடர்ந்திடும் கோதை அன்னை
வாய்மையாம் திருப்பா வையை
வழங்கினார் நெறியு ரைப்போம்!

# ஆய்க்குலத்து அண்ணலை ஏத்து!

கறவைகளை மேய்த்துக் களிப்புற்ற ஆயர்
இறைவனாம் கண்ணனையே ஏத்தி-நிறைவடைந்தார்
அத்தனையே கோதை அடைய திருப்பாவை
தித்திக்கத் தந்தவரைச் செப்பு!

—கவியமுதனார்.

அக்காலத்தில் வாழ்ந்த ஆயர்கள் கறவைகளான பசுக்களை மேய்த்து, அவை வழங்கும் பால் மடைகளைக் கொண்டு பண்பாக உயிர் வாழ்ந்தவர்கள். அவர்கள் குலத்தில் விரும்பித் தோன்றியவன் கண்ணன். அவனையே தெய்வமாக ஏத்தி உய்வடைந்தவர்கள் அவர்கள். அந்த இறைவனைத் திருப்பாவை பாடி அடைய முயன்றவர் கோதை. அதைத் தித்திக்கத் தந்த அவர், எம்பெருமானைப் பற்ற அதையே ஓர் உபாயமாகத் தந்தவராவார். அப்படித் தந்தவரைப் புகழ்ந்து போற்றுமாறு கூறுகின்றார் கவியமுதனார். கோதை, கோவிந்தனை அடைந்தவர். அவரைப் போல் அனைவரும் அவனைப் பற்றி உய்ய வழி காட்டினார்.

குறை ஒன்றும் இல்லாத கோவிந்தா! நாங்கள் பசுக்களின் பின்னே போய், காடு சேர்ந்து, உடம்பினை வளர்க்கும் ஆசையுடையவர்களாக மட்டும் இருக்கின்றோம்.

''சிறிதும் அறிவில்லாத ஆயர்குலத்தில் உன்னைச் சிறந்த புருடோத்தமனாகப் பெறுவதற்குத் தக்க புண்ணியம் உடையவர்களாக உள்ளோம். பரம் பொருளாயுள்ள கண்ணபெருமானே! உன்னுடன் எங்களுக்குண்டான உறவானது, என்றும் ஒழிக்க இயலாத ஒன்றாகும்.

உலக விவகாரம் அறியாத சிறிய பெண்களான நாங்கள், உன்னை மிகப் பிரியத்தாலே, சிறிய பெயராலே அழைத்ததைக் குறித்தும், அடியார்களிடம் அன்புடைய நீ! கோபித்துக் கொள்ளாமல் உள்ளம் விழைந்து நாங்கள் விழையும் பறையைத் தந்தருள வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கின்றோம்.'' என்று கூறும் ஆய்ச்சியர்களின் கருத்தினை,

''கறவைகள் பின் சென்று கானஞ்சேர்ந் துண்போம்!
அறிவொன்று மில்லாத ஆய்க்குலத்து உன்தன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்
குறைவொன்றும் இல்லாத கோவிந்தா! உன்தனோடு
உறவேல் நமக்கிங் கொழிக்க வொழியாது!
அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னைச்
சிறுபேர் அழைத்தனவும் சீறியரு ளாதே,
இறைவா! நீ தாராய் பறையேலோர் எம்பாவாய்!''

என்று கோதைப் பிராட்டியார் பாடுகின்றார்.

முன் பாட்டில் ''போற்றியாம் வந்தோம்'' செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ, ''உன்னை அருத்தித்து வந்தோம்,'' என்று ஆய்ச்சியர்கள் அவன் பால் கொண்ட விருப்பத்தை வெளியிட்டார்கள். அப்படி வெளியிட்டவர்கள், அவற்றைப் பெறுவதற்கான வழிமுறைகளை அவனிடமே கேட்டு, அவன் கூறும் நெறியில் நின்று கோரினார்கள்.

'ஆராய்ந்து அருள்' என்று இவர்கள் முன் பாட்டில் கூறியதற்குக் காரணம், இவர்கள், அவன் முன் வந்து எதையும் செய்யாமல் இருந்ததால் இவ்வாறு கூறினார்கள் என்றே கொள்ள வேண்டும்.

'இரங்கு' என்றும் ''அருள்'', என்றும் இவர்கள் கூறியதற்கு விரும்பி நீ அருள்வதற்குப் பாங்குடையவர்களாக நாங்கள் இருக்கின்றோம் என்பதை எம்பெருமான், தெரிந்து கொள்ளும் வகையில் கூறியதாகும்; சாத்வீக நிலையில் இல்லாமல், சித்தம் விரும்பும் ஆசையால் செயலில் ஈடுபடுபவர்களுக்கு, எத்தகைய பயனையும் பரம்பொருள் செய்வதில்லை.

ஆய்ச்சியர்கள் அருளாளன் கொண்டுள்ள மனநிலையை அறிந்தவர்கள் ஆதலால் அவனைச், சந்திக்கவும், அவனின் மேம்பாட்டை எடுத்துக் கூறவும், அருளைப் பெறவும், அவன் காட்டுகின்ற நெறியில் மாறாமலும் செயற்படுபவர்கள் ஆதலால், எம்பெருமான் இவர்களின் உவப்புக்குரியவனாகின்றான்; என்பதை இப்பாசுரத்தில் கோதை குறித்துக்காட்டினார்.

முதலடியில் பசுக்களின் பின்னே போய்த் திரிந்து வாழ்பவர்களாகையால் எங்களிடம் எந்த நற்செயலும் இல்லை என்றார்கள்.

இரண்டாம் அடியில், ''அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்து'' என்று கூறியதால், மேலும் எங்களிடம் தகுதியேதுமில்லை என்றார்கள்.

நான்காம் அடியில் ''குறையொன்றுமில்லாத கோவிந்தா!'' என்றதால், அனைத்தையும் நடத்தும் எம்பெருமானின் குணநலத்தை எடுத்துக் கூறிப் போற்றினார்கள்.

ஐந்தாம் அடியில், ''உறவேல் நமக்கிங்கு ஒழிக்க ஒழியாது'' என்றதால், அவனுடன் இவர்களுக்குண்டான அணுக்கத்தைக் கூறினார்கள்.

ஏழாம் அடியில், ''சீறியருளாதே'' என்றதால் அவனைத் தன்வயப்படுத்த நினைத்தார்கள்.

எட்டாம் அடியில், ''இறைவா நீ தாராய் பறை'' என்றதால், தம் கோரிக்கையை எடுத்துக் கூறி அருளாளனை வழங்கும்படி வேண்டினார்கள். ஒன்றுபட்டு மறைப்பொருளை ஓதி,செய்வதற்குரிய, அறங்களைஆற்றி, பாவங்களைப் பறக்கடிக்க, பறைகளைப் பெற்று உள்ளத் தூய்மையுடன் இருத்தல் பற்றி, இவைகூறியன வாகும். புலன்களைவென்று, வேண்டாத நிலை களிலிருந்து மீட்கப் பெற்ற மனத்தை, நல்வழியில் செலுத்தி இன்பம் அருளும் இன்னமுதனிடம் நிரந்தரமாக ஒன்றியிருத்தல் குறித்துக் கூறியதாகும்.

இதற்கு அப் பரம்பொருளை எண்ணிப் பக்தி செய்ய வேண்டும். இந்த நெறியைக் குருகுலவாசம் செய்து பெறுதல் வேண்டும். நற்புத்தியைப் பெற நாரணனைப் பற்றுதல் வேண்டும். இந்நெறியில் தலைப்படாத ஆய்ச்சியர்கள், அருளாளனை எண்ணுதற்கு வழியில்லாத வர்கள் என்பதைக் கறவைகள் பின் சென்றவர்கள் என்று இப்பாசுரத்தின் முதலடியில் மொழிகின்றார்கள்.

எங்களுக்குக் குருகுலவாசம் பசுக்களின் பின் செல்லுதலே! பிறப்பிலும், அறிவிலும், ஆசாரத்திலும் நிற்கவைக்கும் பசுக்களின் பின் செல்கின்ற 'எங்களுக்கு அருளியல் மேன்மை யாது?' எனஅறிய வழியில்லை என்று முதலடியில் தெரிவிக்கின்றார்கள்.

''கானஞ் சேர்ந்து'' என்பதால், எம்பெருமான் வீற்றிருக்கும் ஆலயங்களுக்குச் சென்று வழிபடும் தகுதி யில்லாதவர்கள்; காடுகளில் மாடுகளைமேய்த்துத் திரிபவர் கள்; என்ற தம் குறைபாட்டை வெளிப் படுத்தினார்கள். தண்டகாரணியம் நைமிசாரணியம் முதலிய காடுகளில் ஞானியர்கள் தங்கியிருத்தலால் அக்காடுகளுக்குப் பெருமை

யுண்டு. நாங்கள் அத்தகைய காடுகளுக்குச் செல்லவில்லை. வெறும் காடுகளில் திரிபவர்கள் என்பதை எடுத்துக்காட்ட மேற்குறித்த தொடரைப் பெய்து கூறினார் கோதை.

நீங்கள் ஆயர்கள் ஆதலால் நீங்கள் பசுக்களுக்காக உதவும் பணியினைப் பெரும் பயன் உடையது எனக்கணக்கிடலாம். இப்பணிக்காகக் காட்டில் தங்குதல் வானப்பிரஸ்தமாகக் கொள்ளலாம்; இதையும் அருட்பணியெனக்கணக்கிடலாம். ஆசிரியர் நியமனம் பெற்றுப் பசுக்களை மேய்த்துக் காடுகளில் தங்குதலும், அறமென்றே கூறப்படுகின்றது. சிறந்த முனிவர்களும் காடுகளில் சென்றுதான் அறங்களைச் செய்யும் தொண்டில் ஈடுபட்டார்கள். ஆகவே, ஆய்ச்சியர்களாகிய உங்கள் செயல் அறத்தின் பாற்பட்டதே என்று கண்ண பெருமான் கூறினான்.

''உண்போம்'', என்றதில் நாங்கள் அறநெறிப்படி, ஆசிரியர் கூறிய முறைப்படி, கறவைகள் பின் சென்று கானகம் சேர்ந்தோம் அல்லோம். தவத்தை மேற்கொண்டு அதனால் பேரின்பத்தை எய்த சென்றோம் அல்லோம். வயிறு வளர்ப்பதற்காகச் சென்றோம் என்று ஆய்ச்சியர்கள் கூறினார்கள்.

மேலும், இச் சொல்லால், அருகில் இருப்பவர்கள் கையிலே ஒரு பிடி இட்டு உண்ணும் வாய்ப்பு எமக்கு இல்லை என்றகருத்தையும் காணலாம். இவர்கள் இப்படித் தம் அடக்க உணர்வைக் காட்டிட இவ்வாறு கூறியவர்கள்,

''அறிவொன்றும் இல்லாத ஆய்க் குலத்தவர்''

என்றார்கள். ஞானமற்ற நிலை தன்னலப் போக்குடையது. இங்கே தன்னல மற்றநிலையில் ஆவினத்தைக் காத்து, ஆப்பயனை உலகுக்களித்தலால் அஃது அறிவின் மாட்சியாகும். பசுக்களைப் பேணுகின்றீர்கள் அதன் பயனை உலகம் துய்க்கக் கொடுக்கின்றீர்கள். இப் பணியால் அறத்தைச் சிறப்பாகப் பேணுகின்றீர்கள். நீங்களே அறிவுடையவர்கள் என்று கண்ணபிரான் கூறுவதாக

உரையாசிரியர்கள் இதற்குச் சிறப்பாகப் பொருள் கூறு வார்கள்.

தாய்க்குலம் தம் மக்களுக்கு, உதவி செய்து நாடு புரக்க வழிகாட்டுதல் போல ஆய்க்குலம், தம்மை மறந்து இம்மைக்குப் பெரிதும் உதவும் குலம் ஆதலால் அக்குலம் அறிவுடைய குலமாகும். இங்கே! அறிவில்லாத குலம் என்று கூறியதற்கு, இறைவனிடம் அடியார் தம்மை இழிவாக 'நாயேன்', 'பேயேன்' என்று கூறி அடக்கத் தைக் காட்டுதல் போல, ஆய்ச்சியர்கள் தம்மை அறிவில் லாத குலம் என்று எம்பெருமான் முன்கூறி, தம் அடக்கத் தைக் காட்டினார்கள்.

''பிறவி பெறுந்தனை புண்ணியம்''

எங்கள் குலம் நிறைவையெய்த, பெருமையாக விளங்க மகிழ்வுடன் எங்கள் குலத்தில் நீ வந்து பிறந்தாய்; உன்னை அருத்தித்து வரும் குலமாதலால் நீ விரும்பி வந்து இக் குலத்தில் பிறந்தாய். மிக்க பெருமை வாய்ந்த உன்னைப் பெற்றதால் நாங்கள் புண்ணியச் சீலர்களாவோம் என்று இத்தொடரால் கூறுகின்றார்கள்.

''குறைவொன்று மில்லாத கோவிந்தா''

என்று பாடியதில், நீ குறையைத் தவிர்க்கவே பிறக் கின்றாய். பிறர் செய்யும் கொடுமையை அழித்து அறிவுடையார் மனம்நிறைவை எய்த நல்ல சமுதாயத் தைப் படைக்கின்றாய்.

குறையற்ற நீதான் குறையை ஒழிக்க வியலும். உன்னைக் குறைவொன்றும் இல்லாத கோவிந்தன் என் றோம். துன்பப்படுவோர்களைக் கண்டு இரங்கி அவர் களின் துன்பத்தை நீக்கி இன்பம் அருள்பவன் ஆதலால் அவனைக் கோவிந்தன் என்றார்கள். இத்தகைய குறை யற்ற சத்தியச் சீலனான நீ! எம் ஆயர் குலத்தில் வந்து தோன்றியதால் எங்களுக்கும் எம் குலத்திற்கும் குறை

யேது? என்பது விளங்க மேற்குறித்த தொடரில் சுட்டினார்கள்.

''உன்றனோடு உறவேல் நமக்கு''

என்றதில், எம்பெருமானிடத்திலிருந்து நீக்க முடியாத அளவில் இவர்கள் இனிதே உறவு கொண்டிருந்தார்கள். 'சூரியனிலிருந்து ஒளியைப் பிரிக்க முடியாதவாறு போல எங்களுக்கு உன்பால் உள்ள உறவைப் பிரிக்க முடியாது. இவ்வுறவை எவரும் நீக்க வியலாது. குணியிலிருந்து குணத்தைப் பிரித்தெடுக்க இயலாதவாறு எங்கள் உறவைப் பிரிக்கமுடியாது என்று எம்பெருமானிடம் இவ்வாய்ச்சியர்கள் இயம்பி நின்றார்கள்.

''நானுன்னை யன்றிலேன் கண்டாய் நாரணனே!''

என்று நான்முகன் திருவந்தாதி இயம்புதல் போலே, மேலே குறித்த தொடர் மொழி கூறுதல் அறியலாம்.

''ஒழிக்க ஒழியாது.'' என்பதில் எம்பெருமானே, உன்பால் கொண்டுள்ள உண்மையான எங்கள் உறவை உன்னாலும், உன்னைச் சார்ந்தவர்களாலும் ஒழிக்க இயலாது. எங்களாலும், எங்களைச் சார்ந்தவர்களாலும் நீ எங்கள்பால் கொண்ட உறவை ஒழிக்க முடியாது. உன்னிலிருந்து எங்களைப் பிரித்தால் உடம்பிலிருந்து உயிர் பிரிந்ததாக முடியும். என்ற கருத்தை மேற்குறித்தத் தொடர் உணர்த்தும்.

''சிறுபேர் அழைத்தனவும்'' என்றதில், ஆய்ச்சியர்கள் 'கோவிந்தா' என்ற பெயரை உயர்ந்த பெயராகக் கருதுகின்றார்கள். அப்பெயரையே ''குறையொன்றும் இல்லாத கோவிந்தா'' என்று சொல்லி மகிழ்ந்தார்கள். 'சிறுபேர்' என்றது, 'நாராயணன்' என்னும் பெயரையே குறித்ததென உரையாசியர் கூறுவர். நாராயணன் என்பது சிறுபெயரா? என்றால், ஆயச்சியர்கள் கோவிந்தனை விரும்பியழைகின்ற உயர் பெயராகக் கருதியதால், பிறப்

பெயர்களைச் சிறுபேராகக் கருதுகின்றார்கள். தாம் பெற்ற பிள்ளையை உள்ளம் விழைந்து தாய் உவந்து போற்றுவதுபோல், இவர்கள் 'கோவிந்தன்' என்ற பெயரை மிக உயர்ந்த இன்பப் பெயராகக் கருதிப் பிறவற்றைச் சிறுபெயராகக் கருதினார்கள் என்றே கொள்ள வேண்டும். இதனால் முன்பு பாடிய பாசுரங்களை நினைவுபடுத்தியே

அவற்றில் 'நாராயணன்' என்ற பெயரைக் குறித்ததையே இதில் 'சிறு பேர்' என்று உரைத்தார்கள், எம்பெருமானைச் சிறப்பிக்க வந்த இந்திரன் 'கோவிந்தா' என்று கூறிப் பெருமை செய்ததைப் போலவே, இவர்கள் இப்பெயருக்கே ஏற்றமளித்தார்கள். ஆயர்பாடியில் பிறந்த போது இட்ட பெயரே சிறந்த பெயர். அப்பெயராலேயே 'கோவிந்தன்' என்றார்கள். 'அழைத்தன' எனக்கூறியதில், பன்மைவிகுதியிருத்தல் காணலாம். இது எம்பெருமானை ''நாராயணனே நமக்கே பறைதருவான்'' என்றும், ''நாற்றத்துழாய்முடி நாராயணன்'' என்றும், ''நாராயணமூர்த்தி'' என்றும் பலமுறை முன்பாசுரங்களில் குறித்தமையைக்காட்ட, இங்கே பன்மைவிகுதி தோன்ற கோதைபாடியிருத்தல் அவர் தம் நினைவாற்றலை அறிந்து இலக்கணப் புலமையை உணர்ந்து புகழ்தற்குரியதாகும்.

''உன்றன்னை அழைத்தனவும்'' என்றுவந்த உம்மைக்கு நாங்கள் நட்புக்குரியவர்களாக இருந்தும் எங்களுக்குள்ளே பேய்ப் பெண்ணே!'' ''ஊமையோ?'' ''செவிடோ?'' ''நாணாதாய்,'' ''பண்டேயுன் வாயறிதும்'' என்று பலவாறாகச் சொல்லிக் கொண்டது அன்பின் மிகுதியால் என்பதறிந்து அவற்றைப் பொறுத்தருள வேண்டும் என்று அவனிடம் கூறியதாகும்.

உலகத்தாருக்கு உணர்த்துவதற்காக 'இவர்கள் இன்னது செய்தார்கள்.' 'இவன் இன்னது செய்தான்'

என்பதைக் காட்டி, 'இத்தகையவனை விலக்க முடியுமா?' என்று கூறிய ஆய்ச்சியர்கள், மாமாயனை இறைவா'' என்று விளித்தார்கள்; இதனால் எதிர்பாராமல் வந்து அன்பர்களுக்கு உதவி செய்பவன் என்பதை அன்பால் அழகுபடக் கோதை அறிவித்தார்.

இப்பாசுரத்தில் ''கானம் சேர்தல்'' என்றது குருகுலவாசம் பெற்றுக் கல்வியை அறிதல்; பசுக்களை மேய்த்தல் என்றது எளியோருக்கு உதவும் அறச் செயலைக் குறித்தல்; குற்றமொன்றுமில்லாத கோவிந்தன் என்றதில் எம்பெருமானின் குணநலன்களைத்தாம் அறிந்தமையைத் தெளிவித்தல்; ''உறவு'' என்பதில் ஐக்கிய ஞானம் உணர்த்துதல்; ''சீறியருளாதே'' என்பதில் குற்ற மன்னிப்புக் கோருதல், கூறப்பட்டன.

''ஒழிக்க ஒழியாது'' என்பதால் சீவான்மா பரமான்மா சேர்ந்து நிற்க வேண்டிய பற்றுக்கோட்டினை உணர்த்தப் பெற்றது. நித்தியமாய் இருக்கும் அவனோடு மெத்த ஒன்றி நிற்க வேண்டிய திறத்தை உயிர்க்குலத்திற்குச் சிந்திக்க உணர்த்தியது இது, விசிட்டாத்வைத சித்தாந்தத்தினை இப்பாட்டில் இலங்கப் பாடியருளினார் கோதை.

''சிறுபேர்'' அழைத்தலாவது, ஆயர்பாடியிலே கோபாலனாய்ப் பிறந்தவனை அந்த அவதாரத்தைக் குறிக்கும் பெயரைவிடுத்து, 'நாராயணா' என்ற மற்றப் பெயரால் அழைத்ததையே கூறியதாக உரையாசிரியர்கள் விளம்புவார்கள்.

## பாவையில் இலக்கியச் செய்திகள்

பாவை பாடிய கோதை ஆய்ச்சியராக மாற்றமெய்தி உள்ளத்தால் கள்ள பிரானை மணாளனாக ஏற்க விழைந்தார். கறவைகளை எம்பெருமான் காட்டில் திரிந்து

மேய்த்தவன்; அப்படி இருக்க ஆய்ச்சியர்களோடு சேர்ந்து கானகத்தில் கறவைகளை மேய்த்ததாக,

''கறவைகள் பின்சென்று கானம்சேர்ந் துண்போம்''

என்று தெரிவிக்கின்றார். ஆனால் எம்பெருமான் மேய்த்த செய்தியினை இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில்,

''கோகுலம் மேய்த்துக் குருந்தொசித்தான்''

என்று பாடித் தெரிவிக்கின்றார். கொடியவன் ஒருவன் குருந்த மரமாக நின்று துன்பம் தர எண்ணியவனைத் தன் திருவடிகளால் உதைத்து வீழ்த்தினான் என்பதைச் சிறப்பாக இளங்கோவடிகள் தெரிவிக்கின்றார். இவனைப்பற்றி உவப்பாக

''வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக்
கடல் வண்ணன் பண்டொருநாள் கடல்வயிறு
கலக்கினையே
கலக்கிய கையசோதையார் கடைகயிற்றால்
கட்டுண்கை''

என்று பாடுவதில் ஒரு வியப்பான செய்தியைத் தெரிவிக்கின்றார். உலகிலேயே பெரிய மலை 'வடவரை' என்கின்ற 'இமய மலை' அதை மத்தாகக் கொண்டு, பாம்புகளில் ஈடும் எடும்பும் இல்லாதது வாசுகி. அதைக் கயிறாக ஆக்கி, பெரிய கடலின் வயிற்றைப் பண்டைய நாளில் அமுதம் எடுக்கக் கடைந்தாய். அத்தகைய ஆற்றல் சான்ற நீ! உன் தாயார் யசோதைப்பிராட்டியார் கட்ட முனைந்த போது இசைந்து அவர்கட்டுக்கு உட்பட்டாய்.

மிகப் பெரிய ஆற்றல் உடையவனான நீ! தாயன்புக்குக் கட்டுப்பட்ட நல்ல பண்புடையவன் ஆதலால், அவனை மாயம் புரியும் அண்ணல் என்று இளங்கோவடிகள் புகழ்ந்தார்.

இத்தகையவனை நம்மாழ்வார்,

''ஆனான் ஆன்ஆயன்
மீனோடு ஏனமும்
தானான் என்னில்
தானாய சங்கே!''

''மாடு மேய்க்கும் அவன் ஆயனாகத் தோன்றினான்; இப்படி இருப்பதோடல்லாமல் மீனாகத் தோன்றியதும், பன்றியாகப் பிறப்பெடுத்ததும் எனக்கு இனிமை தருகின்றன'' என்கின்றார் நம்மாழ்வார். அடியார்களுக்கு உதவி செய்தல் பொருட்டு அவன் பல அவதாரங்கள் எடுக்கின்றான். ஆயனாக மாடு மேய்க்கும் கண்ணனாக அவதாரம் எடுத்தது பெருஞ்சிறப்பென்று மேற்குறித்த பாசுரத்தில் குறித்தார். எளியனாக இருந்து நலஞ்செய்யும் போக்கே புனிதமானது. அவன் எளியனாகத் தோன்றினாலும் மேன்மை பெற்றே இலங்குகின்றான் என்பதைக் கோதைப்பிராட்டியார்

''குறைவொன்று மில்லாத கோவிந்தா''

என்று அவனைப் புகழ்கின்றார். கறவைகளின் பின் சென்றவனை, கறவைகள் பின் சென்று கானகம் சேர்ந்துண்ணும் என்ற ஆய்ச்சிமார்கள் வாய்மணக்கப் புகழ்கின்றார்கள். அருளாளனை அடைய அவன் உவந்த நெறியிலேயே சென்றே பற்ற வேண்டும் என்ற கருத்துப்படி இவர்கள் தலைப்பட்டார்கள்.

சங்க இலக்கியங்களில் அன்பைப் பற்றி மிக விரிவாகக் கூறப்பட்டுள்ளன. தலைவனும் தலைவியும் அன்புற்று இன்பம் நுகர்ந்த நிகழ்ச்சிகளைப் புலவர் பெருமக்கள் கவினுறப் பாடியுள்ளார்கள், தலைவன் தலைவியரிடையே வளரும் அன்புநிலையும், அவர் இல்லறம் நடத்தும் முறை முதலியனவும் உலகியலைச் செம்மைப்படுத்தும் தன்மையனவாம். தலைவிக்கும் தலைவனுக்கும் இடையே உள்ள அன்பைப் பற்றிய செய்திகள் மிக உயர்ந்த நிலையுடையன

இவ்வன்பு காமம், கேண்மை, தொடர்பு, நட்பு, நயம் என்னும் பெயர்களால் சொல்லப்படுவன.

இவ்வுயரிய அன்பு பிறவிதோறும் தொடர்ந்து வரும் என்பது சான்றோர் கொள்கை; ஆதலின்

''பயிலியது கெழீஇய நட்பு''

என்று குறுந்தொகை கூறும். எழுமையும் என்னோடு பயிலுதல் பொருந்திய நட்பு என்று இத்தூய காதலைக் கூறுவர். பிறவிதோறும் தொடர்ந்த நட்பு என்பதை,

''உடுத்து வழிவந்த உழுவலன்பு''

என்று பெருங்கதை பேசும். உழுவலன்பு என்பது பிறவி தோறும் பயின்று வரும் என்பது உறுதியாகும்.

பிறவிதோறும் தொடர்ந்து வரும் அன்பு என்னும் ''நல்லூழே'' தலைவனையும் தலைவியையும் ஒன்றுபடுத்துதற்குக் காரணமாகின்றது. அவ்வன்பின் தொடர்ச்சியினை அறுந்து படாமல் நிற்கச் செய்வது ஊழ். அதனைப் பால் என்றும் தெய்வம் என்றும் கூறுவர்.

''பால்வரைந் தமைத்த லல்ல தவர்வயிற்
சால்பளந் தறிதற் கியாஅம் யாரோ''

என்று குறுந்தொகை 366 ஆம் பாடல் கூறுகின்றது. இதில் தோழி, தலைவியைப் பற்றிச் செவிலியிடம் கூறுகின்றாள். தலைவனது குணச்சிறப்பை அளந்து அறிவதற்கு உரிய தகுதி நமக்கேது? இது நல்லூழினால் அமைக்கப்பெற்றது. இந்த அன்பின் தொடர்பு ஒரு பிறவியிலேயே அறுந்து விடுவதன்று; மறுபிறவியிலும் தொடர்வது என்று இது இயம்புகின்றது.

கோதை சங்க இலக்கியக் கடலுள் மூழ்கித் திளைத்தவர். ஆதலால் மேற் குறித்த செய்திகளைத் தம் திருப்பாவையில்,

''குறைவொன்றும் இல்லாத கோவிந்தா உன்தன்னோடு
உறவேல் நமக்கிங்கு ஒழிக்க ஒழியாது''

என்றும்,

''அறிவொன்று மில்லாத ஆய்க்குலத் துன்றன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்''

என்றும் பாடி,

திருப்பாவையை அருட்பாவையாக அழகுடன் தந்ததோடு, சங்கத் தமிழ் மாலையாக எம்பெருமானின் திருவடியில் சூட்டி மகிழ்ந்தார் கோதை. இப்பாவையைத் தன்னலத்திற்காகப்படைக்காமல் உலகோர் உய்யப் பொது நலத்துடன் படைத்தார். சேய் மறந்தாலும் தாய் மறவாமல் சால்புடன் உதவிசெய்தல் போல தாயாக வந்த கோதைப்பிராட்டியார் நேயம் கொண்டு இப்புவி ஒப்பின்றி விளங்க, அருளியல் பாவையை விரும்பி அருளினார். உலகத்தின் நலத்தைக் குலைக்க வந்த கயவர்களைப் பூண்டோடு அழித்து நிலையில் திரியாமல் நேயம் கொண்டு, தூய்மையுடன் பண்பாட்டை வளர்க்கும் நல்லவர்கள், தொல்லைகள் இன்றியே வாழ, இம்மண்ணில் மனித வடிவம் தாங்கி உதவ வந்த ஆராவமுதனை: அவனின் தனிச்சிறப்பைப் படம் பிடித்த அன்னையாம் நம் கோதையை மறவாமல் அவர் நெறியில், நின்று கண்ணனை வழிபட்டு உய்வோமாக!

## மனித உடம்பெடுத்தானை வாழ்த்து!

மனிதப் பிறவியில் வந்தவன் தீமை
தனைக்களைந்து நன்மையினைத் தந்த இனியவனை
மாயவனைப் பற்றி மகிழ்வடைந்த கோதை எனும்
தாயினைப் போற்றிடுவோம் சார்ந்து!

# பொற்றாமரை அடியிணைப் போற்று!

எற்றைக்கும் கண்ணன் எழில்நலத்தைப் போற்றியவர்
உற்ற திருப்பாவை ஒண்ணமுதை—அற்புதமாய்த்
தந்தார் அவனகத்தைச் சார்ந்திட்டார் கோதையார்
செந்தமிழைப் பாடிடுவோம் சேர்ந்து.

—கவியமுதனார்.

எப்போதும் தப்பாமல் கண்ணன் திறத்தைப் போற்றுபவர்; அவனுக்காகத் திருப்பாவையை உவந்திசைத்தவர் கோதை. அத்திருப்பாவையே ஒப்பில்லா அமுதமாகும்; கற்றவர் போற்ற அற்புதமாய்த்தந்தார். அவன் விரும்பும் வகையில் பாடி அவனைத் தம் நாயகனாக ஏற்றார். அவர் தந்த பாவை செந்தமிழ் அமுதமாகும். அந்த அமுதத்தை நாமெல்லாம் சேர்ந்து பாடி, கார்முகில் வண்ணனைப் பற்றி உய்ய வேண்டுகின்றார் கவியமுதனார். கோதை அவனை மறவாமல் நினைந்து பாடி உய்வைப் பெற்றதைப் போலே நாமும் நிதமும் பாடி உய்வை எய்துவோம் என்றார் அவர்.

'கோவிந்தா!' என்று கண்ணபிரானை விளித்தார்கள் ஆய்ச்சியர்கள். மிக விடியற்காலத்தில், உன் இடத்திற்கே வந்து, உன்னை வணங்கி, உன் அழகிய திருவடித் தாமரைகளை விழைந்து போற்றுவதற்குரிய காரணத்தைக் கேட்டருள வேண்டும். பசுக்களை மேய்த்து உண்ணும் ஆயர் குலத்தில் பிறந்த நீ! எங்களிடத்தில் அந்தரங்கத்

தொண்டினை ஏற்கத் திருவுள்ளம் பற்றாதிருத்தல் கூடாது. இன்று கொடுக்கின்ற இப்பறையைப் பெற்றுக் கொள்வதற்கு நாங்கள் வரவில்லை. எக்காலத்திலும். நீ எடுக்கின்ற அவதாரங்களின் போதெல்லாம், உன்னோடு உறவு உடையவர்களாகவே இருக்க வேண்டுகின்றோம்.

உனக்கு மாத்திரமே யாங்கள் அடிமையாக இருக்க விரும்புகின்றோம். நாங்கள் மற்ற விருப்பமான செயல்களில் தலைப்படாமலிருக்கவே செய்தருள வேண்டும். எங்களுக்கு உன்னைத் தவிர மற்றவற்றை எண்ணாமல் இருக்கின்ற மன உணர்வைத் தர வேண்டுமென்று ஆய்ச்சியர்கள் கண்ணனிடம் கோருவதாக இப்பாசுரத்தில் கோதை பாடியிருக்கின்றார்.

முன்பு பாடிய பாசுரங்களிலெல்லாம் பறை பற்றிக் கோரியதெல்லாம், எங்களை இந்நோன்பில் தலைப்பட வைத்தவர்கள் அறிந்து கொள்ளவே கொட்டி முழக்கிடக் கூறிய பறையாகும். ஆனால் எங்களின் உண்மையான மன நிலை உன் திருவடிப் பெருமையினைப் பேசி அதற்குத் தொண்டு செய்வதேயாகும் என்று ஆய்ச்சியர்கள் எடுத்துரைக்கும் வகையில்,

''சிற்றஞ் சிறுகாலை வந்துன்னைச் சேவித்துன்
பொற்றா மரையடியே போற்றும் பொருள்கேளாய்!
பெற்றம்மேய்த் துண்ணுங் குலத்தில் பிறந்துநீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது;
இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண்;
கோவிந்தா!
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தனோடு
உற்றோமே யாவோம்; உனக்கேநாம். ஆட்செய்வோம்
மற்றைநங் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய்!''

என்று கோதை நாய்ச்சியார் மன விருப்புடன் கோவிந்தனைப் பாடுகின்றார். ஆயர் குலத்தில் வந்து தோன்றி, மாயம் விளைத்தவனான பரம்பொருளின் பொன்னையொத்த அடிகளை—தாமரை மலரையொத்த அடிகளைப் போற்றித் தம் விருப்பத்தைப் 'பொருள் கேளாய்' என்று கூறி அவனிடம் நலம் கோருகின்றவர், நீ! மாடு மேய்க்கும் எங்கள் குலத்தில் பிறந்ததால் எங்களின் தொண்டினை, உனக்காகச் செய்ய நினைத்ததை நீ ஏற்காமல் இருக்கக் கூடாது? உனக்கே நாங்கள் அடிமையெனக் கோதை கோவிந்தனிடம் கூறுவது, அவன் மீது கொண்ட தீராக் காதலால்ஆகும்.ஆம்,தம் உள்ளக்கிடக்கையை இப்பாசுரத்தில் உரைக்கின்றார் அவர். அவனை விட்டு நீங்காமையே ஆய்ச்சியர்களுக்குப் பேரின்பம் ஆதலால், எங்கள் மனத்தில் வேறு வகையான விருப்பம் தோன்றாத வகையில் எம்பெருமானே அருள் சுரக்க வேண்டுமென்று கோருகின்றார்கள்.

''எம்மா வீட்டுத் திறமும் செப்பம்நின்
செம்மா பாதபற்புத் தலை சேர்த்து ஒல்லைக்
கைம்மா துன்பங் கடிந்த பிரானே
அம்மா வடியேன் வேண்டுவதீதே''

என்றும்,

''ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்''

என்றும் ஆழ்வார்கள் அவன் பற்றிலிருந்ததைப்போல இவ்வாய்ச்சியர்கள் இருக்க வேண்டினார்கள்.

''சிற்றஞ் சிறுகாலை''—என்றது, புலரும் காலத்தைக் கூறியது; வானத்தில் தோன்றி வெளிவரும் பரிதியின் காலத்தைத் தெரிவிக்கின்றது. 'சின்னஞ் சிறு பையன்' ,செக்கச்சி வந்த மேனி' என்று கூறுவன போன்றது இது.

'கத்தக் கதித்துக் கிடந்த'' என்று பெரியாழ்வார் திருமொழியில் கூறப்பெற்றுள்ளது.

திருவாய் மொழியில், ''ஒக்கலை வைத்து முலைப்பால் உண்ணென்று'' பாடப் பெற்ற பாட்டில் ''செக்கஞ் செகவென்று'' நம்மாழ்வார் அருளியவற்றில் காணலாம். இவ்வாறே கோதைப் பிராட்டியார் சிற்றஞ் சிறுகாலை'' என்று தம் பாசுரத்தினைத் தொடங்கிப்பாடுகின்றார்.

இவர்கள் காலை வந்தது என்று சொல்லாமல் சிறு காலை வந்தது என்று கூறாமல் 'சிற்றஞ் சிறு—காலை' என்றது, எங்கள் பருவ நிலையைக் கருதாமல் பொழுது விடிந்து இவ்வளவு நேரம் ஆகியும், குளிருக்கு அஞ்சிக் குடிலைவிட்டு வாராத நிலையில் உள்ள நாங்கள் இந்தச் சிறு காலையில் வந்ததை, உலக நாயகனான நீ ஆராய்ந்து அறிந்திருப்பாய் என்று கருதுகின்றோம் என்று ஆய்ச்சியர் கள் தம் நிலையைக் கூறியதாகும்.

''பொற்றாமரையடியே போற்றும் பொருள்கேளாய்''

என்றது. நாங்கள் எதை எண்ணிப் போற்றவேண்டி வந்தோமோ அதைக் கூறித் தெரிவிக்கின்றோம். அதைக் கேட்டு எங்களுக்கு அருள் சுரக்க வேண்டுகின்றார்கள்.

'பெற்றம்மேய்த்து,' என்றதில் தேவர்களின் மத்தியில் ஏழுலகம், தனிக்கோல் செல்ல வீற்றிருக்கும் இருப்பைத் தவிர்த்து, அந்தப் பெருமையினை விடுத்து, ஆயர்குலத்தில் நீ வந்து பிறந்ததற்கு ஒரு நன்மை இருக்க வேண்டு மன்றோ? இந்நிலையில் நீ எங்களுக்கு அன்பனாகி, எங்களின் தொண்டினை ஏற்காமல போனால் உன் பிறவி, பெருமையற்றதாகி விடும்; என்று அவனிடம் இயம்பு கின்றார்கள்.

நாங்கள் அறியாதவர்கள்! இருளில் வழிகாட்டும் விளக்கேபோல எங்கள் குலத்தில் ஒளியேற்றி வைக்க நீ பிறந்தாய். கபடு, சூதற்ற குலம், பிறர்க்குதவும் அறநெறி

யுடைய குலம். இந்தக் குலத்தை உன் சிந்தைக்கினிய குலமாகத் தேர்ந்தெடுத்து வந்து தோன்றினாய்.

''அறியாதார்க்கு ஆனாயனாகிப் போய்''

என்று பெரிய திருமொழி பேசுவதைப் போல, நீ ஆயர் குலத்தைத் தேர்ந்தெடுத்தாய் போலும்.

''குலத்தில் பிறந்து''—என்றதால், பிறகுலங்களில்
பிறக்கவிரும்பாத நீ! இக்குலத்தில் பிறந்தது
தக்கதெனத் தெரிந்து மிக்க மகிழ்வோடு பிறந்தாய்.
காக்கும் சாதியிலே ஆக்கம் நல்க வந்து பிறந்தாய்

என்று கூறியதாகும்.

'குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது''

என்றதில்

''கொம்மை முலைகள் இடர்தீரக் கோவிந்தற்
கோர் குற்றேவல்,
இம்மைப் பிறவி செய்யாதே இனிப்போய்ச்
செய்யுஞ் தவந்தானென்''

என்று நாச்சியார்திருமொழியில் கூறியவாறு எடுத்துச் சொல்லப்பட்டது.

இவர்கள் கருத்தைக் கேட்ட கண்ணபிரான் ஒரு பறையைக் கொடுத்தான். அதைக் கண்ட ஆய்ச்சியர்கள், கண்ணா! நீ எங்கள் கருத்தைப் புரிந்து கொள்ளாமல், பறையைக் கொடுக்கின்றாய்! இதைப் பெற்றுச் செல்வதற்கு நாங்கள் வரவில்லை. உனக்கு நாங்கள் என்றும் தொண்டினை ஆற்றிக் கொண்டிருக்கவே வந்தோம் என்றார்கள். இக்கருத்தை,

'எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்னுடன் இருந்து கொண்டே தொண்டாற்றஎண்ணுகின்றோம். எம்பெருமானோடு பிறவி தோறும் சேர்ந்து பிறக்கும் பிராட்டியைப் போன்று பிறந்து உனக்குப் பணிசெய்ய வேண்டுமென்று

ஆய்ச்சியர்கள் தம் கருத்தை எம்பெருமானிடம் இயம்புகின்றார்கள்.

''மற்றை நம்காமங்கள் மாற்று' இதற்குப் பலவாறாகப் பொருள் கூறுவர். பயனுள்ள தொண்டில் மனம் ஈடுபட்டுச் செய்யவேண்டும். அலைகின்ற நிலையில் இல்லாமல், எடுத்த பணியில் வெற்றி காணும் வகையில் மனம் உறுதியாக ஊன்றி நிற்கவேண்டும். ஆதலால் வேறு விருப்பங்களுக்கு ஆட்படாமல் இருக்க வழி செய்வாயாக! என்று இன்னமுதனிடம் விளம்பப்பட்டது.

இக்காமங்கள் ஐந்தாகக் கூறப்படுகின்றன.

1. தேகமே ஆன்மாவாகக் கருதுதல்;

2. அவதாரங்களை மனிதப்பிறவியாகக் கருதுதல், அர்ச்சா மூர்த்திகளிடம் கீர்த்திக்குரிய சக்தியில்லை என்று எண்ணுதல்;

3. இறைமைத் தொண்டினைக் காட்டிலும் மேலான தொண்டு வேறொன்றிருப்பதாக நினைத்தல்;

4. அனைத்திற்கும் மூலமாயிருக்கும் பரம்பொருளை அறியும் வழியை விட்டு, மற்ற வழியை மேலானதாகக் கருதுதல்;

5. உடம்பின் நலத்தைப் பெரிதாகக் கருதி, உள்ளுணர்வைப் போற்றாமல், அவனடியாரை இழிவாக நினைத்தல்; இக்காமங்களைத்தான் மாற்றுமாறு ஆற்றல் சான்ற நாற்றத் துழாய் முடியானிடம் கோதை கூறி வேண்டுகின்றார்.

## பாவையில் இலக்கியச் செய்திகள்

பரம்பொருளைப் பற்ற நினைப்பவரின் அன்பு, அழியாமல் மறுபிறவியிலும் அருளாளனைத் தொடரச் செய்யு . ''அன்பின் வழியது உயர்நிலை'' என்றும்.

''அன்புஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு''

என்றும் திருவள்ளுவர் பேசுகின்றார். இதற்குப் பரிமேலழகர், 'உடைமை உடையனாம்தன்மை யாவரும் நண்டாதல் எல்லாப்பொருளும் எய்துதற்கு ஏதுவாகலின் அதனை நாடாச் சிறப்பு என்றார் என உரை எழுதியுள்ளார். இதனால் பரம்பொருளை அன்பின் வழியில் பற்றுவதால் அவன் எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றாவான் என்பது பெறப்படும். இதைப் பெருங்கதை,

''பிறப்பிடைக் கொண்டும் சிறப்பொடு பெருகி
நெஞ்சிற் பின்னி நீங்கல் செல்லா. அன்பு'' என்றும்,
தொன் முறை வந்த,
பிறப்பிடைக் கேண்மைப் பெருமனைக் கிழத்தி
என்றும்,

''பிறப்பு வழிக் கேண்மை''
என்றும் கூறுவதால் அறியலாம்,

ஒரு பிறவியில் அன்பின் நெறியால் கொண்ட நட்பு, எடுக்கின்ற பிறவிதோறும் தொடர்ந்து சென்று எவரிடம் தொடர்பு கொண்டிருந்ததோ அவரோடு சேர்ந்தின்புற வைக்கும் என்று பெருங்கதையின் தொடர்மொழிகள் பகர்தல் அறியலாம். பிறவிதோறும் தலைவனும் தலைவியும் சார்ந்திருக்கச் செய்வதே அன்பின் நிலையாகும்.

''கடனறிந் திருவே மாகிய வுலகத்து'' என்று குறுந்தொகையில் 57ஆம் பாடல் கூறுகிறது. செய்யக் கடவனவாகிய முறையை அறிந்து பிறவிதோறும், தலைவனும் தலைவியுமாகிய இருவேமாகப் பயின்று வந்த உலகத்தில் என்று தலைவி கூறுகின்றாள்.

''இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியரென் கணவனை
யானா கியர்நின் னெஞ்சுநேர் பவளே''

என்று குறுந்தொகை 49ஆம் பாடல் தெரிவிக்கிறது. இப்பிறப்பு நீங்கப் பெற்று நமக்கு வேறு பிறப்பு உண்டாயி னும், என்னுடையதலைவன் இப்போது என்பால் அன்பு செய் தொழுகும் நீயே ஆகுக! நின்னுடைய மனத்திற்கு ஒத்தகாதலி இப்போது நின்னெஞ்சு கலந்தொழுகும் யானேயாகுக என்று கூறப்படுகின்றது.

மறுமையிலும், தலைவனும் தலைவியுமாயிருந்து அனுபவிப்பர் என்ற செய்தியினை,

''எமர்தர வாரா தாயினும் இவணோற்
றவனுறை யுலகத் தழித்துப் பிறந்தாயினும்
எய்துதல் வலித்த னென்''

என்று பெருங்கதை பேசுகிறது. இவளின் தோளினைத் தவத்தால் அடுத்த பிறவியிலேனும் எய்துதல் இயலும் என்று தலைமகன் கூறுவதாக மேற்குறித்த பாடல் கருத்து இயம்புகின்றது. மேலும் இச் செய்தியினை வலியுறுத்தும் வகையில்,

''மறப்பான் அடுப்பதொர் தீவினை வந்திடிற்
சென்று சென்று
பிறப்பான் அடுப்பினும் பின்னுந் துன்னத்தகும்
பெற்றியரே''

என்று திருச் சிற்றம்பலக் கோவை கூறுகின்றது, இதில் தீவினைகள் தோன்றிப் பற்றுதற்குரிய பரம்பொருளைப் பற்ற இயலாமற் செய்தாலும்...அன்பால் மீண்டும் பிறந் தேனும் பெற்று இன்புறுவேன் என்று ''துன்னத்தகும் பெற்றியரே'' என்று கூறியதால், மறு பிறவியிலும் அன்புடையார் அருளாளனைப் பற்றி விடுவர் என்றுணர லாம். இந்த அன்புடைமையால் ஆராவமுதனைப் பற்று வதற்கு, மனத்தில் பேராவல், கொண்டிருந்த கோதை,

''எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கே நாம்ஆட்செய்
வோம்

என்று பாடுகின்றார். கோதை சங்க நூல்களைச் சால்புற அறிந்தவர். தலைவன் மீது ஆழமான அன்பைக் கொண்ட தலைவி, இப்பிறவியில் அனுபவித்ததோடு அல்லாமல் மறு பிறவியிலும் தலைவனோடு இன்புற்று நிற்பேன் என்று கூறும் உறுதிக்குக் காரணமாயிருந்தது' அன்பு ஆதலால், அந்த அன்பை எடுத்துக்காட்டும் சங்க நூல்களைப் பயின்ற காரணத்தால், எம்பெருமானே! இற்றைக்கு உன்னைப் பற்றிய யான்

''எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கேநாம்
ஆட்செய்வோம்''

என்று அவனோடு உவப்புடன் என்றும் ஒன்றி நிற்கும் பற்றினை அற்புதமாகக் கூறுகின்றார்.

''அகலகில்லேன் இறையுமென்று
அலர்மேல் மங்கை உறை மார்பா''

என்று பிராட்டி அவன் மார்பை விட்டு அகலாமல் உறைதல் போன்று, ''எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்றனோடு'' உறைவேன் என்று பாடுகின்றார், அன்பும் உறுதிப்பாடும் நினைத்ததை நமக்குத் தரவல்லன. என்று கூறி அந்த அன்பின் உறுதிப்பாட்டில் நிற்க வழிகாட்டு கின்றார்.

நிலமிசையில் நீடு வாழ அவன் திருவடியே துணை யாகும். பிறவாப் பேற்றினை அளிக்கவல்லது இறைவன் திருவடி. அவன் திருவடியின் பெருமையினை,

''மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்!''

என்றார் திருவள்ளுவர். வாழ்விக்கும் எம்பெருமான் திருவடிப் பெருமையின் அருமைப்பாடு தோன்ற

''தேடிய அகலிகை சாபம் தீர்த்ததாள்
நீடிய உலகெலாம் அளந்து நீண்டதாள்
ஓடிய சகடிற உதைத்துப் பாம்பின்மேல்
ஆடியும் சிவந்ததாள் என்னை ஆண்டதாள்''

என்று வில்லிபுத்தூர் ஆழ்வார், பாரதத்தில் நான்காம் போர் சருக்கத்தில் காப்புச் செய்யுளாக வைத்துப் பாடுவார். இதில், அகலிகையின் சாபத்தைத் தீர்த்ததும், உலகங்களையெல்லாம் அளந்ததும், சகடாசூரனை உதைத்து அழித்ததும், காளியன் என்னும் நாகத்தின்மீது நின்று கூத்தாடியதுமான எம்பெருமான் திருவடி சிவந்த திருவடி. அத்திருவடியே என்னை ஆட்கொண்ட மாட்சியுடைய திருவடி என்று போற்றிப் பாடி விளம்புகின்றார்.

அவன் திருவடியின் பெருமையினைச்

''சொல்லமாட்டேன் அடியேன் உன்
துளங்கு சோதித் திருப்பாதம்''

என்று பாடும் நம்மாழ்வார். தம்முள்ளத்தின் கண் அவன் திருவடி சோதித்தன்மை பெற்றுஒளிர்வதாக அனுபவித்துக் கூறுகின்றார். இந்தத் திருவடியைக் கோதைப்பிராட்டியார்

''பொற்றாமரை அடி''

என்று கூறி, அவன் பெற்றிக்கு உரிய அற்புத அடியை விளித்துப் ''பொருள் கேளாய்'' என்று கூறி, எம்பெருமானின் செம்மை சான்ற திருவடியைப் போற்றுகின்றார். அவன் திருவடிகளே உலகை வாழ்விப்பன. என்பதைத் தெரிவிக்க திருப்பாவையில் இருபத்து நான்காம் பாசுரத்தில் அவன் திருவடி பெருமையைக் காட்டவே பாடினார். அவன் திருவடியின் கீழ் எல்லா உலகங்களும் அடங்கிச் செயலாக்கம் காண்கின்றன.

''காண்காண் எனவிரும்பும் கண்கள் கதிர்இலகு
பூண்தார் அகலத்தான் பொன்மேனி—பாண்காண்
தொழில்பாடி வண்டறையும் தொங்கலான்
செம்பொன்
கழல்பாடி யாம்தொழுதும் கை''

என்று பேயாழ்வார் பாடுவார். அவன் கழலை என்வாய் பாடும், என் கைத் தொழும் என்று அன்பு மேலிடக் கூறுகின்றார். இவர் கண்ணன் திருவடியைச் செம்பொன் கழல் என்றார். கோதைப் பிராட்டியாரும் பொன்னைப் போன்றும் தாமரை மலரைப்போன்றும் சிவந்த திருவடி என்றார். அனைத்தும் அருளும் ஆராவமுதனை அவர் போற்றியவாறு வழிபட நமக்கு இப்பாசுரத்தின் மூலம் தெரிவிக்கின்றார். அவர் காட்டிய திருவடியைப் போற்றிச் செந்நெறியில் சென்று இன்பம் எய்துதல் சிறப்பாகும்.

### மாயனைப் பற்றி வாழ்வோம்!

கண்ணனின் அடியே ஞாலங்
காத்திடும் பொருளே அந்த
வண்ணனின் பாதம் பாடி,
வழுத்திய கோதை யன்னை
தண்திருப் பாவை தன்னைத்
தாரணிக் களித்தார் இன்ப
வண்டமிழ் அமுதம் பாடி
மாயனைப் பற்றி வாழ்வோம்!

# செல்வத் திருமாலைச் செப்பு!

வங்கக் கடல்கடைந்த மாதவனோ வந்தேற்கச்
சங்கத் தமிழ்மாலை தாம்புனைந்தே—இங்கிதமாய்ச்
செய்தளித்த கோதை திருப்பாவை பாடுவோர்தம்
மெய்யுணர்வைக் காட்டும் விளக்கு!

—கவியமுதனார்

கலங்கள் பல மிகுந்து காணப்படுகின்ற கடலைக் கடைந்தவன் மாதவன். இவன் விரும்பி ஏற்கின்ற தன்மையில் கோதைப் பிராட்டியார் சங்கத் தமிழ் மாலையாகிய திருப்பாவை முப்பது பாசுரங்களை இசைத்தார். அவர் இனிதாக இசைத்த அப் பாசுரங்களைக் கேட்டுப் பாடும் மாந்தர்களின் மெய்யுணர்வைக் எடுத்துக் காட்டுகின்ற விளக்கு! என்றார் கவியமுதனார்.

திருப்பாவையின் பெருமையைக் கேட்பவர்களின் பாடுபவர்களின் மனமே விளக்கு போன்று ஒளிரும் என்றார். திருப்பாவையின் அருமையை அருளிய கோதையின் உணர்வையும், கடலைக் கடைந்தமுதம் அருளிய மாதவனின் மாட்சியையும் இவ்வெண்பாவில் படம் பிடித்துக் காட்டுகின்றார் கவியமுதனார்.

கண்ணபெருமான் திருப்பாற்கடலைக் கடைந்தவன். தேவர்களுக்கு அமுதம் எடுத்துத்தர முனைந்தவன். இத்தகைய வித்தகனை, நிலவொளி போல் அழகிய முகத்தையுடைய சிறந்த ஆபரணங்களை உடைய ஆயச்

சிறுமியர்கள் சென்று வணங்கினார்கள்; திருவாய்ப்பாடியில் அருளாளனிடத்தில் தாங்கள் விரும்பிய பறையைப் பெற்றார்கள். இச்செய்தியை அறிந்த வரும் அழகிய திருவில்லிபுத்தூரில் தோன்றியவரும் குளிர்ச்சியை யுடைய தாமரை மலர்களைக் கொண்டு புனைந்த மாலையை அணிந்துள்ள வருமான திருமகளாம் கோதைப் பிராட்டியார் சங்கத் தமிழ் மாலையான திருப்பாவையாம் முப்பது பாசுரங்களைப் பாடி வாசுதேவனின் திருவடியில் சூட்டினார்.

ஒப்பில்லா அப்பாமாலையை இம்மாநிலத்திலுள்ளவர்கள் தம் மனமுவந்து இசைத்தால் பெரிய தோள்களையும் சிவந்த திருக் கண்களையும் உடைய திருமால் இரங்கி வந்துஅருள் சுரப்பான்.இப்பரம்பொருளான எம்பெருமான் தன் திருவருளைக் காட்டி எல்லா நலன்களையும் தந்திடுவான்.இத்திருப்பாவையினைப் பாடுவோர்க்கு உத்தமனின் பற்றுக் கோடு ஏற்படுவதன்றி; அவர்கள் என்றும் உவப்புடன் உய்வார்கள் என்று கூறப்படும் இச்செய்தியை, கோதைத் தாயார்,

''வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனை,
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப் பறைகொண்ட ஆற்றை அணிபுதுவைப்
பைங்கமலத், தண்தெரியல் பட்டர்பிரான் கோதை
சொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே
இங்கிப் பரிசுரைப்பார், ஈரிரண்டு மால்வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்குந் திருவருள்பெற் றின்புறுவர் எம்பாவாய்!''

என்று பாடுகின்றார்.இதில் இப்பிரபந்தமான திருப்பாவையைப் பாடுவோருக்கு, எம்பெருமானின் திருவருட் பேறு சித்திக்கும்மென்று உறுதியாகக் கோதை தெரிவிக்கின்றார்.

''கடல் கடைந்த'' என்பதில் வரலாற்றுச் செய்தி ஒன்றைத் தெரிவிக்கின்றார். முன்பொரு காலத்தில் திருமால்வதியும் பதியான வைகுந்தத்திற்குத் திருமகளைப் பாடிக் கொண்டு சென்ற தேவலோகப் பெண்ணொருத்திக்கு, அருள் உள்ளம் கொண்ட திருமகள் பூமாலையை மகிழ்ந்து வழங்கினாள். அதைப் பெற்றவள் தன்கை வீணையில் தரித்துக் கொண்டு, பிரமலோகத்தின் வழியாகச் செல்லும் போது, துர்வாச முனிவர் எதிரில் வந்து துதித்ததால், அவருக்கு அம்மாலையை அளித்தாள்.

அதன் பெருமையை உணர்ந்து, அதனைச் சிர மேற்கொண்டு பெற்ற முனிவர், மகிழ்ச்சியுடன் தேவர் உலகத்திற்குச் சென்று, அங்கு உல்லாசமாக ஐராவதம் என்னும் யானையின் மேல் பவனி வந்த இந்திரனைக் கண்டு அவனிடம் அம்மாலையைக் கொடுத்தார். வெற்றிக் களிப்பில் மூழ்கியிருந்த இந்திரன் அந்த மாலையின் புனிதத்தை உணராமல் யானையின் மத்தகத்தின் மேல் வைத்தான். அம்மதயானை மாலையைத் துதிக் கையால் பிடித்திழுத்துக் கீழெறிந்து காலால் மிதித்துத் துவைத்தது.

அதைக் கண்ட முனிவர் சினந்து, செல்வச் செருக்கால் அருமையான மாலையைப் பற்றி அறியாமல் பாழாக்கினாய் என்று, அவனின் செல்வங்களெல்லாம் கடலில் மறைந்து போகச் சாபமிட்டார். இச்சாபத்தால் இந்திரனின் செல்வமெல்லாம் மறைந்தன. அசுரர்கள் இந்திரனைப் போரிட்டு வென்றார்கள்.

பின்பு இந்திரன் தேவர்களோடு திருமாலைச் சரணடைந்து வேண்டினான். அப்பெருமான் கட்டளையிட்டபடி அசுரர்களையும் துணைகொண்டு மந்தர மலையை மத்தாக்கி, வாசுகியென்னும் பாம்பைக் கயிறாகக் கொண்டு பாற்கடலைக் கடையச் செய்தான். பின்பு இவர்கள் சோர்வடைந்ததால் எம்பெருமான் இரு பேருருவம் கொண்டு தேவர்கள் பக்கமும் அசுரர்கள் பக்கமும் நின்று கடைந்து அமிழ்தம் வெளிப்படும்.

வரையிலும் கடைந்தான். அப்போது மந்தர மலை கடலில் அழுந்தியது. தேவர்கள் வேண்டுதலுக்காக எம்பெருமான் பெரியதோர் ஆமை வடிவம் எடுத்து மலையின் கீழ் சென்று மலை அழுந்தாதவாறு தன் முதுகில் தாங்கி உதவினான்.

இதனால் அமுதத்துடன் வந்த பிராட்டியை ஏற்றான் என்பதைத் தெரிவிக்கவே, உள்ளுறைப் பொருளாக அமைத்து மேற் குறித்த தொடர் மொழியால் தெரிவித்தார். இக்கருத்தை ஆய்ச்சியர்கள் வாயிலாக உணர்த்தினார்.

எம்பெருமானை இவர்கள் அடைவதற்கு உதவி செய்தவள் பிராட்டியாதலால், அன்னைக்கு நன்றி பாராட்டும் வகையில் மேற் சொன்ன தொடரில் உள்ளுறையாக அமைத்துக் கூறினார்கள். கடலைக் கடைந்தவனின் நோக்கத்தினையும் தெளிவுபடுத்தினார்கள்.

தன் துன்பத்தைக் கருதாமல் பிறர்படும் துயரைக் களையவே எண்ணுபவன் கண்ணபிரான். அவனின் ஆற்றல் சான்ற செயலினை, இரங்கி உதவ வந்த குண நலன்களை இப்பாசுரத்தில் எடுத்தியம்பினார் கோதை.

வங்கம் என்ற சொல்லால் கடலெங்கும் மரக்கலங்கள் நிரம்பி இருந்தன என்று கூறப் பட்டதை வேறு வகையாகவும் எண்ணலாம். அதாவது, கடலைக் கடைந்த போது மந்தர மலை மிக வேகமாகச் சுழன்று வந்தது. இந்த நிலையே கடல் முழுவதும் மரக்கலங்கள் இருந்தனவாகத் தோன்றச் செய்தது. ஆதலால், வங்கக் கடல் எனப்பட்டதாகக் கொள்ளலாம்.

வங்கம் என்பதற்கு இன்னொரு பொருள் ''அலை'' என்பதாகும். இது பங்கம் என்னும் வட சொல் விகாரத்தைத் தமிழ்ப்படுத்தி வங்கம் என்றார் கோதை. தமிழ் இலக்கண நுட்பத்தில் தோய்ந்தவர் என்பதாலும், வட

மொழிப் புலமை பெற்றிருந்ததாலும் இவ்வாறு அவரால் அறிந்து கூற முடிந்தது.

கேசவன், பிரம்மாவுக்கும் உருத்திரனுக்கும் அருள் புரிந்தவன் என்பதால், இப்பாசுரத்தில் அவனைச் சிறப்பித்தார். அடியார்களின் மேம்பாட்டைச் சொல்கிற இரண்டாம் அடியில்,

''திங்கள் திருமுகத்து'' என்றது, ஆய்ச்சியர்களின் முகத்தில் நின்றொளிர்ந்த அழகினைச் சுட்டியது. ''சேயிழையார்'' என்றது. அவர்களின் அறிவாகிய ஞான நிலையை வெளிப்படுத்தியது.

அப்பறை கொண்டவாற்றை - என்றதில் ஆயர் பாடியிலுள்ள மக்கள் விருப்பத்திற்குரிய பறையைக் குறிக்காமல்,

''எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தனோடு
உற்றோமே யாவோம்.

என்றுரைத்த பறையை இங்கே சுட்டினார். 'அங்கு' என்று கூறியது ஆயர்பாடியையே யாகும், ஆயர்பாடியிலே இப்பறையை வேண்டி எம்பெருமானிடம் பெறுதலைக் குறித்தார். அப்பறை கொண்ட ஆற்றை என்பதில் பறைக்கு முன்புள்ள அகரச் சுட்டு ஆற்றை என்பதன்முன் வைத்துக் கூட்டி உரைக்கபடவேண்டும்.

பொன்னும் முத்தும் மாணிக்கமும் இணைத்துச் செய்யப்பட்ட ஆபரணத்தைப் போல, கோதையும், பெரியாழ்வாரும் வட பெருங் கோயிலானும் சேர்ந்த நாடானதால் அணி புதுவை என்று சிறப்பித்துக் கூறியது பொருந்துவதாகும். பைங் கமலத்தின் தெரியல்'' என்றது தம் ஆசிரியருக்குத் தாமரை மாலை சூட்டிப் பெருமை செய்யப் பெற்றார் என உணர்த்தப் பட்டது.

செந்தண்மை பூண்டொழுகியதால் இவரை 'பட்டர் பிரான்' என்றார். பிறர்க்குதவும் அறநெறியாளர்

ஆதலால் இவ்வாறு கூறப் பெற்றார். 'பட்டர்' என்னும் சொல், பரம்பொருளைக் குறிக்கும் ஆதலால், ''மறை நான்கு முன்னோதிய பட்டனை'' என்று திருமங்கை யாழ்வார் பாடினார். வேதம் தோன்றுவதற்கு முன்பே வேதத்தை அறிந்தவன் அருளாளன்; எனவே, அவனைப் ''பட்டன்'' என்று பாடினார் திருமங்கை மன்னர். எம் பெருமானைப் போன்று வேதத்தை நன்கறிந்திருந்த காரணத்தால்விட்ணுசித்தரைப்'பட்டர்'என்றார்கோதை. 'கோதா' என்று கூறும் வடசொல் விகாரம் கோதை எனத்தமிழ் நெறியில் பெயர் பெற்றவர். அவர் சிறந்த அறநூல்களைப் படைத்தவர் என அவர் தம் தமிழ்ப் பெயர் உணர்த்தும்.

''சொன்ன'' என்றதில் கோபியர்கள் தம் விருப்பத்தினை வெளிப்படுத்தினார்கள் என்பதை அறிவித்தது. ''சங்கத் தமிழ் மாலை'' என்றதில் இப்பாசுரங்கள் சங்க இலக்கியங்களில் பயின்று, வரும் செய்திகளைப் பெய்து பாடப் பெற்றன என்பதைக் குறித்தார். இதை அனைவருமே அனுபவிக்க வேண்டிய நற்றமிழ்ச் சித்திர மாலையால் பற்றுக் கொண்டு பாடுதல் மாட்சியாகும். ''சங்கத் தமிழ் மாலை'' ஆம் சங்க நூற்கருத்து களைப் பெய்து தங்கத்தமிழ் மாலையாக்கி வங்கக் கடல் கடைந்த மாதவனுக்குச் சூட்டி மகிழ்கின்றார் கோதை எனக்கொள்ள வேண்டும்.

''தப்பாமே''—என்றதில், ஒரு பாட்டையும் விடாமல் பாடுதல் வேண்டும் என்றார். இது சங்கத்தமிழால் செய்யப்பெற்ற விலைமதிக்க முடியாத மாணிக்கமாதலால் தப்பாமல் பாடுங்கள் என்றார். நூற்றெட்டு மந்திரங்களில் ஒன்றை மறந்து சொன்னால் எம்பெருமான் ஏற்க மாட்டான் அதைப் போலவே இந்தச் செந்தமிழ் மாலைகளில் ஒன்றையும் விடாமல் சொல்லப் பணிக்கின்றார்.

''இப்பரிசுரைப்பார்'' என்றதில், திருவாய்ப் பாடியில் எம்பெருமான் தோன்றினான். தோன்றியவனின் திருவருள் அவ்வாய்ப்பாடியிலுள்ள எல்லாருக்கும் கிட்டியது: அவர்கள் அவனைப் பெற்றதற்கு அவர்கள் செய்த தவம்; தவப்பயனால் அவனைப் பெற்றவர்கள் அவனோடு ஒன்றி உவப் பெய்தினார்கள்; பயன் கண்டார்கள்.

பிற்காலத்தில் இந்த அற்புத நிலையை உணர்ந்தவர் கோதை; உணர்ந்தவாறு திருப்பாவையென்னும் சங்கத் தமிழ்மாலையைப் பாடி அருளாளனுடன் ஒன்றி நின்று அவனையே நாயகனாக அனுபவித்தார். இவர் அனுப வித்த நெறியில் இவரைப் போன்று பேறு பெற எண்ணு பவர்கள் இப்பாசுரங்களைத் தப்பாமல் பாடினால் ஒப்பிலாதிலங்கும் அப்பனுடன் கூடி நிற்கவியலும் என்று மேற் குறித்த தொடர் மொழி அறிவிக்கின்றது.

எனவே, இப்பாசுரத்தால் இப்பிரபந்தம் பாடு வோர்க்கு நற்பயன் அவனால் கிட்டும் என்று பயன் கூறி முடிக்கப் பெற்றதாகும். இப்பிரபந்தத்தின் பயனை எடுத்துக் காட்டிய இந்தப்பாசுரம் எம்பெருமானின் திருநாமப்பாசுரம் என்றும், மறை நூல்களின் அறச்செய்தி களென்றும் கூறப்படும். இப்பாசுரம், கோதையாரைப் பிறர்போலக் கூறுகிறது. இஃதொரு கவிமரபாதலால் தற்புகழ்ச்சியாகாது; தற்சிறப்புப்பாயிரம் எனப்படும்.

''வங்கம்'' என்றது மரக்கலத்தைக் குறிக்கும் என்றா லும், பாற்கடலில் மரக்கலம் இருத்தல் பொருந்தாமை யால், ''வங்கம்'' என்றதற்கு 'அலை' என்று பொருள் கொள்வதே சிறப்பு. அவ்வலையும் கடலைக் கடைந்ததால் ஏற்பட்டது.

மேலும் பாற்கடலைக் கடைந்த வரலாற்றுப்படி, ஆன்றோர்களால் கூறப்படுகின்ற தத்துவத்தின்படி, எப்போதும் சலிப்புடன் வெறுப்புடன் இருக்கின்ற

மனமாகிய கடலை, அறிவு என்னும் மந்தர மலையால் கடைந்து, அமுதமென்னும் ஞானத்தை வெளிப்படுத்துதல் என்றே கொள்ளுதல் சால்பு. இதனால் அலை என்ற பொருள் பொருத்தமுடையதாகும்.

''மாதவன்'' என்றது, திருமகள் கேள்வனைக் குறித்தது. இதில் கடலைக் கடைந்து திருமகளைப் பெற்றான் என்பது காட்டப் பெற்றது. ''தண்தெரியல்'' என்றதைப் பட்டர் பிரானுக்குக் கூட்டிப் பொருள் காண்பது ஒன்று; ஆயினும் ஆண்மகனாக இருந்த ஆழ்வார் மாலை அணிந்தவர் என்பதைவிட பெண்ணான கோதை அணிந்தார் என்று கூறுவதே பொருந்தும். தாமே மாலையைச் சூடிக் கொடுத்தவருக்கு, எம்பெருமானே மாலையிட்டு வரித்துக் கொண்டான் என்பதால் தண்தெரியல் கோதை என்று சேர்த்துப் பொருள் கூறப்பெற்றதை அறிதல் சிறப்பு.

## பாவையில் இலக்கியச் செய்திகள்

'திருமால் அருள் இல்லையாயின் ஒருவர் வீடுப் பேற்றை எய்துதல் அறிது.' என்றதனால், பிறநெறி முறைகள் நேரே வீட்டுலகம் எய்துவதற்குரிய வழியாகா. ஆதால் திருமாலின் திருவருளே சிறந்த உபாயமாக வைணவ நெறி குறிக்கின்றது.

''கார்ப்பருவம் தோன்றும் போது பெரிய கரியமேகம் இரண்டு பககங்களிலும் சூரிய சந்திரர்களைப் பெற்றிருத்தல் போல, சக்கரத்தையும் சங்கையும், ஏந்திய திருக்கரங்களுடன் இலங்கும் எம்பெருமானே நின் திருமார்பைத் தொழுபவர்களுக்கு நினக்குரியதாய நீ விரும்பி நின்ற வைகுந்தம் உரியதாகின்றது'' என்று

''பருவம் வாய்த்தலின் இருவிசும் பணிந்த
இருவேறு மண்டிலத் திலக்கம் போல

நேமியும் வளையும் ஏந்திய கையாற்
கருவி மின்னவிர் இலங்கும் பொலம்பூண்
அருவி யுருவின் ஆரமோ டணிந்தநின்
திருவரை அகலந் தொழுவோர்க்கு
உரிதமர் துறக்கமும் உரிமை நன்குடைத்து''

என்று பதிமூன்றாம் பரிபாடல் தெரிவிக்கின்றது. அனைத்தையும் செய்கின்ற எம்பிரானை நினைக்கின்றவர்களுக்கே துறக்கமாகிய வீட்டுலகம் கிட்டும். அதுவும் அவன் திருவடியே அத்துறக்கத்தை அருளவல்லது என்றார்அவர். அவர் கருத்தை

........................... ''திருமாலால்
எங்குந் திருவருள் பெற்றின் புறுவர்''

என்று, கோதை இயம்புகின்றார், திருமால் சீர்த்தியினைச் செப்புகின்றவர்கள், அவன் திருவடியைத் தொழுகின்றவர்கள் உவப்புக்கொள்ளும் வகையில் அவன் இனிது வந்து அருள் சொரிவான். அவன் அருளைப் பெற்றவர்கள் இன்புறுவார்கள் என்று விளம்புகின்றார். திருமாலின் சீர்மை பொருந்திய திருவடியை,

''மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசேவடிசேப்பத் தம்பியொடு கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை
கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே!
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே!

என்று இளங்கோவடிகள் புகழ்ந்து பாடுவார். வாய் படைத்தவர்கள் அவனைப் பாடவும், கண்படைத்தவர்கள் அவனைக் காணவும், செவிபடைத்தவர்கள் அவன் புகழைக் கேட்கவும், தலை படைத்தவர்கள் அவனை வணங்கவும், கை படைத்தவர்கள் அவனைத் தொழவும்

வேண்டும். அப்படிச் செய்யாதவர்களின் பொறிப்புலன்கள் நெறியற்றன. பயனற்றன என்று இளங்கோவடிகள் கூறுவார். எனவே, கோதைத்தாயார் திருமாலின் சீர்த்தியைப் பேசுவோர்கள் என்றும்

''எங்கும் திருவருள் பெற்றின்புறுவர்''

என்றார். கேசவன் என்றதிருநாமமே எம்பெருமான் பெற்ற திருநாமங்களில்சிறப்புடையது. இத்திருநாமத்தைக் கடுவன் இளவெயினனார் மூன்றாம் பரிபாடலில் 31, 32ஆம் அடிகளில்

''கூந்தல் என்னும் பெயரோடு கூந்தல்
எரிசினங் கொன்றோய்! நின்புகழ் உருவினகை''

என்று பாடுவதால், 'கூந்தல் மாவாகிய குதிரை எனும் உருவத்தோடு வந்துபோர் புரிந்தகேசியென்னும்அசுரனை, அவனது எரிகின்ற நெருப்பினையொத்த சினத்தோடு கொன்றொழித்தவனே! நின்புகழ் எண்ணுதற் கடங்காதவை.' என்று கூறுகின்றார். கேசி என்னும் இக்கொடியவனை அழித்ததால் எம்பெருமான் கேசவன் என்னும் திருநாமத்தைப் பெற்றான்.

இந்த விந்தைக்குரிய கேசவனை, அவன் ஆற்றலை,

''மேவார் விடுத்தந்த கூந்தற்குதிரையை
வாய்பகுத் திட்டு''

என்று கலித்தொகை கவினுறப் பேசுகிறது.

''கேசவனாய் நின்று கீழ்த்திசையிலும் நெற்றியிலும்
தேசுடை ஆழிகள் நான்குடன் செம்பசும் பொன் மலைபோல்
வாசி மிகுந்தெனை மங்காமற் காக்கும் மறையதனால்
ஆசை மிகுந்த அயன்மக வேதியில் அற்புதனே!

என்று தேசிகமாலை, கேசவனின் ஆச்சரியத்தை உண்டாக்கும்அந்தத் திருநாமத்தை அழகோவியமாகக் கூறுகின்றது.

கேசவனின் கீர்த்தியினை இவ்வாறு நேர்த்தியுறக் காட்டினார்கள். மாதவன் எத்தகையவன்? அவன் கருமா முகில் கோலம் நெஞ்சத்து இருத்தும் கருத்து எய்துமேல் அருமாதவன் தானும் அவன், முத்தித் தருகைக்கும் அவனே குரு. அவனே, மருமாலை புனைகின்ற திருமாலை அல்லாது வல்லார்கள் யார்? என்பதால் நெஞ்சத்தில் கருத்தைப் புகுத்தும் மாதவனே முத்திக்கும் குரு அவனே! அவனேதான் வல்லமை பெற்ற திருமால்; அனைத்தும்நல்கும் பெருமான்என்பதை,

வில்லிபுத்தூர் ஆழ்வார் பாரதத்தில் ஐந்தாம் போர்ச் சருக்கத்தில் காப்புச் செய்யுளாக,

கருமா முகில் கோலம் நெஞ்சத்து
இருத்தும் கருத்து எய்துமேல்
அருமா தவன்தானும் அவன்;முத்தி
தருகைக்கும் அவனே குரு;
தருமாலை மணம் நாறும் தாளானை
வண்டேறும் தண்அம் துழாய்
மருமாலை புனைகின்ற திருமாலை
அல்லாது வல்லார்கள் யார்?

என்று பாடுகின்றார். இதில் திருமாலின் வடிவத்தினை ஒருகால் தியானிப்பவர், அரும்பெரும் தவம் ஆற்றியவரும் தன்னை அடைந்தவர்களுக்கு முத்தி தரவல்ல ஆசிரியரும் ஆவார். ஆதலால் திருமாலை யொழிய வேறு சிறந்த கடவுள் இல்லை என்றார். இவரே பதினாறாம் போர்ச் சருக்கக் காப்புச் செய்யுளில்,

மாதுலன் ஆகியும் ஏதிலன் ஆகிய
வஞ்சன் கஞ்சன் வரவிட்ட
பூதனை தன்னுயிர் முலைபொழி பாலொடு
போதர உண்ட புயல்வண்ணா!

மாதவ, யாதவ, வாசவ, கேசவ,
மாயா ஆயா மதுசூதா!
ஆதியும் அந்தமும் ஆகிய நின்புகழ்
அல்லாது உரையேன் அடியேனே!''

என்று பாடி, கஞ்சன் அனுப்பிய பூதனை நஞ்சூட்டிய முலைப் பாலுடன் அவள் உயிரையும் உண்டவனே! ''மாதவ, யாதவ, வாசவ, கேசவ, மாயா, ஆயா, மதுசூதா'' என்று அவன் திருநாமங்களைக் கூறியவர் அடியேன் உன்புகழை அல்லாது வேறொன்றையும் மொழி கிலேன் என்றார். இக்கருத்தை,

''வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனை
..................................
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள் பெற்றின்புறுவர்''

என்று பாடுகின்றார். இப்படிப் பாடியவர் கருத்தையே விளக்கிக் கூறும் வகையில் வில்லிபுத்தூர் ஆழ்வார் பாடித் தெரிவித்தார். செம்பொருளான எம்பெருமானை, என்னை உய்யக் கொண்டு போகிய அன்றைக்கே அன்று என்னைத் தனதாக்கிய ஐயனைப் பற்றி,

''என்றைக்கும் என்னை உய்யக்கொண்டு போகிய
அன்றைக்கு அன்று என்னைத் தனதாக்கி என்னால் தன்னை
இன்தமிழ் பாடிய ஈசனை ஆதியாய்
நின்றஎன் சோதியை என் சொல்லி நிற்பனோ!''

என்று திருவாய் மொழியில் பாடுகின்றார். இதில், 'என்னைத் தனதாக்கி என்னால் தன்னை இன்தமிழ் பாடிய ஈசனை' என்று கூறுகின்றார். எம்பெருமான் இன் தமிழை விரும்புபவன் ஆதலால் என்னை அத்தமிழைப்பாட வைத்தான் என்று நவில்கின்றார். தமிழைக் கேட்க விழை

பவன் தயாபரன் என்று நம்மாழ்வார் கூறுதல் போன்று கோதை, இப்பாவைப் பாட்டில்,

'சங்கத் தமிழ் மாலை' என்று கூறி, அதைப் பாடினால் அவன் விழைந்து பரிசளிப்பான் என்றார். அமிழ்தம் அருளிய ஆராவமுதனுக்கு, 'தமிழே அமிழ்தமானதால், அதைக் கொண்டு அவனைப் பாடுவோர்க்கு வேண்டுவதை உவந்தளிப்பான் என்று,

''சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே
இங்கிப் பரிசுரைப்பார் ஈரிரண்டு மால்வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள் பெற்றின் புறுவர்''

என்று பாடுகின்றார். நம்மாழ்வார், 'இன்தமிழ் பாடிய தால் இன்னமுதன் இன்புற்றான்' என்றார். சங்கத் தமிழ் பாடியதால், 'செங்கண்மால் மகிழ்வுற்றான்' என்றார் கோதை. இச்சங்கத் தமிழான, முப்பதையும் பாடினால் செங்கண்மால் விருப்புற்றுப் பாடுவார் முன் தோன்றித் திருவருளைத் தந்து இன்புறுமாறு செய்வான் என்று, சங்கத்தமிழ் மாட்சியினைப் போற்ற நமக்கு உணர்த்து கின்றார்.

விழியனைய மொழி மீது காதல் கொண்டு சங்கத் தமிழைப் பாடிச் செங்கண்மாலைக் கைப்பிடித்த கோதைப் பிராட்டியின் பாதையிலே சென்று அனைத்திற்கும் ஆதாரமாயுள்ள தயாபரனைப் பாடி உயர்வை அடைவோமாக!

# ஆய்ச்சியாய் மாறிய ஆண்டாள்!

நாய்ச்சியார் என்னும் நயமார் திருமொழியை
ஆய்ச்சியாய்ப் பாடிய ஆண்டாளே—பேய்ச்சியைக்
கொன்ற பெருமானைக் கொஞ்சும் தமிழாலே
இன்பமுடன் கைப்பிடித்தார் ஏத்து.

—கவியமுதனார்.

நாய்ச்சியார் திருமொழியைப் பாடியவர் ஆண்டாள். அந்தணர் குலத்தில் தோன்றிய அவர் ஆய்ச்சியராகி ஆயனான கண்ணனை அடையப் பாடியருளியதே இந்நாய்ச்சியார் திருமொழி; பேய்ச்சியின் நஞ்சுண்டு அவள் மூச்சினையும் உண்டு வீழ்த்திய வீரராகவனைக் கொஞ்சும் தமிழாலே போற்றியஆண்டாளை ஏத்துமாறு மேற்குறித்த வெண்பாவில் கூறுகின்றார் கவியமுதனார்.

திருப்பாவையில் நோன்பு நோற்று நலங்காண முனைந்தார் கோதை. மார்கழித் திங்களில் கண்ணனை அடையாததால், தை, மாசி, பங்குனி ஆகிய திங்கள் வரை தம் முயற்சியில் தளர்ச்சியின்றிச் செயற்பட்டார். வெற்றிகாண உறுதியுடன் நின்றார்.

மதி நிறைந்த மார்கழி மாதத்தில், திருப்பாவையைப் பாடிய அவர், மேற்சொன்ன மூன்று திங்கள்களில் நாய்ச்சியார் திருமொழியை நாவார இசைத்தார் கோதை. திருப்பாவை முப்பது பாசுரங்கள் என்றால்,

நாய்ச்சியார் திருமொழி ஒரு நூற்று நாற்பத்து மூன்றாகும். எனவே, ஆராவமுதனை அடைய நூற்று எழுபத்து மூன்று பாசுரங்களை அவர் மனம் உருகி இசைத்தார்.

இந்த 'நாய்ச்சியார் திருமொழி' முழுக்க முழுக்க அகத்துறை இலக்கண நெறியில் பாடப் பெற்றதாகும். இறைவனைத் தலைவனாக வைத்துத் தம்மைத் தலைவியர்களாக அமைத்து, நம்மாழ்வாரும் திருமங்கை யாழ்வாரும் பாடியுள்ளார்கள். இறைவனோடு கலக்க இந்த வழி முறைமிக இனியதென, எளியதெனக் கருதிய தால், இந்நெறியில் நின்று பாடி அவனை நாடி இணைந் தார்கள்.

இவர்களைப் போன்றே கோதைப் பிராட்டியும் பாடினார். ஆடவர்களான நம்மாழ்வாரும் திருமங்கை யாழ்வாரும் பெண்ணாக எண்ணித் தம் காதல் வேட்கை யினைஅறிவித்த நிலை மேட்டு மடையாகும்; பெண்ணா கவேஇருந்த ஆண்டாள் இறைவன் மீதுகொண்ட காதலின் நிலை பள்ள மடையாகும்.

இத்தகைய நிலையில் இருந்து உருகிப் பாடியதாலே எம்பெருமானை எளிதில் அடைந்ததாகச் சான்றோர்கள் இயம்பியுள்ளார்கள். கண்ண பெருமான் என்கின்ற கொழு கொம்பிலே ஒரு கொடியாகப் பற்றிப் படர முனைந்தார் கோதை.

சங்க இலக்கியங்களில் தலைவன் தலைவி ஆகியவர் களின் விரகதாபங்கள் அருமையாகப் பேசப் பெறுகின்றன. தலைவனின் பிரிவாற்றாமையைத் தாங்கிக் கொள்ள இயலாத தலைவி, தோழியிடம் தன் ஆற்றாமையை வெளிப்படுத்தும் செய்திகளையெல்லாம் அவற்றில் அழகோவியமாகத் தீட்டிக் காட்டப்பெற்றுள்ளன.

அந்த வகையில் கோதையார் கண்ணன்மீது தாம் கொண்ட காதல் நிலையை வெளிப்படுத்துகின்றார். இந்தச் செய்தியினைப் படிப்பவர்தம் நெஞ்சில் பிடிப்பாக நிற்கக் கொஞ்சும் தமிழில் குலவிடப் பாடுகின்றார்,

தம் காதல் கனிந்து நலமளிக்க, துணை புரிய, காமதேவன் என்பனிடம் முறையிடுகின்றார் ஆண்டாள்.

அவனிடம் சென்று, "காமதேவனே! தைமாதம் முழுவதும் இங்கே நீ எழுந்தருள வேண்டுமென்று இடத்தைச் சோதித்தேன். அந்த இடத்தில் மண்டல பூசைக்காகக் குளிர்ந்த அழகிய பொருள்களைக் கொண்டு அலங்காரம் செய்து வைத்தேன். மாசி மாதத்தின் முதற் பகுதியில், அழகிய சிறிய மணல்களினால் தெருவை யெல்லாம் அலங்கரித்து வைத்தேன். இப்படிச் செய்து வைத்த நான் உன்னைத் தொழுவதால் பயன் காணலாம் என்றே எண்ணினேன். ஆதலால் உன்னையும் உன் தம்பியான சாமனையும் வணங்குகின்றேன். எனக்கு உதவிபுரிய உங்களை வேண்டுகின்றேன். மிகவேகமாக நெருப்புப் பொறிகளை வெளிப்படுத்துகின்ற சக்கரத்தினைத் திருக்கையில் கொண்டு அழகுடன் திகழும் திருவேங்கடமுடையானிடம் என்னைச் சேர்ப்பிக்க வேண்டுகின்றேன்" என்று.

"தையொரு திங்களும் தரைவிளக்கித்
தண்மண்ட லம்மிட்டு மாசிமுன்னாள்
ஐய நுண் மணற்கொண்டு தெருவணிந்து
அழகினுக் கலங்கரித்து அணங்கதேவன்
உய்யுமாங் கொலோ? என்று சொல்லி
உன்னையும் உம்பியையும் தொழுதேன்
வெய்யதோர் தழல்உமிழ் சக்கரக்கை
வேங்கட வற்கென்னை விதிக்கிற்றியே!"

எனப்பாடுகின்றார்.

காம வேளிடம் ''நீதான் என்னைத் திருவேங்கட முடையானிடம் சேர்ப்பிக்கின்ற பாலமாகும். இன்று வந்து என்னை அவனிடம் சேர்ப்பிக்கவேண்டு''மென்று இப்பாசுரத்தின் மூலம் கேட்கின்றார் கோதை. ஐந்தாம் பாசுரத்தில், மன்மதனிடம், நீ என் நிலையை அறிந்து கொள்ளுதல் வேண்டும். என்றார்.

சுவர்க்க லோகத்தில் வாழும் மிக அழகு வாய்ந்த தேவர்களுக்காக நான்மறையாளர்கள் வேள்வியின் மூலமாகக் கொடுத்த அவிர்ப் பாகத்தைக் காட்டிலே திரிகின்ற நரியானது வந்து கடந்தும் மோந்தும் பார்த்த தால் அதுகெட்டுவிட்டதைப் போன்று நான் பிறருக்கு வாழ்க்கைபடின் கெட்டொழிவேன்! தன் திருமேனியில் ஆழியாகிய சக்கரத்தையும் வலம்புரியாகிய சங்கையும் கொண்டிலங்கும் புருடோத்தமனுக்காக இலங்கும் என் பருத்த மார்பகங்கள், அந்தப் புருடோத்தமனை யொழிய, மனிதர்களுக்காகப் பேசப்படுமேயானால் நான் உயிர் வாழாமல் கெட்டொழிவேன். ஆம், அவிர்ப்பாகத்தை நரி கெடுத்ததைப் போன்று கெட்டொழிவேன் என்றார்.

என்னை மனிதர்களுக்குத் திருமணம் செய்து வைப்ப தாகக் கேள்வி பட்டாலோ அன்றே கெட்டொழிவேன்; உயிர் வாழ மாட்டேன்'' என்று தம் உறுதியைக் கூறி னார். நான் எம்பெருமானின் சொத்து; அவனையன்றி வேறொருவருக்கும் உரிமையாக மாட்டேன் என்று திட்டமாகப் பேசும் கோதைப்பிராட்டி,

''வானிடை வாழும்அவ் வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்த அவி
கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப

ஊனிடை யாழிசங்கு உத்தமர்க்கென்று
உன்னித் தெழுந்த என் தடமுலைகள்
மானிடவர்க்கு என்று பேச்சுப்படில்
வாழகில்லேன் கண்டாய் மன்மதனே.''

என்று இவ்வாறு மன்மதனிடம் கூறுகின்றார்.

இப்பாசுரத்தில் தாம் எடுத்த முடிவின் உறுதியைத் தெளிவாகக் கூறுகின்றார். ''அந்த முடிவிலிருந்து என்னை மாற்ற நினைத்தால் நான் உயிர் வாழமாட்டேன்'' என்று தெரிவிக்கின்றார். அவர் முடிவை மாற்றுபவர் யார்? தம்மை அன்பாகப் பேணிக்காத்த தந்தை பெரியாழ்வாராக இருக்கக் கூடும் என்று ஆண்டாள் எண்ணியிருக்க வேண்டும். ஆதலால், தேவர்களுக்காக இட்ட அவிர்ப்பாகத்தை நரி கடந்தும் மோந்தும் கெடுத்து விட்டதைப் போல என்னுடைய கொங்கை மானிடர்க்கு என்று எவரேனும் சொன்னால் என்னை நானே கெடுத்துக் கொள்வேன்; உயிர்வாழமாட்டேன் என்று.

உன்னித் தெழுந்தஎன் தடமுலைகள்
மானிடர்க் கென்று பேச்சுப் படில்
வாழகில்லேன் கண்டாய்''

எனப்பாடித் தெரிவிக்கின்றார்,

காமவேளிடம் முறையிடும் வகையில் பத்துப் பாசுரங்களைப் பாடிய கோதை, ஒன்பதாம் பாசுரத்தில், 'நீ என்னைக் கண்ணபெருமானிடம் சேர்க்காமல் போனால் துரோகம் செய்தவனாவாய்' என்று மன்மதனைக் கண்டு கூறுகின்றார். இக்கருத்தினை,

''தொழுதுமுப் போதும் உன் அடிவணங்கித்
தூமலர் தூய்த்தொழுது ஏத்துகின்றேன்
பழுதின்றிப் பார்க்கடல் வண்ணனுக்கே
பணிசெய்து வாழப் பெறாவிடில்நான்

அழுதழுது அலமந்து அம்மாவழங்க
ஆற்றவும் அதுஉனக்கு உறைக்குங்கண்டாய்
உழுவதோர் எருத்தினை நுகங்கொடு பாய்ந்து
ஊட்டமின்றித் துரந்தால் ஒக்குமே!

என்று பாடுகின்றார். ஒரு நாளை மூன்று பொழுதாகப் பிரிக்கப் பெற்றுள்ளது; அந்த மூன்று காலங்களிலும் எம்பெருமானின் அடிகளில் தூயமலர்களைக் கொண்டு பூசிக்கின்றேன். கடலைப் போன்ற நிறத்தையுடைய கண்ண பெருமானுக்குத் தொண்டு செய்யும் நான், அவனோடு சேர்ந்து வாழாமல் போனால், பலகாலம் அழுதழுது அம்மா! அம்மா! என்று கதறித் திரிவேன். இந்த நிலையில் ஆளாகப் படவிருக்கும் என்னை அந்தப் பரம்பொருளோடு மன்மதனே நீ சேர்க்காமல் போனால்.

ஏர்உழவன் தன் உழவுக்குப் பயன் படுத்திக் கொண்ட எருதுகளுக்கு உணவு கொடுக்காமல் வயிறு ஒட்டிப் போகுமாறு செய்து விடுபவன் அதன் கழுத்தில் நுகத்தடி கொண்டு அடித்துத் துன்புறுத்தும் நிலைக்கு ஒப்புடைய தாகும் அன்றோ? என்று கோபம் மேலிடப் பேசுகின்றார். பிரிந்திருக்கும் என்னை அவனோடு சேர்க்கவில்லை யென்றால் மன்மதனே நீ பழிக்காளாவாய் என்று எச்சரிக் கின்றார்.

காமனால்தான் பிரிந்தவர்களைச் சேர்த்து வைக்க இயலும் என்று, சங்க இலக்கியங்கள் சாற்றுகின்றன. இக்கருத்தைச் சீவகச் சிந்தாமணி ஆசிரியரும் கூறக் காணலாம். சுரமஞ்சரி, சீவகனிடம் தன்னைச் சேர்த்து வைக்க மன்மதனிடம் முறையிடுகின்றார் இதை,

''தாமரை செங்கட் செவ்வாய்
தமனிய குழையி னாயோர்
காமிங்கு டையேன் காளைச்
சீவகன் அகலஞ் சேர்த்தின்

மாமணி மகரம் அம்பு
வன்சிலை கரும்பு மான்தேர்
பூமலி மார்ப வீவல்
ஊரொடு பொலிய வென்றாள்''

என்று இசைக்கின்றார்.

இதில் 'தாமரை மலர் போன்ற செம்மையான கண்ணும் வாயும் உடைய மன்மதனே! நீ மான்கள் பூட்டப் பெற்ற தேரிலே மகரக்கொடிபறக்க, கரும்புவில்லில் மலர் அம்பைத் தொடுத்து அதை ஏந்திக்கொண்டு, ஊரில் உள்ள வர்கள் போற்றப் பூமாலை உன் மார்பில் பொலிய வருகின்றாய்; அப்படி வருகின்ற நீ! என்னைச் சீவகனிடம் சேர்ப்பிப்பாயாக!' என்று சுரமஞ்சரி கூறுகின்றாள். இதில்.

மானிடர்கள் உடல் உறவு கொள்ள விழையும் தன்மையைச் சீவகச் சிந்தாமணி ஆசிரியர் மேற் குறித்த பாடலில் காட்டியுள்ளார். ஆனால், ஆண்டாள் கொண்ட காதலோ இத்தகையதன்று. அவர், எம் பெருமானோடு இரண்டறக்கலக்கவே விழைந்தார். எனவே, ஆண்டாள் கொண்ட காதல் தெய்வீகக் காதலாகும். இந்த உணர் வோடு வெளிப்பட்டதே அவரின் பாசுரமாகும்.

எம்பெருமான், தாம் கட்டிய சிற்றில்தனைச் சிதைத்த தாகவும், சேலையை மறைத்து வைத்து வருத்தியதாகவும் பாடித் தெரிவிக்கின்றார். அம்மாயப் பிரானோடு சேர்ந் திலங்கக் கூடல் இழைத்தும் குயிலைக் கூவுமாறு செய்வித்தும்; கனாவினைக் கண்டும், வெண்சங்கை ஊதியும் அவனை அழைக்குமாறும் பாடியதோடு நிற்காமல், மேலும்

மேகத்தைத்தூதுவிடுத்தும். பூக்களிடம், சோலையிடம், காந்தள் மலரிடம், தோழிமார்களிடம் தனக்கு வேண்டிய வர்களிடமெல்லாம் கூறித் தமக்கு உதவி செய்யுமாறு

இயம்புகின்றார். இப்படியெல்லாம் கூறித் தமக்கு உதவி செய்யவேண்டிக்கொண்ட ஆண்டாள், இறுதியாகப் பிருந்தாவனத்திடையே கண்ணபெருமானைக்காணும் வாய்ப்பினைப் பெறுகின்றார்.

பலரின் உதவியை எதிர்பார்த்த கோதை, அவர்களால் பயன் கிட்டப்பெறாமையால், அவனைத் தேடிச் செல்கின்றார். அப்படித்தேடிக் கொண்டு போகும் வழியில் வருபவர்களைக் கேட்கின்றார். அவர்கள் பிருந்தாவனத்தில் கண்டதாகக் கூறுகின்றார்கள். அவர்கள் உரைத்தபடி பிருந்தாவனத்தை நோக்கி விரைகின்றார். அப்போது கண்ண பெருமானிடம் நேரில் கண்டு பேசுவதைப் போலச் சிலவற்றைக் கூறுகின்றார். முன்பு ஒருகாலத்தில், சிசுபாலன் உருக்மிணிப் பிராட்டியை வஞ்சித்துக் கவர்ந்து செல்ல எத்தனித்த போது, மாயவனே, நீபூஞ்சோலையின் மறைவில் நின்று உன்னுடைய பாஞ்ச சன்னியம் என்னும் சங்கை எடுத்து அதிர ஒலித்து அந்தக் கயவனிடமிருந்து உருக்மிணிப்பிராட்டியைக் காத்ததைப் போன்று என்னைக் காப்பாயாக! என்றார்.

அசோக வனத்தில் சனகரின் தலையென்று மாயா சிரசினைக் காட்டி, சீதாப் பிராட்டியை மயக்க எத்தனித்தபோது உன்னுடைய சார்ங்கம் என்னும் வில்லின் ஓசையை எழுப்பி, அஞ்சி நடுங்குமாறு செய்து, இராவணனிடம் இருந்து சீதாப்பிராட்டியை மீட்டதைப் போன்று, என்னையும் உன்னிடம் மீட்டுக் கொள்வாயாக என வேண்டுகின்றார்.

உறுதிப்பாட்டுடன் அவனைப் பெற நினைந்த கோதைப் பிராட்டி, பங்குனித் திங்கள் வரை வழிபாடு நிகழ்த்துகின்றார். பற்றற்றான் பற்றினைப் பற்ற மற்றப் பற்றினைத் துறந்து விடுகின்றார்.

''இருள் சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு''

என்று பொய்யில் புலவர் கூறுவதைப் போன்று, இருளைக் கொடுக்கும் இரண்டு வினைகளால் உண்டாகும் பயன் களுக்கு ஆட்படாமல், இறைவனாகிய பொருளில் சேர்ந்து புகழில் பொலியவே நின்றார் கோதை. பொருளாகிய கண்ண பெருமானோடு கலக்கவே முனைந் தார். மற்றப் புகழைக் காட்டிலும் அவன் புகழ் பாடுவதே பெருமையாகக் கருதினார்.

அவனைப் பெற உவப்புடன் நின்ற கோதைக்குப் பிருந்தாவனத்தில் அவன் காட்சியளிக்கின்றான். சித்தரை யில் செல்வ மழை பொழிந்து இத்தரையை ஏற்றம் பெறச் செய்வதைப்போன்று, சித்திரையில் அத்தனான கண்ணன் வந்து பிருந்தாவனத்தில் கோதையாரின் வேதனையைத் தீர்க்கக் காட்சியளித்தான் என்ற விவரத்தை,

''பருந்தாள் களிற்றுக்கு அருள்செய்த
பரமன் தன்னைப் பாரின்மேல்
விருந்தா வனத்தே கண்டமை
விட்டு சித்தன் கோதைசொல்
மருந்தாம் என்று தம்மனத்தே
வைத்துக் கொண்டு வாழ்வார்கள்
பெருந்தாள் உடைய பிரான்அடிக்கீழ்ப்
பிரியா தென்றும் இருப்பாரே''!

என்று பாடி நாய்ச்சியார் திருமொழியை முடிக்கின்றார். இதில் பருத்த கால்களுடைய கசேந்திர ஆழ்வானுக்கு அருள் சொரிந்ததைப் போன்றே அப்பெருமாயன் இந்த மண்ணிலே பிருந்தாவனத்திலே எனக்கு அருளைப் புரிந்தான். அப்படிப் புரிந்தவனைப் பற்றி ஒப்பில்லா

இத்திருமொழியைப் பெரியாழ்வார் மகளான நான் இசைத்தேன். ஆண்டாளாகிய யான் இசைத்த திருமொழி யான செந்தமிழ், பிறவிப் பிணியைப் போக்கும் மருந்தாகும். இந்தப் பிரபந்தத்தை உங்கள் சிந்தையிலே வைத்து இசைத்து வந்தால், பெருமையுடைய அவனின் அழகிய திருவடியின் கீழ் எப்போதும் நிலைத்து நின்று பிரியாமல் பெருமையுற்றுப் பிறங்குவீர்கள் என்று கூறுகின்றார்.

இத்திருமொழியைப் பாடுவோர்க்கு மேன்மைகிட்டு மென்று கூறி முடிக்கின்றார், 'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற உணர்வோடு பாடி, பயன்கூறி முடிக்கின்றார்.

உலகையெல்லாம் தன் கட்டுப்பாட்டில் நிற்க வைத்து, ஆண்டுவரும் அருளாளனை, தம் இனிய செந்தமிழ்ப் பாசுரங்களில் கட்டுண்டு நிற்கப் பாடி, ஆண்டு கொண்ட தால் 'ஆண்டாள்' என்னும் காரணப் பெயரைப் பெற்ற 'கோதை', பூதலம் புரக்க வந்த புனிதவதியாகும் என்று கூறுதல் சிறப்பு,

தம் வாய் மணக்கப் பாடிய நாய்ச்சியார் திருமொழி யும் திருப்பாவையும் நம் இரு கண்களாகப் போற்றுதற் குரியனவாகும். உயிரும் உயிர்ப்பும் போல மேலானவை யாகும். பரந்தாமனை உருக்கமாய்ப் பாடிப் பற்றுவதற்கு அவை உற்ற கருவிகளாகும்.

கோதை, மாதவனைச் சேர்ந்து உயர்ந்ததைப் போன்று, உலகமும் நலம் எய்த உலகளந்தானைப் போற்ற வேண்டும். எனவே நம் சித்தமெல்லாம் தித்திக்க வைக்கும் இரு பிரபந்தங்களை அருளிய கோதைப் பிராட்டியை,

''அல்லிநாட் டாமரைமேல் ஆரணங்கின் இன்துணைவி
மல்லிநா டாண்ட மடமயில்—மெல்லியலாள்
ஆயா குலவேந்தன் ஆகத்தாள் தென்புதுவை
வேயர் பயந்த விளக்கு.''

என்று அவரை நம வாழ்வியலின் விளக்காகக் கொண்டும்,

''கோலச் சுரிசங்கை மாயன் செவ்வாயின் குணம்வினவும்
சீலத்தனள் தென்திருமல்லி நாடி செழுங்குழல்மேல்
மாலைத் தொடைதென் அரங்கருக் கீயும் மதிப்புடைய
சோலைக் கிளியவள் தூயநற் பாதம்
துணை நமக்கே!''

என்று அவரை நம் உவப்புடைய வாழ்வுக்குத் துணை யாகக் கொண்டும்,

வாழ்ந்திடுவோம் எஞ்ஞான்றும் மாண்புறவே
கோதையார்
ஆழ்ந்திசைத்த செந்தமிழை அன்றாடம் —
சூழ்ந்திசைப்போம்
சுந்தர மாயவனைச் சொக்கவைத்துப் போற்றுமந்த
மந்திரத்தைச் சொல்வோம் மகிழ்ந்து!

என்று நம் வாழ்நாள் முழுதும் கோதையாரையும் அவர் மந்திர மொழியையும் கூறி, கோவிந்தனைப் போற்றிப் பாடி இசைப் போமாக! இசைபட வாழ்வோமாக!

**நிலைத்து வாழ்வோம்!**

வாழிய கோதைத்தாய் வாழி யவர் வாய்மொழியே!
வாழிய கோவிந்தன் மாணடியே—வாழியே
என்று நிதம்பாடி ஏத்திஇம் மண்ணுலகில்
நின்றுநலம் காண்போம் நிலைத்து!

# கோதைமொழி பாடி உய்வோம்!

1 உலகமெலாம் செழிப்பாக இருப்ப தற்கும்
உண்மையுடன் மனிதகுலம் உய்வ தற்கும்
நலமான அறப்பணிகள் ஆற்று தற்கும்
நாகரிக மேம்பாட்டை அடைவ தற்கும்
நிலைத்தென்றும் மாறாமல் நிற்ப தற்கும்
நிம்மதியாய்க் கண்ணனருள் பெறுவ தற்கும்
விலைமதிக்க ஒண்ணாத திருப்பாவையை
விழைந்தளித்த கோதைத்தாய் வழியில் செல்வோம்!

2 அழிகின்ற பொருள்தேடி அலைந்தி டாமல்
அமைதியின்றி வாழ்நாளைப் போக்கி டாமல்
பழிபாவம் தனையேற்று வாழ்ந்தி டாமல்
பயனில்லாத் தீயவழிச் சென்றி டாமல்
ஒழிவின்றிக் கண்ணபிரான் நெறியில் நின்றே
உளம்உவக்க அறமாற்றிச் சிறப்ப தற்கோ
விழுமனைய கோதைமொழித் தமிழ்ப்பா மாலை
விழைந்துநிதம் பாடியவன் அருள்பெற் றுய்வோம்!

3 அழகுடைய தெய்வமவன் கண்ணன் யார்க்கும்
அருள்சொரிவான் மன்பதையில் வளங்கள் தோன்ற
மழைபொழிவான் நமைவருத்தி வாட்டு கின்ற
வறட்சியினைப் போக்கிடுவான் மாரி யாலே
கழனியெலாம் விளைத்திடுவான் அவனைப் போற்றிக்
கனிவுடனே திருப்பாவை இசைத்த கோதை
வழங்கியநற் பாசுரங்கள் அனைத்தும் பாடி
மாயவனின் பொன்னடியைப் போற்றி வாழ்வோம்!

4 அருட்பாவை எனும்சங்கத் தமிழ்ப்பா மாலை
ஆக்கியவர் கண்ணனுக்கே சூட்டி வித்த
திருமகளாம் கோதைத்தாய் அவனு டைய
திருவுளத்தில் இடம்பெற்றார் அவர்இ சைத்த
திருப்பாவை இவ்வுலகை வாழ வைக்கும்;
தேனமுதம் எனப்புகழும் நாய்ச்சி யார்ஒண்
திருமொழியோ நலமருளும்; எனவே போற்றித்
தினம்கூடி கண்ணனடி பாடி உய்வோம்!

| பக்கம். வரி. | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 37 — 27 | யாப்பருங்காலம் | யாப்பருங்கலம் |
| 43 — 11 | மென்மையுள்ளதை | மென்மையுள்ளத்தை |
| 54 — 7 | உந்தமவன் | உந்துமவன் |
| 57 — 6 | என்னும் தெய்வப்புலவர் | தெய்வப்புலவர் என்னும் |
| 82 — 3 | தவிக்கும் | தவிர்க்கும் |
| 86 — 9 | திருமகள் அப்பிராட்டி | திருமகளாகிய பிராட்டி |
| 91 — 8 | வழங்கியதையைப் | வழங்கியதைப் |
| 96 — 24 | எற்க | ஏற்க |
| 97 — 10 | ஆயக்குலம் | ஆயர்குலம் |
| 112— 19 | பார்த்தவாரே | பார்த்தவாறே |
| 116— 11 | பேய | மேய |
| 127— 15 | உண்ர்ந்து | உணர்ந்து |
| 141— 29 | தைத்தலத்தே | கைத்தலத்தே |
| 146— 8 | ன்று | என்று |



கவிஞர் வி. மு. உலகநாதன்
பிறப்பு : 20-8-1923
பெற்றோர் : மங்கைத்தாய் முனிசாமி
மனைவி : திலகவதி
மக்கள் : கண்ணகி, வாசுகி, பூங்கோதை, தாமோதரன், தாமரைக்கண்ணன்

இயற்றிய நூல்கள் : நெஞ்சின்நிழல், பாவலர் போற்றும் மகாவித்துவான் மே. வீ. வே., பராசக்தி பாமாலை, பன்னிருவர் தந்த பக்திச்சுரங்கம், கண்ணன் எழில்காட்டும் கவிதைப் பொழில், ஆண்டாள் பாவையும் அழகுத் தமிழும் இரண்டு பாகங்கள். பதிப்பித்த நூல்கள் எண்ணிறந்தன. நாள், கிழமை, திங்கள் ஏடுகளிலும், மலர்களிலும் கவிதை, கட்டுரை எழுதி வருபவர்.

தமிழரசுக் கழகத்தின் சார்பில் தமிழ்நாட்டின் எல்லைகள் மீட்க, தமிழாட்சி ஏற்பட, தமிழ்நாடு என்று பெயர் வைக்க, சுயாட்சி மாநிலம் காண நிகழ்ந்த போராட்டங்களில் ஈடுபட்டுச் சிறை சென்றவர். இத்தகைய சிறந்த அருள்உள்ளம் உடையவரைத் தந்தையாராகப் பெற்ற நாங்கள் பெறுவதற்கரிய பேறு பெற்றவர்களாவோம்.

— உ. தாமோதரன்

Sri Gomathi Graphic
Madras-5 Ph. 844554